# கல்கி

3.11.96 KALKI



"இன்னும் மூன்றே மாதத்தில் பொதுத் தேர்தல்!"

## தீபாவளி சிறப்பிதழ்



மேயர் ஸ்டாலினுடன் ஒரு விசிட்!

# இன்னும் மூன்றே மாதத்தில் பொதுத் தேர்தல் வரும்!

**தமிழ்நாடு காங்கிரஸ் தலைவர் குமரி அனந்தனைச் சந்தித்து, அவர் மீது கூறப்படுகிற குற்றச்சாட்டுகள் பற்றிக் கேட்டபோது....**

“உள்ளாட்சி மன்றத் தேர்தலில் ஏற்பட்ட படுதோல்விக்குப் பிறகு, நீங்கள் தமிழ்நாடு காங்கிரஸ் தலைவர் பதவியிலிருந்து ராஜினாமா செய்ய வேண்டுமென்று அன்பரசு போன்றவர்கள் கூறுகிறார்களே?”

“தோல்விக்கு எனது செயல்பாடுகள் காரணமாகிற போது அல்லது என் கணிப்பு தவறாகித் தோல்வி ஏற்படுகிறது என்றால் நான் ராஜினாமா செய்யலாம். ஆனால் சென்ற பொதுத் தேர்தலில் கட்சித் தலைமையிடம் எனது ஆலோசனைகளுக்கு எதிராகக் கூட்டு வைத்துக் கொள்ள வேண்டுமென்று வற்புறுத்தித் தோல்வியடைய வைத்தவர்கள் இவர்கள். அந்தப் படுதோல்வியின் அதிர்ச்சியிலிருந்து மீளாத நிலையில் உள்ளாட்சித் தேர்தல் வருகிறது. ஏற்கெனவே ஏற்பட்ட தோல்வியால் துவண்டு போய்க் கிடக்கும் தொண்டர்கள் இந்தத் தேர்தலில் போட்டியிடவே தயக்கம் காட்டிய நிலையில்தான் போட்டியிட்டோம். கை சின்னத்தில் நிற்பதற்கு ஆள் இல்லையே என்று யாரும் கூறிவிடக் கூடாது என்பதற்காகவே தோல்விதான் என்று தெரிந்த பிறகும் போட்டியிட்டார்கள் கட்சிக்காரர்கள். செலவழிப்பதற்குப் பணம் கூட இல்லாத சூழ்நிலையில்தான் நாங்கள் போட்டியிட்டோம். இந்தச் சூழ்நிலையில் நான் எதற்காக ராஜினாமா செய்ய வேண்டும்? அதோடு நான் வெறும் நியமனத் தலைவர்தான். எனவே, என் செயல்பாடுகளில் குறையிருந்தால் டெல்லி மேலிடத்தில் கூறி எனது தலைமையை மாற்றுவதுதான் நாகரிகம். அதை விடுத்து, இப்படி பகிரங்கமாக அறிக்கைகள் விடுவது அநாகரிகம்.”

“உள்ளாட்சித் தேர்தலுக்காக டெல்லி மேலிடம் கொடுத்த பணத்தை நீங்கள் கட்சிக்காரர்களுக்குப் பட்டுவாடா செய்யவில்லை என்கிறார்களே?”

“பண விஷயத்தில் இப்படி என் மீது பொய்யான



குற்றச்சாட்டுகளைக் கூறுவது மகாபாவம். மரகதம் சந்திரசேகர், திண்டிவனம் ராமமூர்த்தி, முன்னாள் எம்.பி. கிருஷ்ணசாமி ஆகியோரும் என்னோடுதான் டெல்லிக்கு வந்திருந்தார்கள். உள்ளாட்சித் தேர்தலுக்காக மத்திய தலைமை ஐந்து லட்சம் ரூபாய்தான் கொடுத்தது என்று கிருஷ்ணசாமி அவர்களே கூறியிருக்கிறார். அப்படியிருக்கும் போது எப்படி இந்தக் குற்றச்சாட்டைக் கூறுகிறார்கள் என்றே புரியவில்லை. அதோடு, தேர்தலுக்காக நான் சுற்றுப் பயணம் செய்த போது எழுபது லட்ச ரூபாய் வசூலித்ததாகவும் ஓர் அபாண்டமான குற்றச்சாட்டு என் மீது. உண்மையைச் சொன்னால், இந்தத் தேர்தலுக்காக நான் எனது கைக்காசைத்தான் செலவழித்திருக்கிறேன். கூடவே, என் தம்பி போன்ற உறவினர்களிடமிருந்து கடன் வாங்கியும் செலவழித்திருக்கிறேன்."

"கட்சியிலிருந்து மக்களுக்கு வழங்கப்படும் மரம், செடிகள் போன்றவற்றின் விதைகள் எரிந்து சாம்பலாகிப் போனதென்று சொல்லியும் நீங்கள் மேலிடத்தில் பணம் வாங்கியதாகவும் குற்றச்சாட்டு...."

"இதுவும் அபாண்டமான குற்றச்சாட்டுதான். நான் அன்பரசுவை ஒன்று கேட்கிறேன்... தமிழ்நாடு காங்கிரஸ் தலைமைப் பொறுப்பை ஏற்றவுடனேயே எனது சொத்துக் கணக்குகளைக் காட்டினேனே... இவர்களெல்லாம் ஏன் காட்டவில்லை? டெலிபோன் இணைப்பு, காஸ் சிலிண்டர்கள் இணைப்பு போன்றவற்றையெல்லாம் இவர் முறைகேடாகப் பயன்படுத்தவில்லை என்று கூற முடியுமா? எம்.பி. ஆவதற்கு முன்பு சொத்து மதிப்பு எவ்வளவு இருந்தது? இப்போது எவ்வளவு இருக்கிறது என்று காட்டுவாரா அன்பரசு?"

"சென்ற பொதுத் தேர்தலின் போது போட்டியிடுவதற்காக விண்ணப்பம் செய்தவர்களிடம் வாங்கிய டெபாசிட் பணத்தை இன்னும் நீங்கள் திருப்பித் தரவில்லை என்கிறார்களே?"

"சம்பந்தப்பட்டவர்கள் தினந்தோறும் வந்து வாங்கிச் சென்று கொண்டிருக்கிறார்கள் என்பதுதான் உண்மை."

"இந்தச் சூழ்நிலையில் -- உங்கள் மீது இப்படியெல்லாம் பொய்யான குற்றச்சாடுகளைக் கூறுகிறார்களே என்கிற மனவருத்தத்தில் தலைவர் பொறுப்பை ராஜினாமா செய்ய வேண்டும் என்கிற எண்ணம் உங்களுக்கு வரவில்லையா?"

"அவர்கள் இதை எதிர்பார்த்துத்தான் காரியங்களைச் செய்து கொண்டிருக்கிறார்கள். அதற்கு நான் ஒருபோதும் இடம் கொடுக்க மாட்டேன். மாறாக, மறுபடியும் நான் தொண்டர் தரிசனத்துக்காகச் சுற்றுப் பயணம் மேற்கொள்ளப் போகிறேன். ஏனெனில், இப்போது காங்கிரஸில் இருப்பவர்கள் உள்ளேயே இருப்பார்கள் என்றும் சொல்ல முடியாது; வெளியே சிதறிக்கிடப்பவர்கள் அப்படியே சிதறிக்கிடப்பார்கள் என்றும் சொல்ல முடியாது. காரணம், இன்னும் மூன்று மாத காலத்துக்குள் மத்திய ஆட்சி காங்கிரஸின் கைக்கு வரும். அல்லது பொதுத் தேர்தல் வரும் என்கிற உறுதியான சூழ்நிலைதான் இருக்கிறது."

"எப்படி இத்தனை உறுதியாகச் சொல்லுகிறீர்கள்?"

"நான் டெல்லியில் பலரையும் சந்தித்துப் பேசியபோது கிடைத்த விஷயங்களை வைத்துத்தான் சொல்லுகிறேன்!"

சந்திப்பு : **பிரின்ஸ்**

வண்ணப்படம் : **பேஜர் கே. மூர்த்தி**

---

**சர்வதேச கிரிக்கெட் போட்டிகளில் பங்கேற்பவர் டேவிட் செப்பேர்டு. கனமான உடம்போடு வரும் இந்த இங்கிலாந்து நாட்டு நடுவரின் ஸ்டைல் படு பிரமாதம். காற்றில் கையெழுத்துப் போட்டு நான்கு ரன் காட்டுவதும், ஆறு ரன் காட்டுகையில் கொஞ்சம் கொஞ்சமாய் இரு கைகளையும் உயர்த்துவதும் இவரது தனித்தன்மைகள். இன்னொரு சுவாரஸ்யம் என்னவென்றால், யாராவது ஒரு பேட்ஸ்மேன் சரியாய் 111 ரன் அடித்து விட்டால் நம்மாள் ஒற்றைக் காலில் நின்று காட்டுவார். எத்தனை நேரம் தெரியுமா? அந்த் பேட்ஸ்மேன் 112 எடுக்கும் வரை. அப்போது மைதானமே குஷியில் ஆர்ப்பரிக்கும். இதை சோதிக்கவே சில பேட்ஸ்மேன்கள் 111 ரன்னில் ரொம்ப நேரம் 'கட்டை' போட்டு ஆடுவது உண்டு!**



**How is that?**

— அரிச்சந்திரன்

**நேர்மை, துணிவு, எளிமை போன்ற நற்பண்புகளின் உறைவிடமாகத் திகழும் நீதிபதி எம். சீனிவாசன் சமீபத்தில் சென்னையிலிருந்து, ஹிமாசலப் பிரதேச உயர்நீதி மன்றத்தின் தலைமை நீதிபதியாக நியமிக்கப்பட்டது தெரியும். ஆயுத பூஜையின் போது ஒரு வாரம் சென்னை வந்திருந்தார்.**

**"சிம்லா வாழ்க்கை எப்படி இருக்கிறது?"**

"ஆகஸ்டு 12-ம் தேதி பொறுப்பேற்றேன். உடனே சென்னைக்கு வந்து சில நாட்கள் கழித்துப் போனேன். ஆகஸ்டு 31-ம் தேதியிலிருந்துதான் என் சிம்லா வாழ்க்கை தொடங்கியிருக்கிறது. குளிர் ரொம்ப ஜாஸ்தி. நவம்பரில் தான் ஐஸ் விழும் என்கிறார்கள். போய்த்தான் பார்க்க வேண்டும்."

**"தலைமை நீதிபதியாகப் பதவியேற்ற நாளைப் பற்றி...."**

"பெரிய மனிதர்கள் எல்லோரும் வந்திருந்தார்கள். கவர்னர் மஹாவீர் பிரசாத் பதவிப் பிரமாணம் செய்து வைத்தார். கையெழுத்துப் போட்டேன். முதலமைச்சர் வீரபத்ரசிங், மற்றும் அமைச்சர்கள், என் மனைவி, குடும்பத்தினர் கலந்து கொண்டார்கள். மற்றபடி இந்த வைபவம் பெரிதாக என் தலைக்குள் ஏறிவிடவில்லை."

**"எங்கே தங்கியிருக்கிறீர்கள்?"**

"பெரிய வீடு கொடுத்திருக்கிறார்கள். 'ஆர்ம்ஸ்டெல்' என்று அந்த வீட்டுக்குப் பெயர். அதன் பக்கத்தில் இருக்கும் பங்களாவில்தான் அப்போதெல்லாம் வைஸ்ராய் தங்கியிருப்பாராம். இந்த ஆர்ம்ஸ்டெல் பங்களாவில் வைஸ்ராயின் செயலாளர் தங்குவாராம். விடுதலைக்குப் பின் கோடை காலத்தில் பண்டிட் நேரு சிம்லா வரும்போது இங்கேதான் தங்கியிருப்பாராம். 1971 லிருந்து இதை தலைமை நீதிபதியின் வீடாக மாற்றி விட்டார்கள். இப்போது நான்."

**"உங்களது பூஜை, புனஸ்காரத்துக்கெல்லாம் வசதி இருக்கிறதா?"**

"மாடியில் படுக்கை அறை. கீழே நுழைந்ததும் மரப்படி. பக்கத்தில் டிராயிங், டைனிங் ரூம். கிச்சன், வராண்டா, வாஷ் ஏரியா இப்படி அமைந்திருக்கிறது. எனக்கு, பூஜைக்கு விசால மான இடம் வேண்டும். என்ன செய்வது என்று யோசனை செய்தபோது அங்கே எனக்கு

# சிம்லா போனாலும் நான் அதே சீனிவாசன்தான்!



• ஹிமாசல பிரதேச முதல்வர் மற்றும் கவர்னருடன்......



* மனைவியுடன்......

அமர்த்தப்பட்ட பணியாட்களில் ஒருவர் தந்த ஐடியாவின் படி கிச்சனை பூஜையறையாக 'கன்வெர்ட்' பண்ணிவிட்டு, வாஷ் ஏரியாவில் கிச்சனை மாற்றிக் கொண்டேன். எங்கள் இரண்டு பேருக்கு (நான் + என் மனைவி) பெரிய வீடுதான்!"

**"சென்னையில் நீங்கள் செய்து வந்த தினசரி காரியங்களையெல்லாம் நேரம் தவறாமல் அங்கேயும் கடைப் பிடிக்கிறீர்களா?"**



"நிச்சயமாய். காலையில் மூன்றரை மணிக்கு எழுந்திருப்பது -- ஐந்து வரை படிப்பது -- பிறகு காலைக் கடன்கள். முக்கால் மணி நேரம் பகவான் ஸ்தோத்திரம் சொல்லிக் கொண்டே வாக்கிங், வீட்டு மாடியிலேயே -- ஆறேகாலுக்கு ஆபீஸ் ரூம் -- ஏழரை வரை பேப்பர் -- ஒன்பது வரை பூஜை -- ஒன்பதரைக்குச் சாப்பாடு, 10 மணிக்கு ஆபீஸ் என்றால் 9.59க்கே என் இருக்கையில் ஆஜர். இது சென்னையில் என் டெய்லி ரொட்டீன். சிம்லாவிலும் இது தொடர்கிறது. ஒரே ஒரு காம்ப்ரமைஸ். குளிரால் மூன்றரைக்கு எழுந்திருக்க முடிவதில்லை. கொஞ்சம் லேட்டாகிறது. மற்றபடி வேறு எதிலும் நோ காம்ப்ரமைஸ். வாக்கிங்கை மாடியில் வராண்டாவிலேயே முடித்துக் கொள்கிறேன்."

**"உங்கள் டர்பன், கோட், பஞ்சகச்சம் -- இந்த உடை வழக்கம் ஹிமாசலப் பிரதேச அதிகார வட்டாரத்தில் ஏதேனும் விமர்சனத்தை ஏற்படுத்தியதா? ஊருக்கு ஏற்றபடி உடையை மாற்றிக் கொள்வீர்களா?"**

"பின்னால் என்ன பேசுகிறார்களோ தெரியாது. முகத்துக்கு முன்னால் எந்த கமெண்ட்டும் இல்லை. முதல் நாளே பதவியேற்கும் போதும் அதற்குப் பிறகும் 'நீங்கள் சர்வபள்ளி ராதாகிருஷ்ணனை நினைவு படுத்துகிறீர்கள்' என்று சிலர் என்னிடம் குறிப்பிட்டார்கள். என் உத்தியோகத்துக்கு இப்படி உடை அணிவது எனக்குப் பழகிப் போன ஒன்று. இதை நான் ஏன் மாற்றிக் கொள்ள வேண்டும்? இதோ நான் இப்போது உங்களிடம் பேசிக் கொண்டிருக்கும் போது சட்டை போடாமல் வெறும் உடம்போடு ஒரு துண்டை பேருக்கு போர்த்திக் கொண்டிருக்கிறேன். ஒரு சீஃப் ஜஸ்டிஸ் இப்படி இருக்கலாமா என்றால் எனக்குப் பதில் சொல்லத் தெரியாது. ஆனால் நான் எப்பவும் வீட்டில் இப்படித்தான் இருப்பேன். அது என் நேச்சர். அவ்வளவுதான்."

**"குறிப்பிடும்படியான தீர்ப்பு ஏதேனும் வழங்கினீர்களா?"**

"அரசுப் பணியாளர்கள் தங்கள் புகார்களைத் தெரிவிக்க நிர்வாக ட்ரிப்யூனல் ஒன்று



''யோவ்... பசங்ககிட்ட சொல்லிவை. குடிசைங்க இந்த ஏரியாவுல அதிகமா இருக்கு. கண்ட இடத்துல பட்டாசு வெடிக்க வேணா முன்னு!''

— எஸ்.எஸ். பூங்கதிர்



'சார்... மணி பன்னிரண்டு... கடையைச் சாத்தலாமா?''

''சரி... சரி... எதுக்கும் குவிஞ்சு கிடக்கிற புடவைக் குவியலுக்குள்ள லேடீஸ் யாராவது மாட்டிக்கிட்டிருக்காங்களான்னு ஒரு தரம் நல்லாப் பார்த்திரு!''

— ஜெ. கீதா

''என்னய்யா டைட்டில் இது? 'நான் நானே யில்லை'ன்னா என்ன அர்த்தம்?''

''இது ஹீரோயின் சப்ஜக்ட் சார்! கிளை மேக்ஸ்ல ஹீரோயின் இப்படிச் சொல்றா: 'நான் நானேயில்லை. நான் செஞ்சதெல்லாம் எனக்குத் தெரியாது. எனக்குத் தெரிஞ்ச எதையும் நான் செய்யலே. எனக்குத் தெரிஞ்சதும் எனக்குப் புரிஞ் சதும் யாருக்கும் தெரியாதுன்னு நான் நெனைச்சது தப்புத்தான். ஆகவே என்னை மன்னிச்க ஏத்துக் கங்க'ன்னு ஹீரோ கிட்டே பேசற மாதிரி முடிச் சிருக்கேன்!''

— ஜமாலியா



இருக்கிறது. ஒருவர் தமக்கு எல்லாத் தகுதி களும் இருந்தும் அரசுப் பணிக்கு தம்மைத் தேர்ந்தெடுக்கவில்லை என்று ட்ரிப்யூனலுக்கு அப்பீல் செய்திருந்தார். ஹிமாசலப் பிரதேசத் தில் ஒரு விதி உண்டு. அரசுப் பணியாளர் கள்தான் ட்ரிப்யூனலுக்கு வர முடியுமே தவிர, 'அரசுப் பணியில் சேர்வதற்கு முன்னால் ஏதே னும் புகார் என்றால் அவர் உயர்நீதிமன்றத் துக்குதான் போக வேண்டும். நான் ஐந்து நீதிபதிகள் அடங்கிய ஒரு 'பெஞ்ச்' நியமித்து, இந்த விதியின் எல்லா அம்சங்களையும் ஆராய்ந்து, இதுவரை இருந்த வழியை மாற்றி, 'அரசுப் பணிக்கு வருவதற்கு முன்பும் ட்ரிப்யூ னலுக்கு வரலாம்' என்று தீர்ப்பளித்தேன். இது பரவலாகப் பேசப்பட்ட தீர்ப்பாக அமைந்தது. செய்தித்தாள்கள் பெரிய அளவில் இதை, 'கவர்' செய்தன. இதே போல் ஹைகோர்ட்டுக்கு வரத் தேவையில்லாத ஆனால் அங்கே வந்து தேங்கி யிருந்த 230 கேஸ்களைச் சேகரித்து ஓரே மணி நேரத்தில் டிஸ்போஸ் செய்தேன்.''

**''நீதித்துறையில் அம் மாநில அரசியல் வாதிகளின் தலையீடு, அழுத்தம் ஏதேனும் இருக்கிறதா?''**

''அந்த அனுபவம் எனக்கு இதுவரை எங்கேயும் இல்லை. இப்போது அங்கேயும் இல்லை!''

**''சிம்லாவில் வேறு யாரேனும் தமிழர்கள் இருக்கிறார்களா?''**

''இதுவரை என்னையும் சேர்த்து நான்கே குடும்பங்கள்தான். ரகுநாதன் என்று ஒருவர் பதினேழு ஆண்டுகளாய் இருக்கிறாராம். பிரி கேடியர் ராமகிருஷ்ணன் என ஒருவர். மதி வாணன் டெபுடி அக்கௌன்டன்ட் ஜெனரல். போனில் பேசிக் கொள்வோம். நேரிலும் வந்து சந்திப்பார்கள். வேறு யாரேனும் இருக்கிறார் களா என்பதை இனிமேல்தான் தேடிக் கண்டு பிடிக்க வேண்டும்.''

**''தலைமை நீதிபதிக்கு அங்குள்ள மக்க ளிடத்தில் மரியாதை இருக்கிறதா? உங்களை அடையாளம் கண்டு கொள்கிறார்களா?''**

''நான் போகும் இடங்களில் என்னைப் பார்த்ததும் கும்பிடு போடுகிறார்கள். அது நான் அவர்கள் மாநில சீஃப் ஜஸ்டிஸ் என்று தெரிந்து போடும் கும்பிடா அல்லது யாரோ பாவம் டர்பனெல்லாம் கட்டிக் கொண்டு பக்தி மான் போல தெரிகிறானே எதற்கும் ஒரு கும் பிடு போட்டு வைப்போம் என்று போடும் கும் பிடா என்று தெரியவில்லை. அதைப்பற்றி நான் கவலைப்படுவதுமில்லை.''

பேட்டி : **ராணிமைந்தன்**




# ஸ்ரீராம் டிரஸ்ட்

நிர்வாக அலுவலகம்: 145, லிங்கி செட்டித் தெரு
தபால் பெட்டி எண்: 5043, சென்னை 600 001.

போன்: 5228545/510535
பேக்ஸ்: 044–4990081



**பொருள்:- ரூ.10,000/– நாலரை ஆண்டுகளில் ரூ.20,000/– ஆக இரட்டிப்பாகிறது.**



எங்கள் இனிய நண்பர்களுக்கு,

வணக்கம்! இனிய நல்வாழ்த்துக்கள்.

கடந்த 49 ஆண்டுகளாக வெளிவரும் உங்கள் அபிமான இலக்கிய மாத இதழ் 'அமுதசுரபி'. குடும்பத்தினர் விரும்பிப் படிக்கும் பத்திரிக்கை. ஸ்ரீராம் நிறுவனங்களின் ஒரு அங்கமாக இது வெளிவருகிறது.




தற்போது உங்களுக்கு ஒரு புதிய திட்டத்தை அறிமுகப்படுத்த விரும்புகிறோம். அதாவது எங்கள் ஸ்ரீராம் டிரஸ்டில் நீங்கள் ரூ.10,000/– முதலீடு செய்தால் அந்தத் தொகை 4 1/2 ஆண்டுகளில் (54 மாதங்களில்)ரூ.20,000/– மாக இரட்டிப்பாகும். அதோடு அந்த 54 மாதங்களுக்கு 'அமுதசுரபி' மாத இதழ்களும், ஆண்டுதோறும் வெளிவரும் தீபாவளி மலர்களும் அன்பளிப்பாக அனுப்பி வைக்கப்படும்.

**மேலும் இரு பரிசுகள்:** உங்களுக்கு 10 கிராம் 'ஸ்ரீராமர் பட்டாபிஷேகம்' வெள்ளிப் பதக்கமும் தவிர, 'திரு. கோபுலு' வரைந்த பல வண்ண ஸ்ரீராமர் பட்டாபிஷேக (தினசரி) காலண்டரையும் பரிசாக அளிக்கிறோம்.

இந்த இனிய திட்டத்தை உங்கள் குடும்பத்தினர் நிச்சயம் வரவேற்று ஸ்ரீராம் நிறுவனங்களின் இலக்கியப் பணிக்கு தங்களது பரிபூர்ண ஆதரவை மேன்மேலும் நல்கி வளர்க்க வேண்டுகிறோம்.

**பின்குறிப்பு :** உங்கள் காசோலையை 'ஸ்ரீராம் டிரஸ்ட்', சென்னை–1. என்று எழுதி மேலே கண்டுள்ள முகவரிக்கு அனுப்பவும்.

உங்கள் முதலீடான ரூ.10,000/– 4 1/2 ஆண்டுகளில் ரூ.20,000/– மாக வளர்கிறது. எனவே ஸ்ரீராம் சேமிப்பில் சேருங்கள். சீரும் சிறப்புமாய் வாழுங்கள்.

உங்கள் அன்பான ஆதரவை வேண்டும்.

AVSRaja

**ஏவி.எஸ். ராஜா**
நிர்வாக டிரஸ்டி & வெளியீட்டாளர்.



**அணிலின் உதவி ஸ்ரீராமனுக்கு அன்று**
**இலக்கிய அணிலாக 'ஸ்ரீராம்' இன்று**

# மேயர் ஸ்டாலினுடன் ஒரு விசிட்!

"களத்தில் கல்கி'க்காக நகரின் சில பகுதிகளுக்குத் திடீர் விசிட் செய்து பார்க்கலாமா?" -- மேயராக வெற்றி பெற்ற ஸ்டாலினிடம் தொலைபேசியில் கேட்டபோது, "தாராள மாகப் போகலாம். ஆனால் நான் இன்னும் மேயராகப் பதவி ஏற்காததால் நகரின் எல்லாப் பகுதிகளுக்கும் போய்ப் பார்ப்பது சரியாக இருக்காது. என் தொகுதியான ஆயிரம் விளக்கு பகுதிக்குள் எங்கு வேண்டுமானாலும் போக லாம் வாருங்கள்!" என்றார்.

மறுநாள் காலையில் எல்டாம்ஸ் ரோடு அருகேயுள்ள குடிசைப் பகுதிக்குச் சென்றோம். "89-ல் நான் எம்.எல்.ஏ.வான போது இங்கே குடிநீர் வசதி, சாலை வசதியெல்லாம் செய்து கொடுத்தேன்...." என்று ஸ்டாலின் சொல்லிக் கொண்டிருந்தபோதே குறிப்பிட்ட அந்தப் பகுதிக்கு வந்து சேர்ந்தோம்.

மழைக்காலமாதலால் ஒரே சேறும் சகதியும். அது பற்றியெல்லாம் கவலைப்படாமல் சுற்றிப் பார்த்தார் ஸ்டாலின். அங்குள்ள மக்களின் ஒரே கோரிக்கை, "எங்களுக்குக் குடிசை மாற்றுவாரியத்தின் மூலமாக வீடுகள் கட்டித் தர வேண்டும்!" என்பதாகத்தான் இருந்தது. ஆவன செய்வதாகச் சொல்லிப் புறப்பட்டார் ஸ்டாலின்.

அடுத்து வள்ளுவர் கோட்டம் அருகிலுள்ள வள்ளுவர் குப்பத்துக்குப் புறப்பட் டோம்.

"தி.நகரிலுள்ள ஒரு நண்பர் ஆயுத பூஜைக் காக என்னை அழைத்திருக்கிறார். நான் சென் றால் மிகவும் சந்தோஷப்படுவார். அதனால் ஓர் இரண்டு நிமிடம் அங்கே எட்டிப் பார்த்து விட்டுச் செல்லலாமே!" என்றார் ஸ்டாலின்.

அதன்படியே ஓர் இரண்டு நிமிடம் எட்டிப் பார்த்துவிட்டுப் போனோம். ஸ்டாலினுடைய வாகன இருக்கைக்குப் பக்கத்தில் சி. சுப்ர மணியம் எழுதிய 'என் வாழ்க்கை நினை

"மக்களுக்கு நல்லது செய்வதற்காக என் செல்வாக்கைப் பயன்படுத்துவதில் தவறே இல்லை!"



• சுதந்திரா நகரில்....

வுகள்' புத்தகம்.

"நீங்கள் சி. எஸ்ஸைப் பார்த்த போது கொடுத்தாரா? இன்னும் வேறு ஆலோசனைகள் ஏதும் சொன்னாரா?"

"ஆமாம். பலதுறையிலுள்ளவர்களையும் பிரதிநிதிகளாகக் கொண்ட கமிட்டி ஒன்றை அமைத்து, அதன் ஆலோசனைகளையும் கேட்டுச் செயல்படச் சொன்னார். நல்ல ஆலோசனை!"

"வெற்றி பெற்ற பிறகு கே.ஏ.கே. வையும் பார்த்தீர்களே, அவர் என்ன சொன்னார்?"

"ஆயிரம் விளக்கு தொகுதியின் பிரச்னைகள் பற்றி அவருக்கும் மிக நன்றாகத் தெரியுமே. அதனால் வாழ்த்துக்களோடு தொகுதிக்குச் செய்ய வேண்டிய பணிகள் பற்றிய ஒரு பட்டியலையும் கொடுத்தார்!"

"நகரத் தந்தை வாழ்க!" -- ஆமாம், வள்ளுவர் குப்பம் வந்து விட்டது!

இறங்கினோம். பலரும் கடந்த மழையினால் தங்கள் வீட்டுக்குள்ளும் தண்ணீர் தேங்கி நிற்கிற நிலைதான் என்று அழைத்து சென்று காட்டினார்கள். சுமார் முந்நூறு குடிசைகள், பொறுமையாகச் சுற்றிப் பார்த்தார் ஸ்டாலின்.

அங்கிருந்து கிரீம்ஸ் ரோட்டிலுள்ள சுதந்தரா நகருக்குப் புறப்பட்டோம். சுமார் 64 கிரவுண்ட் பரப்பில் குடிசைகள். அங்கும் சேறும், சகதியும் தான்.

"இந்த 64 கிரவுண்டையும் சென்ற ஆட்சியில் சசிகலா வாங்குவதற்குத் திட்டமிட்டிருந்தார். நல்லவேளையாக எதுவும் நடக்கவில்லை!" என்றார் ஸ்டாலின்.

அதற்குள் ஒரு பெண்மணி தனது குழந்தைக்குப் பெயர் வைக்க வேண்டுமென்று கூற, "தேன்மொழி" என்று பெயரிட்டார்.

பிரேமா என்ற இன்னொரு பெண்மணி, "இந்தக் குடிசைப் பகுதிக்குள் இருக்கிற எல்லாப் பகுதிக்கும் எல்லா வசதியும் செய்து கொடுக்கிறீர்கள். ஆனால் நாங்கள் குடியிருக்கும் பகுதிக்கு மட்டும் எதுவும் செய்ய மாட்

• முறையிடும் மக்கள்......



டேன் என்கிறீர்களே?" என்று கேட்க --

"அம்மா, நீங்கள் குடிசை போட்டிருக்கிற பகுதி தனியார்களுக்குச் சொந்தமாக இருக்கிற இடம். அதனால்தான் அரசு எதையும் செய்ய முடியவில்லை. முதலில் அந்த இடத்தைத் தனியாரிடமிருந்து வாங்கி உங்களுக்கே சொந்தமாக்குகிற முயற்சியில் ஈடுபட்டிருக்கி றோம்! அதன் பிறகுதான் மற்ற வசதிகளைச் செய்துதர முடியும்!" என்று அவருக்குப் பொறு மையாகப் பதில் சொன்னார் ஸ்டாலின்.

திரும்பவும் வீட்டுக்கு வருகிற வழியில் ஒரு பிளாட்பாரவாசி, "சார் ஒரு துண்டு குடுங்க..." என்றபோது, தம்மிடமிருந்த துண்டை எடுத்துக் கொடுத்து விட்டார் ஸ்டாலின்.

"இந்தக் கட்டுரை வெளியாகிற நேரத்தில் நீங்கள் மேயராகப் பதவியேற்று இருப்பீர்கள். நாம் இப்போது விசிட் செய்த குடிசைப் பகுதிகளில்தான் பிரச்னை என்பதில்லை. மழைக் காலம் என்றாலே சென்னை நகரம் முழுவதுமே அங்காங்கே தண்ணீர் தேங்கி நிற்பதுதான் மிகப் பெரிய பிரச்னையாக இருக்கிறது. அதையெல்லாம் சரி செய்கிற பொறுப்பு மேயருக்கு இருக்கிறது..."

"ஆமாம். என்னைப் பொறுத்தவரை 'எழில் மிகு சென்னை - 2000' என்பது, முதலில் அடிப்படை வசதிகளில் நகரம் முழுமை பெறுவது தான். அதாவது அடிப்படை வசதிகள்தான் முதலில். அடுத்தபடிதான் அழகு என்பதில் மிகவும் தெளிவாகவே இருக்கிறேன். இந்த அடிப்படை வசதிகளைப் பெருக்குவதற்கு முதலில் நிதி ஆதாரங்களைப் பெருக்க வேண்டும்.... இப்படி ஏகப்பட்ட பணிகள் காத்திருக்கின்றன."

"வெறும் எம்.எல்.ஏ.வாக மட்டும் இருந்த போது, உங்கள் தொகுதி மக்களிடம் நேரடியான தொடர்பு வைத்திருந்தீர்கள். இனி மேயர் என்கிற முறையில் சென்னை நகர மக்கள் அனைவரோடும் நேரடித் தொடர்பு வைத்துக் கொள்வது சாத்தியம்தானா?"

"மாநகராட்சிக்குக் கவுன்சிலர்கள் வந்து விட்டதால் இனி எம்.எல்.ஏ.க்களின் பணி குறைவாகி விடும். பிரச்னைகளை கவுன்சிலர்களே கவனத்துக்குக் கொண்டு வந்து விடுவார்கள். என்றாலும் முன்பு போல் மேயரை கவுன்சிலர்கள் தேர்ந்தெடுக்கவில்லை. மக்களே நேரடியாகத் தேர்ந்தெடுத்திருக்கிறார்கள். எனவே, நானும் மக்களை நேரடியாகச் சந்திப்பதுதான் முறையாக இருக்கும். எனவேதான் இனி காலை ஏழு மணியிலிருந்து பத்து மணி வரை அட்டவணை போட்டுக் கொண்டு நகரின் பல்வேறு பகுதிகளுக்கும் சென்று மக்களைச் சந்தித்து பிரச்னைகளைக் கேட்கப் போகிறேன். அப்போது அதிகாரிகளையும் உடன் அழைத்துச் செல்கிற போது, பிரச்னைகளை அவர்களும் நேரடியாகப் புரிந்து கொண்டு, விரைவான நடவடிக்கைகள் எடுக்க முடியும்!"

"மேயர் தேர்தலில் போட்டியிட்ட எஸ்.எஸ். சந்திரன் 'கார்ப்பரேஷன் பள்ளியை கான்வென்ட் ஆகுவேன்!' என்றார். நீங்கள் என்ன செய்யப் போகிறீர்கள்?"

"பெரும்பாலான பெற்றோர்கள், மாநகராட்சிப் பள்ளிகளில் தரமில்லாததால்தான் தனியார் பள்ளிகளைத் தேடி ஓடுகிறார்கள் என்பது உண்மைதான். ஆனால் மாநகராட்சிப் பள்ளிகளிலும் சிறப்பான சில பள்ளிகள் இருக்கத்தான் செய்கின்றன. அவை போல மற்ற பள்ளிகளும் செயல்பட வேண்டும் என்பதில் மிகுந்த கவனம் செலுத்துவேன். முதலில் பள்ளிகளுக்குத் தேவையான உபகரணங்கள் போன்ற அடிப்படை வசதிகளை மேம்படுத்த வேண்டும். அதைச் செய்தாலே தரமும் தானாகவே உயரும். இது போலவே மாநகராட்சி மருத்துவமனைகள்... அவையும் சிறப்பான முறையில் செயல்படுகிற போது, மக்கள் தனியார் மருத்துவமனைகளையும் டாக்டர்களையும் தேடி ஓடுகிற நிலை வெகுவாகக் குறையும். அதனால் மருத்துவச் செலவுக்காக நடுத்தர மக்கள் செலவழிக்க வேண்டிய தொகை மிகவும் குறைந்து, அந்தத் தொகையை அவர்கள் மற்ற குடும்பச் செலவுகளுக்கு உபயோகப்படுத்த முடியும். இதையெல்லாம் உணர்ந்துதான் செயல்படப் போகிறேன். இன்னும் சொல்லப் போனால், மக்களுக்கு நன்மை செய்வதற்காக எனது செல்வாக்கைப் பயன்படுத்துவதிலும் தவறில்லை என்று கருதுகிறேன்!"

"முதல்வர் மகன் என்கிற செல்வாக்கை..."

"ஆமாம். அந்தச் செல்வாக்கைச் சொந்த நலன்களுக்குத்தான் பயன்படுத்துக் கூடாதே தவிர, மக்களுக்கு நல்லது செய்யப் பயன்படுத்துவதில் தவறே இல்லை!" என்று சொல்லும் ஸ்டாலினுடன் நாம் வெளியே சென்ற சமயத்தில், ஸ்டாலினைப் பார்த்துக் கையசைக்காதவர்களே இல்லை என்று சொல்லலாம். இப்படியொரு நட்சத்திர அந்தஸ்து எல்லோருக்குமே கிடைத்து விடாது. இந்த நட்சத்திர அந்தஸ்து தொடர்ந்து நிலைப்பதும் மேலும் பெருகுவதும் மேயரான ஸ்டாலின் என்ன செய்யப் போகிறார், எப்படிச் செயல்படுகிறார் என்பதைப் பொறுத்தே இருக்கிறது.

**— இளங்கோவன், ஸ்ரீநிவாசன்**

வண்ணப்படங்கள் : **பேஜர் கே. மூர்த்தி**

**வளமான பின்புலத்தோடு பிறந்து வளர்ந்த கமலா, பொறுப்புகளை ஏற்ற பருவத்தில் சந்தித்தவை எல்லாம் சோதனை, சோதனை, சோதனைதான்! 'எப்படிச் சமாளித்தார்...?' என்று கேட்க முடியாது... 'எப்படி சமாளித்துக் கொண்டிருக்கிறார்?' என்றுதான் கேட்க வேண்டும். பிரச்னைகள் தொடர்கின்றன. ஆனால் அவர் புன்னகை மாறவில்லை!**

எழுபதுகளில் செல்வாக்கோடு இருந்த மெல்லிசைக்குழு 'காமேஷ் – ராஜாமணி'. இது தான் சிங்கப்பூர், மலேசியாவில் சுற்றுப்பயணம் செய்த முதல் இசைக்குழு. அங்கு தயாரிக்கப்பட்ட 'துன்பங்கள் உறங்குவதில்லை' என்ற திரைப்படத்துக்குக் கூட இசையமைத்தவர் காமேஷ்.

கமலா காமேஷ் அந்தக் குழுவின் நிர்வாகப் பொறுப்பைக் கவனித்தார். பின்னால் குழுவில் மேடையேறிப் பாடவும் செய்தார்.

மயிலாடுதுறை அருகில் வானாதிராஜபுரத்தில் பிறந்து, தாம்பரம் சேவா சதனப் பள்ளியில் படித்த கமலா, நான்கு வயதிலேயே பாட்டுக் கற்றுக் கொண்டார். வாய்ப்பாட்டு, வயலின் கலைஞரான அம்மா சுலோசனா தியாகராஜன்தான் கமலாவின் குரு. அப்புறம் வீணையும் கற்றுக் கொண்டார். பள்ளியில் படிக்கும்போதே பதின்மூன்று வயதில் கர்நாடக இசையில் டிப்ளமோ பெற்றார் கமலா!

திருமணமான கொஞ்ச காலத்திலேயே கண்பார்வை பறிக்கப்பட்டது. பார்வை நரம்பு பழுதானதால் வந்த வினை. எதையும் படிக்கவோ, சரிவரப் பார்க்கவோ முடியாது.

# "நான் யாருக்கு அம்மாவாக நடிக்க வேண்டும்?"



இந்த நிலையில் கணவர் காமேஷுக்கு வலப்புற முழங்கால் வரை வெட்டியெடுக்க நேர்ந்தது. உபயம்: புகைப் பழக்கத்தால் உடலில் ஏறிய நிகோடின் நஞ்சு! நிகோடின் நஞ்சினால் முக்கிய இரத்தக் குழாயில் இரத்தம் உறைந்து விட்டது. அதனால் முதலில் விரல் மட்டும் பாதிக்கப்பட்டு, அப்புறம் படிப்படியாக முழங்கால் வரை கெட்டுப் போனது. மூன்று மாத காலம் வரை காலை வெட்டி எடுக்கவே காமேஷ் சம்மதிக்கவில்லை. கடைசியில் வேதனை தாங்காமல் அதற்கு இசைந்தார்.

விதம் விதமான ஷூ, உடைகள் என்று ஆசையாக வாங்கிக் குவிக்கும் வழக்க

முடையவர்... காலை இழந்த பிறகு லுங்கியையே சட்டை போலவும் இடுப்பிலுமாக- ஒரு வித்தியாசமான உடையாக அணிந்து கொண்டு இசை நிகழ்ச்சிகள் நடத்த வேண்டியிருந்தது! இந்தக் கட்டத்தில் குழுவிலிருந்த ராஜாமணி பிரிந்து சென்றார். கமலாவும் பாட ஆரம்பித்தார்.

இன்றைக்குத் திரைப்படத்துறையில் மிகவும் புகழ் பெற்றுள்ள ராபர்ட் ராஜசேகர், மனோபாலா, செல்வம் போன்றவர்கள் ஜயபாரதியின் 'குடிசை' படத்தில் கதாநாயகியாக நடிக்க கமலா காமேஷை அணுகினார்கள்.

"இவளுக்கு என்ன தெரியும்? நல்லா சமையல் பண்ணுவா. உருளைக்கிழங்குக் கறியும் முருங்கைக்காய் சாம்பாரும் மணக்க மணக்கச் செய்வா... நடிப்பெல்லாம் சரிப்படாது" என்று ஜயபாரதியிடம் சொன்னார் காமேஷ்! ஆனால் வென்றது ஜயபாரதிதான்!

'குடிசை' விருது பெற்றதற்கு ஒரு காரணம் கமலாவின் இயல்பான நடிப்பு. முதலும் முடிவுமாகக் கதாநாயகியாக நடித்தது அந்தப் படத்தில்தான்! கண் பார்வை மங்கலாகி விட்டதால் நடிப்பது மிகவும் கஷ்டமாகியிருந்தது. டயலாக் வரிகளைப் பிறர் சொல்லக் கேட்டுத்தான் மனசில் வாங்கிக் கொள்ள வேண்டும். அப்படியும் ரீடேக்குக்கு அவசியமின்றி சிறப்பாக நடித்து 'டேக் ஆர்ட்டிஸ்ட்' என்று பெயர் வாங்கினார்.

**கா**மேஷ் மஞ்சள்காமாலை நோய்க்கு இரையான பிறகு நடிப்பைத் தொழிலாக்கிக் கொள்வது கமலாவுக்கு அவசியமாகிவிட்டது. ஆனால் ஓராண்டுக்காலம் எந்த வாய்ப்பும் இல்லை. "ஓர் ஆழாக்கு அரிசிக்குக்கூடக் கஷ்டப்பட்டேன்" என்று கமலா குறிப்பிடுகிறார்.

'குடிசை' படத்தின் 'ரஷ்' போட்டுப் பார்த்தபோது காமேஷின் நண்பர் ஒருவர் வியந்து, 'இப்படி ஒரு திறமையா? இப்படி ஒரு நடிப்பா?" என்றார். அந்த நண்பர்... விசு!

கமலாவின் நடிப்பாற்றலை வியந்த விசு, தம்முடைய நாடகங்களில் வாய்ப்பளித்தார். 'குடும்பம் ஒரு கதம்பம்' நாடகத்தில் கதாநாயகி! பின்னர் சினிமா வாய்ப்புகள் வர ஆரம்பித்தன.

ஆனால் வயசான 'மாமி' வேடங்களில்தான் கமலா பயன்படுத்தப்பட்டார். இப்படி ஒரு முத்திரை விழக் காரணமாக இருந்தது 'அலைகள் ஓய்வதில்லை'யில் பாரதிராஜா தந்த வேடம்.

கமலா காமேஷின் ஒரே வாரிசு மகள் உமாதான். இவர் காதல் திருமணம் புரிந்து கொண்டிருக்கிறார். 'அம்மா!' என்று பாசத்துடன் ஒரு மகன் போலவே அழைத்து மகிழும் மாப்பிள்ளையும் திரைத்துறையைச் சேர்ந்தவர்தாம். மேடையிலும் பாடியவர் இந்த ரியாஸ் அஹமது. இப்போது ஒன்றரை வயதில் பேரன் ஷாரீக் ஹாசன்.

பாட்டி கமலாவைச் சந்தித்தபோது ஆச்சரியமாய் இருந்தது! காரணம் பல சோதனைகளுக்குப் பிறகும் சிரித்த முகத்தோடு வளைய வரும் சின்னப் பெண்ணான ஒரு கமலாவைத்தான் நாம் பார்த்தோம்! நாடகங்களிலும் திரைப்படங்களிலும் வயதான சோகம் பிழியும் பாத்திரங்களிலேயே பார்த்துப் பழகி விட்ட கமலாகாமேஷ், நேரில் சுரிதாரில்!

"படங்களுக்காக புத்தம் புதுசாய் ஒரு புடைவையை வாங்கிக் கந்தல் பண்ணி அழுக்காக்கிக் கட்டிக் கொள்ள வேண்டியிருக்கிறது. வாழ்க்கையில்தான் சிரமப்பட்டேன். நடிப்பிலும் இப்படி ஆக வேண்டுமா?" என்று ஒரு புறம் வேதனைப் பட்டாலும், "எல்லாவற்றையும் சிரித்துக் கொண்டே ஏற்றுக் கொள்கிறேன். வேறென்ன செய்ய முடியும்? கடைசிக் காலம் வரை சொந்தக்காலில், யாருடைய தயவையும் எதிர்பாராமல் வாழ வேண்டும். அதுதான் கௌரவம்" என்கிறார் கமலா.

படத்துக்கு ஒப்பந்தம் செய்ய யார் வந்தாலும் இவர் கேட்பது, 'நான் யாருக்கு அம்மாவாக நடிக்க வேண்டும்?' என்பதுதான்!

ஆனால் "மனம் இளமையாகத்தானே இருக்கிறது! எல்லாக் கஷ்டங்களையும் இதே சிரிப்போடுதானே எதிர்கொண்டிருக்கிறேன்" என்று கமலா சொல்கிறபோது, நமக்கு மனசில் வலி ஏற்படுகிறது.

**அ**ந்த வலியை அதிகப்படுத்தும் வகையில் இன்னொரு பிரச்னையைச் சொல்கிறார். முன்பு ஒரு கன்னடப்படத்தில் நடித்தபோது ஏற்பட்ட விபத்தில் கமலாவின் முதுகு எலும்பில் முறிவு ஏற்பட்டதாம். கூடவே இடுப்பு எலும்பும் சிதைந்துபோய்க் கவனிக்காமலே விட்டு விட்டார்கள். அது பத்தாண்டுகளுக்குப் பிறகு கிளர்ந்தெழுந்து இப்போது ஒரு மேஜர் ஆபரேஷனை அவசியமாக்கியிருக்கிறது. ஒரு லட்ச ரூபாய்க்கு மேல் செலவு பிடிக்கும். இந்த ஆபரேஷனுக்குக் கையில் பணம் இல்லாமல், கடன் வாங்கியோ, உதவி பெறவோ வேண்டிய நிலைதான் கமலா கமேஷுக்கு.

இக்கட்டுரை வெளிவரும் சமயத்தில் அந்த சர்ஜரி நல்லபடியாக முடிவடைந்திருக்கும் என்று நம்புகிறோம்!

-சுப்ர.பாலன்

வண்ணப்படம் : 'சாய்வர்ஷா'

ஆவின் பால் விலை, லிட்டருக்கு ரூ. 1.50 அதிகமாகியிருக்கிறது. இந்த அதிரடி விலையேற்றம், பொதுமக்களை எப்படி பாதித்திருக்கிறது? டெலிபோன் டைரக்டரி உதவியுடன், சென்னை நகரின் பல்வேறு பகுதிகளில் வசிக்கும் குடும்பத் தலைவர் - தலைவிகளைத் தொடர்பு கொண்டு கேட்டோம். (தொலைத் தொடர்பு ஊழியர்களின் வேலை நிறுத்தம் நடந்ததால் தொலைபேசுவதற்குள் போதுமடா சாமி என்றாகி விட்டது!)




# பால் விலையேற்றம் நியாயமானதுதானா?

**தனசேகரன் (வண்ணாரப் பேட்டை) :**

வெளியில் விற்கிற விலையோடு ஒப்பிட்டால் ஒன்பதரை ரூபாய் என்பது பெரிய விஷயமில்லை. இங்கே 'நீல்கிரீஸி'ல் ஒரு லிட்டர் பன்னிரண்டு ரூபாய்! தவிர, மற்ற பொருட்களெல்லாம் விலையேறிவிட்ட நிலையில், பால் விலை யேற்றத்தை மட்டும் இஷ்யூவாக்குவது தவறு என்பது என்

அபிப்பிராயம்.

**சரோஜா (அடையாறு) :**

போங்க சார். நினைச்சுக் கவலைப்பட நூறு விஷயம் இருக்கு. இதைப் போயிப் பெரிசா கேட்டுக்கிட்டு....

**ஞானாம்பாள் (அண்ணாநகர்) :**

ஒரேயடியாக ஒன்றரை ரூபாய் ஏத்தியிருக்கிறது தப்பு. எட்டணா, அப்புறம் ஒரு ரூபா, அப்புறம் ஒன்றரைன்னு வாரப் பத்திரிகைகள் மாதிரி கொஞ்சம் கொஞ்சமா ஏத்தினால் சுமை தெரியாது. இருபத்தஞ்சு வருஷமா ஆவின் பால்தான் வாங்கறோம். சட்டுனு மாத்திக்க விருப்பமில்லை. பொறுத்துப் போறதைத் தவிர வேற வழியில்லை.

**வி.கே. மணிகண்டன் (சானடோரியம்) :**

அரசாங்கம் சரியில்லை. விலைவாசி உயர்கிறது; உயர்கிறது என்று பேசுவார்கள் - எதிர்க்கட்சியாக இருக்கும்போது. ஆளுங்கட்சியாகி விட்டால் அவர்களுக்கு நாங்களும் சளைத்தவர்களில்லை என்பது போல்தான் நடந்து கொள்கிறார்கள். இனிமேல் எல்லோரும் பிளாக் காப்பிதான் சாப்பிட வேண்டும்.

"கப்பல் கேப்டன் முன்னாடி ஜோக் எழுத்தாளரா இருந்திருப்பாரோ?"

"ஆமாம். எப்படி கண்டு பிடிச்சே?"

"கப்பல்ல ஓட்டை விழுந்து தண்ணியை உள்ளாற வாங்குது'ன்னேன். 'அப்ப நீர் மூழ்கிக் கப்பல்னு பேர் வச்சிடுவோம்'ங்கிறாரே!"

— ஆலத்தம்பாடி ராஜகோபால்



**சாவித்திரி கணேசன் (ஆதம்பாக்கம்) :**

ஆவின் பால் விலை ஏறிடுச்சா? ஏறிட்டுப் போகட்டும். எங்க வீட்டுல ரெண்டு மாடு இருக்கு. நோ ப்ராப்ளம்!

**அகிலா (கே.கே.நகர்) :**

பழிபாவமெல்லாம் கருணாநிதியைத்தான் சேரணும். முதல்வர் வீட்டுல பால் கஷ்டம் இருக்காதுதான்! எல்லா மக்களும் பணக்காரங்க இல்லையே?

**நரசிம்மம்மா (எண்ணூர்) :**

கேக்கக் கஷ்டமாத்தான் இருக்கு. ரேடியோவுல நேத்திக்கி நைட் சொன்னப்ப பகீர்னுதான் இருந்திச்சி. ஆனா பழகிடும்! எல்லாமே பழக்கத்துலே சரியாயிடறதுதானே?

**சி. மணிமேகலை (புரசைவாக்கம்) :**

தலையெழுத்து! இதையெல்லாம் பொறுத்துத்தானே ஆகணும்? காலை பேப்பர் பார்த்ததும், 'இனிமே காப்பி சாப்பிடறதை நிறுத்திடணும்'னு முணுமுணுத்துக்கிட்டேன். உடனே என் வீட்டுக்காரர், 'காய்கறி விலை ஏறிட்டிருக்கே. பேசாம அதையும் நிறுத்திடுவமா? அரிசி விலை ஏறிடுச்சி; பேசாம பிரெட் சாப்பிடுவமா?'ன்னு கிண்டலா கேட்டார். இதுக்கெல்லாம் யாரைக் குறைசொல்றது? 'வருமானம் ஜாஸ்தியானா சந்தோஷப்படலையா? செலவையும் ஏத்துக்கத்தான் வேணும்'னு என் வீட்டுக்காரர் சொல்றார்.

தொகுப்பு : **கிச்சா**



# ‘இதெல்லாம் மறந்திருங்கள்’ என்றார் எம்.ஜி.ஆர்!

“அரசியலில் நீங்கள் காணாமல் போய் விட்டீர்களே!” என்று முன்னாள் தமிழக அமைச்சர், ப. உ. சண்முகத்தைக் கேட்ட போது, லேசாய் சிரித்து விட்டு, “நான் எங்கே அரசியலிலிருந்து ஒதுங்கினேன்? பாலிடிக்கம் என்னை விடாது; என்னாலும் பாலிடிக்சை விட்டு விடமுடியாது” என்றார்.

“இல்லையே! நீங்கள் ஆக்டிவ் பாலிடிக்சில் இப்போது இல்லையே!”

“உங்களுக்குத் தெரியவில்லை. இப்போதும் நான் அண்ணா அறிவாலயம் போய் வந்து கொண்டிருக்கிறேன். தி.மு.க. ஆளும் கட்சி ஆவதற்கு முன்பு வரை, மாலை நேரங்களில் அண்ணா அறிவாலயம் சென்று கலைஞரை சந்திப்பேன். கலைஞர், அன்பழகன், நான் மூவரும் பல்வேறு விஷயங்கள் குறித்தும் பேசுவோம்.”

“சரி! கடந்த சில வருடங்களாக நீங்கள் தேர்தலிலும் போட்டியிடவில்லை; ஆட்சியிலும் சரி, கட்சியிலும் சரி எந்தப் பொறுப்பிலும் இல்லாத சூழ்நிலையில், வாழ்க்கை எப்படி இருக்கிறது?”

“தி.மு.க.வில் இருந்தபோதும் சரி, அ.தி.மு.க.வில் இருந்த நாட்களிலும் சரி, இப்போதும் சரி, நானாக எந்தப் பதவியையும் கேட்டுப் பெற்றது இல்லை. அது எனக்குப் பிடிக்காது. என்னிடம் ஒப்படைக்கப்பட்ட பொறுப்பை, ஏற்பதற்கும் நான் தயங்கியது இல்லை.”

“சென்னையிலேயே செட்டிலாகி விட்டீர்களா?”

“சென்னையில் வசித்தாலும், வாரம் ஒரு முறையாவது, என் சொந்த ஊரான திருவண்ணாமலைக்குப் போய்வந்து கொண்டு தான் இருக்கிறேன். அங்கே என் பாட்டனார் காலத்து வீடு இருக்கிறது. நிலபுலன்களும் உள்ளன. என் ஒரே மகனும், ஒரே மகளும் அங்கேதான் செட்டிலாகியிருக்கிறார்கள். தியேட்டர், சீட்டுக் கம்பெனி என்று பிசினசும் இருக்கிறது” என்று கூறும்போதே திருவண்ணாமலையில் வசித்த நாட்களின் நினைவுகளில் மூழ்கிப் போகிறார் ப.உ.ச.

“மிகக் குறைந்த வயதில் முனிசிபல் சேர்மன் ஆனது நானாகத்தான் இருக்கும். இருபது வயதில் அரசியலில் ஈடுபடத் துவங்கிய நான், இருபத்து மூணாவது வயதில் திருவண்ணாமலை முனிசிபல் சேர்மன் ஆனேன். அந்தக் காலத்தில் பெரியார், எங்கள் வீட்டில்

தங்குவது வெகு சகஜமான ஒரு விஷயம். ஒரு முறை அப்படி பெரியார் வந்திருந்தபோது, கவர்னர் ஜெனரல் ராஜாஜி, ரமணாசிரமத்தில், பாதாள லிங்க அறையைத் திறந்து வைப்பதற்காக வந்திருந்தார். ராஜாஜி வந்திருந்த சிறப்பு ரயில் பெட்டியில் அவரைச் சந்தித்துப் பேசினார் பெரியார். அந்த ஒரு மணி நேரமும் வெளியில் காத்திருந்த நான், பெரியார் விடை பெற்றுக் கொண்டு வந்தவுடன் அவரை அழைத்துக் கொண்டு வீட்டுக்குப் புறப்படத் தயாரானேன். ஆனால் பெரியார், 'நான் வீட்டுக்குப் போகிறேன். நீ இந்த ஊர் நகரசபைத் தலைவர். உங்கள் ஊருக்கு வந்திருக்கும் கவர்னர் ஜெனரலான ராஜாஜியை மரியாதை நிமித்தம் அவசியம் சந்தித்து விட்டுத்தான் வர வேண்டும்' என்று கூற, நானும் அப்படியே செய்தேன். சாத்தனூர் அணையில் தமது படங்களின் ஷூட்டிங் நடைபெறும்போதெல்லாம், தனியாகவோ, ஹீரோயினை அழைத்துக் கொண்டோ, எங்கள் வீட்டுக்கு வந்து பேசிக் கொண்டிருக்கவும், சாப்பிடவும் எம்.ஜி.ஆர். தவறியதே இல்லை."

"தி.மு.க. அமைச்சரவையில் இடம்பெற்று, முக்கிய இலாகாக்களுக்குப் பொறுப்பு வகித்த நீங்கள், எம்.ஜி.ஆர். முதலமைச்சராக இருந்த போது, ஏன் அ.தி.மு.க.வுக்குக் கட்சி மாறினீர்கள்?"

"இன்றைக்கும் கூட அதற்கான முழுமையான காரணம் என்ன என்பது எனக்கே தெரியாத ஒரு புதிர்தான். மதுரையில் ஒரு பொதுக் குழுக் கூட்டம் நடந்தது. நான் பொதுக் குழு உறுப்பினர் இல்லை என்பதாலும், எனக்கு உடல்நலமின்றி சிகிச்சை பெற்றுக் கொண்டிருந்தேன் என்பதாலும் நான் அதில் கலந்து கொள்ளவில்லை. ஆனால் மறுநாள், நான் தி.மு.க.விலிருந்து விலகி விட்டதாய்ச் செய்தித் தாள்களில் நியூஸ் வெளியானது! எவரோ விஷமத்தனமாய் செய்த சதி இது என்பதால், உடனடியாக நான் அதை மறுத்தாலும், தி.மு. கழகத் தரப்பிலிருந்து அதை மறுக்காதது மட்டுமல்ல, என் மீது அவதூறு பரப்பும் விதமாய் அறிக்கைகள் வெளியாயின. எனவே, நான் மனம் நொந்து போனேன். தி.மு. கழகத்துக்கு ராஜினாமா கடிதம் அனுப்பாமலேயே, அ.தி.மு.க.வுக்குப் போனேன்.

"நான் எம்.ஜி.ஆரின் நெடுநாளைய நண்பன் என்பதால், அங்கே எம்.ஜி.ஆருக்கு நெருக்கமாய் இருந்தேன். எம்.ஜி.ஆர். என்னை அ.தி.மு.க.வின் பொதுச் செயலாளர் ஆக்கினார். ஜெயலலிதா அந்த காலகட்டத்தில்தான் அ.தி.மு.க.வில் சேர்ந்தார். ஜெயலலிதா தம்மை எப்படியெல்லாம் தனிப்பட்ட முறையில் அவமானப்படுத்தியிருக்கிறார் என்று எம்.ஜி.ஆர். என்னிடம் பல விஷயங்களை மனம் விட்டுச் சொல்லியிருந்ததால், அவற்றை மறுபடி குறிப்பிட்டு, 'அப்படிப்பட்டவரை, கட்சியில் சேர்க்க வேண்டும் என்று நீங்களே சொல்கிறீர்களே! எதற்கு இந்த வேண்டாத வேலை' என்று கூட கேட்டிருக்கிறேன். எம்.ஜி.ஆர். சிரித்தபடி, 'அதையெல்லாம் எதற்கு ஞாபகப்படுத்துகிறீர்கள்? மறந்து விடுங்கள். அ.தி.மு.க. உறுப்பினர் அட்டையை அவருக்கு அனுப்பி வையுங்கள்' என்று கூறிவிட, நானும் அப்படியே செய்தேன்!

"எம்.ஜி.ஆரின் மறைவுக்குப் பின், கட்சி பிளவுபட்ட போது, ஜானகி அம்மாள் அணியில் இருந்தாலும், இரு அணிகளும் மீண்டும் இணைந்தபோது, அதை என் மனதால் ஏற்றுக் கொள்ள முடியவில்லை. மறுபடி தி.மு.க.வுக்கே வந்து விட்டேன்!"

"உங்களிடம் பேசும்போது, எந்தவித சர்ச்சையிலும் சிக்கிக் கொள்ளக்கூடாது என்று வெகு ஜாக்கிரதையாகப் பேசுவது போல் தெரிகிறதே?"

"சொல்ல ஏராளமான விஷயங்கள் எனக்குள்ளே இருக்கின்றன. ஆனால் இப்போது அவற்றை நான் சொல்ல விரும்பவில்லை. என் அரசியல் நாட்களை, ஒரு புத்தகமாய் எழுதப் போகிறேன். அதில் சர்ச்சைக்குரிய பல விஷயங்கள் இடம்பெறும். இப்போதைக்கு, இவ்வளவு போதும்."

சந்திப்பு :
**எஸ். சந்திரமௌலி**
படம் :
**ஸ்ரீஹரி**



## சத்தியமூர்த்தி தந்த மரியாதை!

சென்னை மேயராக சத்தியமூர்த்தி இருந்தபோது உறுப்பினர்கள் அவரை ஆத்திரப்படுத்துவதற்காகவே பல கேள்விகளைக் கேட்டுக் கொண்டிருந்தனர்.

ஒவ்வொருவருக்கும் சிரித்த முகத்தோடு பொறுமையாகப் பதில் கூறினார் சத்தியமூர்த்தி. பின்னர் விஷயம் கேள்விப்பட்டு, "ஏம்பா, உங்களுக்குக் கோபம் வரலை? சூடாக பதில் கொடுத்து விட வேண்டியதுதானே" என்று கேட்டார் அவர் மகள் லக்ஷ்மி.

அதற்கு "அசட்டுத்தனமான கேள்வியாக இருந்தாலும், கேட்பவர்கள் மக்கள் பிரதிநிதிகள் அம்மா. அவர்களுக்கு உரிய மரியாதை தர வேண்டும்" என்றார் சத்தியமூர்த்தி.

— ஆர்.ஆர்.பூபதி




1996 நவம்பர் 3
தாது ஐப்பசி 18
மலர் : 55
இதழ் : 14

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.




## தேங்கும் தபால்; குவியும் நஷ்டம்!

நாடு தழுவிய விடுமுறை அல்லது கதவடைப்பு போன்றவற்றை அறிவிக்கும்போது கூட, 'அத்தியாவசிய சேவைகளான தபால்-தந்தி, தொலைபேசி, மின் விநியோகம் போன்றவை நீங்கலாக' என்றே அறிவிப்பது வழக்கம்.

ஆனால், அத்தகைய அத்தியாவசிய சேவைகளே வேலை நிறுத்தத்தால் தடைப்பட்டு இன்று நாடே ஸ்தம்பித்துப் போய்க் கிடக்கிறது. தபால் மற்றும் தொலைபேசி ஊழியர்கள், பிடிவாதமாக வேலை நிறுத்தத்தில் ஈடுபட்டுள்ளனர்.

இத் துறைகளை அத்தியாவசிய சேவைப் பிரிவுகள் என்று அறிவித்ததாலேயே இவற்றின் ஊழியர்கள் சேவை மனப்பான்மையுடன் விளங்க வேண்டும் என்கிற எதிர்பார்ப்பும் இருக்கிறது. மற்றவர்களைப் போலன்றி, அலுவல் நேரம் கடந்த கூடுதல் பொறுப்புகள் இவர்களுக்கு உண்டு. நேரடியாகப் பொதுமக்களுக்குச் சேவை செய்யும் கடமையும் இருக்கிறது.

இந்தப் பொறுப்புகளையும் கடமைகளையும் இந்த ஊழியர்கள் உணர்ந்து செயல்படுவதென்பது, அவர்களைப் பணியிலமர்த்தும் அரசாங்கம் நடந்து கொள்ளும் முறையைப் பொறுத்தும் அமையும்.

அரசாங்க உயர் அதிகாரிகளும் அமைச்சர்களும் தத்தமது துறையில் செய்யும் அனாவசிய செலவுகள் நமக்குக் கண்கூடாகத் தெரிகிறது. அந்தச் செலவுகளைக் குறைக்க வேண்டும் என்று பொருளாதார வல்லுனர்களும் பத்திரிகைகளும் காலங்காலமாகச் சொல்லி வருகின்றனர். ஆனால், அந்த ஆடம்பரங்களும் வீண் விரயங்களும் அதிகமாகி வருகின்றனவேயொழிய, குறைகிற வழியைக் காணோம்!




இத்தகைய வீண் செலவுகளைக் குறைப்பதற்கான வழிகளை ஆராய்வதற்கு ஒரு சிறப்புக் குழு அமைக்கப்பட வேண்டும் என்று நிதியமைச்சர் கோரினார். அந்தக் கோரிக்கையை ஏற்கக்கூட மத்திய அமைச்சரவை மறுத்துவிட்டது! அனுபவித்து வரும் ஆடம்பரங்கள் பறிபோய் விடும் என்கிற பயம்தான்!

அதே சமயத்தில், 3500 ரூபாய்க்கு அதிகமாகச் சம்பளம் பெறும் டெலிகாம், தபால்துறை ஊழியர்களுக்கு போனஸ் தரப்படமாட்டாது என்கிற விதியை மாற்ற இந்த அரசாங்கம் தயாராயில்லை. அந்த ஊழியர்கள் வசதியானவர்கள்; எனவே அவர்களுக்கு போனஸ் அவசியமில்லை என்பது அந்த விதியின் அடிப்படை!

பல விதங்களிலும் அநீதியானது இந்த விதி.

ரயில்வே ஊழியர்கள் கோரியதன் பேரில் இந்த விதி சமீபத்தில் மாற்றப்பட்டது. 'எங்கள் கோரிக்கையையும் ஏன் ஏற்கக்கூடாது?' என்பது டெலிகாம் - தபால் துறையினரின் வாதம்.

தவிர, போனஸ் என்பது, ஆண்டு முழுவதும் உழைத்ததற்காகத் தரப்படும் ஊக்கத் தொகை. அது இன்றைக்கு ஓர் உரிமையாகவே ஆகிவிட்டது. அதிக சம்பளம் பெறுகிறார்கள் என்பதற்காக அந்த ஊக்கத் தொகையை ஒரு தரப்பினருக்கு மட்டும் மறுப்பது அநீதி.

மாதச் சம்பளம் உயர்வடைய அடைய, ஒரு மனிதனின் வாழ்க்கை முறையும் மாற்றமடைந்து மேம்படுகிறது. தன் பதவிக்கேற்ற வாழ்க்கை முறையை அவன் மேற்கொள்ள வேண்டிய கட்டாயம் கூட உருவாகிறது. எனவே 'நல்ல சம்பளம் பெறுவதால் உனக்கு போனஸ் கிடையாது' என்று ஓர் ஊழியனுக்குச் சொல்வதென்பது அவனைத் தண்டிப்பதற்கே சமமாகும்! கூடுதல் பொறுப்புகளைச் சுமந்ததற்காக அவன் தண்டிக்கப்படுவது எந்த வகையில் நியாயம்?

இதனால் அத்தியாவசிய சேவைத் துறையினர் வேலை நிறுத்தம் மேற்கொள்வதென்பது நியாயமாகி விடாது!

நாடு முழுவதிலும் லட்சோப லட்சம் பேரைக் கஷ்டத்தில் ஆழ்த்தியிருக்கும் இந்த வேலை நிறுத்தம் கண்டனத்துக்குரியதுதான்.




ஆனால், வேலை நிறுத்தத்துக்கான காரணம் நியாயமானது என்பதைப் பார்க்கையில், அதனை இந்த அளவுக்கு வளரவிட்ட அரசாங்கத்தைத்தான் குறைகூற வேண்டியிருக்கிறது.

சுக்ராம் காலத்திலேயே பரிசீலித்து நடவடிக்கை எடுக்கப்படும் என்று சொல்லப்பட்ட கோரிக்கைகள், கிடப்பில் போடப்பட்டன. அவை குறித்த இலேசான முணுமுணுப்பு எழுந்தபோதே, ஊழியர்களைச் சுறுசுறுப்பாகப் பேச்சு வார்த்தைக்கு அழைத்து, வேலை நிறுத்தத்தையே தவிர்த்திருக்கலாம்.

விஷயம் முற்றிப் போய்விட்டது! ரயில் நிலையங்களிலும் தபால் அலுவலகங்களிலும் மூட்டை மூட்டையாகத் தபால்கள் தேங்கிக் கிடக்கின்றன. மழை, புயலால் துண்டித்துப் போன டெலிபோன் தொடர்புகள் செப்பனிடப்படாமலே இருக்கின்றன.

ஒரு தனியார் நிறுவனத்தில் வேலை நிறுத்தம் வரும்போதே ஏராளமாகப் பொருள் நஷ்டம் விளைகிறது. எனினும், அந்த நஷ்டம் ஒரு வரம்புக்குட்பட்டு, சம்பந்தப்பட்ட நிறுவன உரிமையாளர்களையும் ஊழியர்களையும் மட்டுமே பாதிக்கிறது.

பொதுத்துறை, அத்தியாவசிய சேவைப் பிரிவுகளில் வேலை நிறுத்தம் என்றாலோ, நாடு முழுவதுமே நஷ்டத்துக்கு ஆளாகிறது. கடிதப் போக்குவரத்தும் டெலிபோன் தொடர்பும் இன்றி, வியாபாரமும் உற்பத்தியும் பாதிக்கப்பட்டு, நஷ்டக் கணக்கு பல கோடிகளைத் தாண்டிவிடும்.

ஊழியர்களின் கோரிக்கைக்கு இணங்குவதால் ஏற்படக்கூடிய கூடுதல் செலவுடன் ஒப்பிடும்போது, வேலை நிறுத்தத்தால் விளையும் தேசிய நஷ்டம் பல்லாயிரம் மடங்கு அதிகமாயிருக்கும்!

வேலை நிறுத்தம் சூடுபிடித்த பின்னரே ஊழியர்கள் பேச்சு வார்த்தைக்கு அழைக்கப்பட்டிருக்கிறார்கள். அந்த நிலையிலும் அரசின் பிடிவாதம் தொடர்வதால் நஷ்டம் பெருகிக் கொண்டிருக்கிறது.

இந்த இதழ் வெளியாவதற்கு முன்னர் நிலைமையில் முன்னேற்றம் ஏற்படலாம். அல்லது ராணுவத்தைக் கொண்டு இந்த அத்தியாவசிய சேவைகளை நிறைவேற்ற அரசாங்கம் முடிவு செய்யலாம்.

பிரச்னைக்குத் தாற்காலிகத் தீர்வுகள் காண்பதில் பலனில்லை. அடிப்படைச் சிக்கலை ஆராய்ந்து நிவர்த்தி செய்ய வேண்டும். ஆடம்பர, அனாவசிய செலவுகளைக் குறைத்து, ஊழியர்களுக்குரிய நியாயமான ஊதியத்தை வழங்க முற்படுவதே நிரந்தரத் தீர்வு.

**சுயநலம் என்னும் இருள் கவிந்து கொண்டிருக்கும் இந்தக் காலத்திலும் சில இளைஞர்கள் நம்பிக்கை ஒளி ஏற்றிக் கொண்டுதான் இருக்கிறார்கள். அந்த மிகச் சில இளைஞர்களில் ஒருவர் நாராயணன்...**

"இந்தக் குளத்தைச் சுத்தப்படுத்தி, கரை கட்டி, ஒரு வாட்ச்மேனும் போட்டுட்டம்னா, இங்க இருக்கிற சுமார் ஆயிரம் குடும்பங்களுக்குத் தண்ணீர் பிரச்னையே இருக்காதுங்க!" என்று சொல்லுகிறார் நாராயணன். மீனவர் குடும்பத்தைச் சேர்ந்த இந்த இருபத்தெட்டு வயது இளைஞர், மற்ற எத்தனையோ இளைஞர்களிடமிருந்து வித்தியாசப் பட்டு நிற்கிறார்.

கோவளத்தில் இருக்கும் நட்சத்திர ஓட்டலில் வேலை. கடலில் ஆனந்தமாகக் குளிக்க வரும் அயல்நாட்டுப் பயணிகளை, ஆபத்திலிருந்து காப்பாற்றும் பொறுப்பை ஓட்டல் அளித்திருக்கிறது. "கடலில் எங்கெங்கே சுழல் இருக்குன்னு எனக்குத் தெரியும். ரஷ்யன் கான்சல் - ஜெனரல், அமெரிக்க, ஜெர்மன் தூதரக அதிகாரிங்கன்னு இதுவரை 120 பேருக்கு மேல சுழல்லேருந்து காப்பாத்தியிருக்கேன்!" என்று சொல்லும் நாராயணன், ஏழாவது வரையே படித்தவர். ஆனாலும், எளிதாக அயல்நாட்டுப் பயணிகளிடம் ஆங்கிலம் பேசுகிறார். "அமெரிக்கன் இங்லீஷ் ரொம்ப ஃபாஸ்ட்டா இருக்கும். 'பார்டன் மீ' என்றால் மறுபடி நிறுத்தி, நிதானமா சொல்லுவாங்க. பிரிட்டிஷ்காரங்க இங்லீஷ் தெளிவாப் புரியும். சரளமாப் பேசிப் பழகிட்டேன்."

அவர்கள் தரும் அன்பளிப்புத் தொகைகளைத் தம் குடும்பத்துக்குச் செலவழிக்காமல், பொதுக் காரியங்களுக்குச் செலவிடும் வகையில்தான் இந்த இளைஞர் வித்தியாசப்பட்டுத் தெரிகிறார்!

"எப்படி உங்களுக்கு இந்த மாதிரி மனசு வந்தது?"

"எங்க அப்பாதான் எனக்குக் குரு, தெய்வம் எல்லாம். ராத்திரி படுத்த பிறகு, தூங்கற வரைக்கும் ராமாயணம், மகாபாரதக் கதைங்க எல்லாம் சொல்லுவார். ஒழுக்கமா இருக்கணும், நாணயமா இருக்கணும்னு சொல்லிக்கிட்டே இருப்பார். ரெண்டு கண்ணிலும் பார்வை போய்ட்ட பிறகும் எங்கூட கடலுக்கு வருவார்.

"சின்ன வயசிலிருந்தே ராம கிருஷ்ண மடத்துக்குப் போய்க்கிட் டிருந்தேன், யோகா பழகணும்னு. அப்பத்தான் விவேகானந்தர் பத்தித் தெரிஞ்சுக்கிட்டேன். கன்னியாகுமரில விவேகானந்தர் மண்டபத்துக்குப் போனேன். அப்புறமா திருவல்லிக்கேணில விவேகானந்தா கேந்திரத்துக்குப் போய் வந்துக்கிட்டிருந்தேன்.

• தர்க்காவுக்கு முன் ஊர் சுத்தமாக்கப்பட்ட பகுதி



அவரோட 'வீர இளைஞர்களுக்கு'ன்ற புஸ்தகத்தைப் படிச்சதிலேருந்து அவர் மேல பக்தி அதிகமாயிடிச்சு. எப்படியும் சமுதாயத்துக்கு உதவணும்கிற நினைப்பு உறுத்த ஆரம்பிச்சுது.

"ஸ்விட்சர்லாந்துல இருந்து ஒரு தடவை புரொபசர் ஜேசுதேவ செல்வராஜ்னு ஒருத்தர் மனைவியோட இங்க வந்து ஓட்டல்ல தங்கினார். ரொம்ப சின்ன வயசிலயே அங்க போயிட்டதால, தமிழ் சரியாப் பேச வராது. இங்கிலீஷ்லதான் பேசுவார். அவருக்கும் விவேகானந்தர் மேல மரியாதை. அவங்க ஊர்ல அவரைப் பத்தி நிறைய லெக்சர் பண்ணியிருக்கார். 'உங்க ஊர் என்ன இப்படி அசுத்தமா இருக்கே? குப்பை கூளங்கள் எல்லாம் போட்டு, அசிங்கம் எல்லாம் பண்ணியிருக்காங்களே'ன்னார். நாங்க குப்பத்து வாசிங்க, ஏழைங்கன்னதும், டாய்லெட் கட்ட எவ்வளவு செலவாகும்னு கேட்டார். மேஸ்திரிய எல்லாம் விசாரிச்சு சொன்னேன். ரூபா கொடுத்தார். கட்டினேன். குப்பத்துல எல்லாரும் ஹெல்ப் பண்ணினாங்க. அப்புறம் ரெண்டு லேடீஸ் டாய்லெட் கட்டினேன். எக்ஸ்நோரா உதவி பண்ணினாங்க. ஒரு வெளி நாட்டுக்காரரும் பணம் கொடுத்தார்."

"**கோ**வளத்தில் குடி தண்ணீர்தான் பிரச்னைங்க" என்றார் நாம் சந்தித்த காந்தா என்ற பெண்மணி.

"இப்ப தண்ணிக் கஷ்டம். ஹோட்டல்லருந்து தினம் ரெண்டு லாரி தண்ணி தராங்க. ஆனா இந்தக் குளத்தைச் சரி பண்ணிட்டா, டாங்க் கட்டி, குப்பத்துக்குப் பூரா நல்ல தண்ணி கிடைக்கும். அதுக்காகத்தான் முழு மூச்சா இதுல இறங்கிட்டேன்!" என்கிறார் நாராயணன். இவரது தன்னல

# இதோ ஒரு இளைஞர்!

• குளத்தைச் சுத்தப்படுத்தும் பணி..



• நாராயணன்

மற்ற பொதுச் சேவையைக் கண்ட எக்ஸ்நோரா, யு.எஸ்.எய்ட் நிறுவனத்தின் மூலம் நிதியுதவி அளித்து வருகிறது, குளத்து நீரைக் குடிநீராக்க.

அருகிலிருக்கும் தர்காவைச் சுற்றிலும் சுத்தப்படுத்தியிருக்கிறார் நாராயணன். "முன்புறம் எல்லாம் வேலிகாத்தான் செடியும், புல்லும் புதரும் மனிதக் கழிவுகளுமாக நடப்பதற்கே கஷ்டமாக இருக்கும். இப்போது பாருங்கள், எப்படி இருக்கிறது என்று!"

தர்காவுக்கு நிறைய இந்துக்களும் வந்து வழிபடுகிறார்கள். நாகூர் தர்காவைப் போன்றே இதுவும் புனிதமானது என்கிறார்கள். அன்சாரிபாபாவின் உடல் இங்கே கடலில் வந்து கரை சேர்ந்த போது அடக்கம் செய்து கட்டிய தர்காவாம். (அவரது சகோதரரின் உடல்தான் நாகூர் தர்காவில் அடக்கம் செய்யப்பட்டிருக்கிறது என்கிறார்கள்.)

1975-ல் கடல் அரிப்பின்போது கண்டெடுத்த மிகப் பெரிய வெங்கடாசலபதி சிலையைக் குப்பத்தில் நிறுவியிருக்கிறார் நாராயணன். சனிக்கிழமை தோறும் மாலையில் எட்டு முதல் இருபது வயதுள்ள குழந்தைகளும் இளைஞர்களும் பெண்களும் கலந்து கொள்ளும் பஜனை வகுப்பு நடத்துகிறார். பாரதியார் பாடல்கள் உட்பட, தெய்வப் பாடல்களும், தேசபக்திப் பாடல்களும் பாடுகிறார்கள்!

"யோகாவும் சொல்லிக் கொடுக்கப் போறேன். நீச்சலும் ஓட்டப் பயிற்சியும் கூட ஆரம்பிக்கப் போறேன். நிறையப் பேரை ட்ரெயின் பண்ணி பரிசு வாங்க வைக்கப் போறேன்!" என்கிறார். தண்ணீருக்காகச் சண்டை போடுவதையும், வழக்குப் போடுவதையும் விட்டு, குளங்களை ஆழப்படுத்தியும் அகலப்படுத்தியும் விரிவாக்கினால், மழைத் தண்ணீர் கடலுக்குப் போகாமல் சேமிக்க முடியும் என்கிறார். "நாம நினைச்சா எதுவும் முடியும், சார்!" என்கிறார் உறுதியாக.

நாராயணன் டாய்லெட்டுகள் கட்டிக் கொடுத்திருப்பதைப் பார்த்த பஞ்சாயத்து, "யார் உத்தரவில் கட்டினாய்? யார் உனக்கு அனுமதி கொடுத்தார்கள்?" என்று எதுவும் கேட்கவில்லை. "பஸ் ஸ்டாண்டுக்குப் பக்கத்தில எங்களுக்கும் ஒரு டாய்லெட் கட்டிக் கொடுத்துடு!" என்று கேட்டுக் கொண்டதாம்!

அதையும் கட்டிக் கொடுத்திருக்கிறார் நாராயணன்.

- சித்தார்த்

படங்கள் : ஸ்ரீஹரி

# TV விமர்சனம்

இட ஒதுக்கீடு பற்றி இரண்டு வாரமாக ஒரு நேருக்கு நேர்- சன் டீவியில். அதுவும் 'குடியரசுத் தலைவர் மாளிகையில் பணியாற்றும் ஊழியர்களில் ஒருவர்கூட பிற்படுத்தப்பட்டவர் இல்லையே. இதற்காக உங்கள் ரத்தம் கொதிக்கவில்லையா?' என்று வக்கீல் விஜயனிடம் பேட்டியாளர் வீரபாண்டியன் முதல் வாரம் கேட்க, அதற்கான விஜயனின் பதில் அடுத்த வாரம் என்று சஸ்பென்ஸில் வைத்துவிட, அனைவரும் என்ன நடக்குமோ என்று படபடப்போடு காத்திருக்க வேண்டிய நிலை. நல்ல வேளையாக வக்கீல் விஜயனின் ரத்தம் கொதி நிலைக்குப் போகாததால் பயந்தபடி எதுவும் ரசாபாசமாகி விடவில்லை. பேட்டியின் கேள்விகளிலும் சரி, பதில்களிலும் சரி, அறிவு பூர்வமான விஷயங்களும் இருந்தன; உணர்வு பூர்வமான விஷயங்களும் இருந்தன. அதே சமயத்தில் இருபுறமும் மழுப்பல்களும் இருக்கத்தான் செய்தன. இருப்பினும் ஒரு நெருடல்... பேட்டியின் முடிவில் வக்கீல் விஜயன் தாக்கப்பட்ட விஷயத்தைக் கடுமையாகக் கண்டனமும் செய்திருந்தால் சன் டீவியின் மதிப்பு கூடியிருக்கும். ஏன் செய்யவில்லை?

●● தமிழைக் கடித்துக் குதறும் இளம் பெண்களுக்குத்தான் சாடிலைட் டீவிக்களில் ஒருங்கிணைப்பாளர் வேலை கிடைக்கும் என்கிற நிலை மாறி வருவதுபோல் தோன்றுகிறது. 'பாலசந்தரின் திரைச் சிற்பங்கள்' என்கிற தலைப்பில் சன் டீவியில் ஒளிபரப்பான நிகழ்ச்சிக்கு பட்டிமன்றப் புகழ் பாரதி பாஸ்கரும் சுமதியும் விளக்கம் கொடுத்தது சுவாரஸ்யத்தோடு கூடிய ஆறுதலான விஷயம்.

●● 'காலத்தை வென்று நிற்பது கர்நாடக இசைப் பாடல்களா? கிராமியப் பாடல்களா? பக்திப் பாடல்களா? சினிமா பாடல்களா?' -- விறு விறுப்பான விசுவின் அரட்டை அரங்கத்தில் இந்த வாரம் முடிவு சொல்லப்பட்டது. மற்ற மூன்றும் மிக நல்ல விஷயங்கள்தான் என்றாலும் சினிமா பாடல்கள்தான் காலத்தை வென்று நிற்கும் என்று முடிவு சொன்னார் விசு. பிரபலமாக இருப்பதாலேயே சினிமா பாடல்கள் காலத்தை வென்று நிற்குமா என்ன? விசுவுக்குத்தான் வெளிச்சம்.

●● ஏசியாநெட்டில் இரண்டு மலையாளப் படங்கள். காலையில் 'சுவாதித் திருநாள்'. கேட்க வேண்டுமா? கர்நாடக இசைப்பாடல்கள் மனதை ரம்மியமாக்கின. மாலையில் 'லால்சலாம்'. முழுக்க முழுக்க கம்யூனிஸ்டுகள் பற்றிய படம். மோகன்லால் - ஊர்வசி ஜோடி கூட அரிவாள் - சுத்தியல் சின்னங்களுக்கிடையில்தான் டூயட் பாடினார்கள். வன்முறைகள் அளவானதாகவே காட்டப்பட்டன - அதுவும் குரூரமில்லாமல். சுவாதித் திருநாள் ஓர் எல்லை; லால்சலாம் இன்னோர் எல்லை. இரண்டையும் எத்தனை அழகாக எடுத்திருக்கிறார்கள் மலையாளத்துக்காரர்கள்!

●● பத்திரிகையாளர்களை எப்படித் தாக்குவது என்று கற்றுக் கொள்ள விரும்புபவர்கள் கன்ஷிராமிடம் போகலாம். மனிதர் எப்படி ஓடி ஓடித்தாக்குகிறார்! இவரது சிஷ்யை மாயாவதி முதல்வராகியிருந்தால் பத்திரிகையாளர்களோடு மற்றவர்களின் கதியும் என்னவாகியிருக்குமோ!

●● நாயின் அளவே இருந்த விலங்கு குதிரை. இன்றைக்கு நாம் பார்க்கும் அதன் உருவத்தை, அளவை அடைய ஆயிரமாயிரமாயிரம் ஆண்டுகளின் பரிணாம வளர்ச்சி அவசியமாயிருந்திருக்கிறது. ஆதி மனிதன் குதிரைகளைப் பிடித்துப் பழக்கியது ஏர் ஓட்டவும் வண்டியிழுக்கவும்தான். குதிரையேற்றம் என்னும் வீர வித்தையும் விளையாட்டும் அவன் 'பரிணாம' வளர்ச்சியின் படிகள்! இப்படிப்பட்ட தகவல்களைத் தோரணமாக்கி, குதிரைகளைப் பற்றிய அற்புத நிகழ்ச்சி டிஸ்கவரி சானலில். வைத்த கண்ணை மட்டுமல்ல... காதையும் வாங்காமல் பார்க்கச் செய்கிறார்கள்.

●● ஒளிபரப்பு நேரத்தின் இடைஞ்சல் காரணமாக டி.டி. ஒன்றில் காலை கச்சேரிகளைப் பெரும்பாலும் காதால் மட்டுமே கேட்க முடிகிறது. (சிலவற்றை காதால் கூட கேட்க சகிக்கவில்லை என்பது வேறு விஷயம்!) ஞாயிறன்று பாடியதால் அசோக் ரமணியைக் 'கேட்டது'டன் பார்க்கவும் முடிந்தது. கண்களுக்கு வேலை தரும்படி 'ஆக்ஷனுடன்' பாடினார். வீட்டுக்கு சாம்பிராணி புகை போட்டது போல் கும்மென்று சூழ்ந்து கொண்ட வரானி. நீண்ட நாள் கழித்து, அவர் தாத்தா (பாபநாசம் சிவன்) இயற்றிய 'நாராயண திவ்ய நாமம்' கேட்க முடிகிறதே என்கிற சந்தோஷத்தை பாதியில் குலைத்துப் புண்ணியம் தேடிக்கொண்டது... வேறு யார்....? தூர்தர்ஷன்தான்!

— 'டிஷ்'



# வாழ்க்கை

"மாப்ள… என்னடா இன்னும் கொக்கைக் காணும்… எங்க போய் ஒழிஞ்சான்… மணி அஞ்சு பத்தாவுது. ச்சே… பாஸ்கரன் நகத்தைக் கடித்துத் துப்பினான்.

சமீப காலமாக இந்த பெஞ்சுகளில் உட்கார முடியாமல் பஸ்களின் புகையும், சத்தமும். புது பஸ் ஸ்டாண்ட் கட்டப்படுவதற்காக இந்த மைதானத்தில் தாற்காலிக ஏற்பாடு. ஆயிற்று ஒன்றரை வருடம்… பஸ்கள் உழுது உழுது நாற்று நடத் தயாரான நிலம் போல சேறு.

பாஸ்கரன், சீனா, மூர்த்தி, சத்யன் என்கிற நண்பர்கள் இங்கு நினைவு தெரிந்த நாளாக வருபவர்கள். ஆரம்பத்தில் கிரிக்கெட் விளை யாடினார்கள். அப்புறம் அப்படியிப்படி ஆகி பேசவும் முக்கியமான முடிவுகள் (பெரும்பா லும் சினிமா) எடுக்கவும் இதை ஒரு செயலக மாக ஆக்கிக் கொண்டனர்.

இந்த நால்வர் மட்டும்தான் இவர்கள் என் பதில்லை. வேறு வேறு ஊர்களில் வேலை நிமித்தம் போயிருக்கிறார்கள் சிலர். வாரம் ஒரு நாள் வரும் மாதவன் போன்றோரும் உண்டு.

பொங்கல், தீபாவளி, ஆவணி அவிட்டங் களில் பெஞ்சு நிரம்பி வழியும். ஒவ்வொரு வார்த்தைக்கும் சிரிப்பு வெடித்து அந்த பிரதே சத்தையே அதிர வைக்கும்.

அனைவருக்கும் சத்தியன் இருக்க வேண் டும்.

சத்தியன் சரித்திரக் கதைப் பிரியன். தன்னை ஒரு கருணாகர பல்லவன் என்றே நம்பினான். தனக்குப் பிரியமான நபர்களின் வரிசைக்கொப்ப பெயர்களைச் சூட்டி அவ் வாறே அழைப்பான். பழுவேட்டரையன், ஹிப் பாலஸ், கலிங்கத்துப் பீமன், காரி, லங்காபுரி தண்டநாயகன்.

மஞ்சக்குப்பத்திலிருந்து சத்யன் வரவேண் டும். அவன்தான் பெரும்பாலும் முதலில் வரு வான். பஸ் ஸ்டாண்ட் இல்லாமலிருந்தால் இந்த மைதானத்தில் அவன் சைக்கிளில் வரு வது தெரியும்.

"இன்னிக்கு மண்ணெண்ண க்யூவுக்குப்

சுப்ரமணியன் ரவிச்சந்திரன்



போயிட்டானா. சரியான போங்குடா..." சீனாவுக்குச் சலிப்பு ஏற்பட்டது. ஒரு பட்டதாரியை, என்னதான் வேலையில்லையென்றாலும், இப்படியா வரிசையில் நிற்கவைத்து முன்னாலுள்ளவன் நகர்த்தும்போதெல்லாம் என்னெய்க் கேனை நகர்த்தும் நிலைக்குத் தள்ள வேண்டும்.

வழக்கத்துக்கு மாறாக சத்யன் கீழைத் திசையிலிருந்து வந்து இறங்கினான். வந்ததும் பொதுவாக வணங்கினான் சபையை நோக்கி.

"ஏண்டா கேணை... இம்மா நேரம் என்ன பண்ணிட்டிருந்தே.. பெரிய இவனாடா நீயி..." மூர்த்தி ஆளுக்கொரு சிகரெட்டை நீட்டியபடி கேட்டான்.

"மன்னித்துக்கொள் நண்பா. தாயகத்தின் பணிகள் தலைக்கு மேலே... என்ன தண்டல் நாயகா... விஷமப் பார்வை... ஆ, தொலைத்து விடுவேன். ம்... கழலும் வாளிருக்க, சூரன் இவனிருக்க. சுற்றிலும் வீரர்கள் இருக்க, கண்டெலி உனக்கா பயப்படுவேன்."

"அடீங்க. எவன கண்டெலின்னே."

"கோபித்துக் கொள்ளாதே நண்பா..."

"ஏம் மாமூ லேட்டு... உங்க மாமா பொண்ணு கருத்தட்டாங்குடிக்கே திரும்பப் போயிடுச்சா. அதுக்கு என்ன பேரு வச்சே? யவன ராணியா..."

"இவன் பேர் வச்சது பொறுக்காமலே அவ ஓடிவிருப்பா."

"விளையாடாதே ஹிப்பாலஸ். நான் வேதனையிலிருக்கிறேன். என்னைச் சுமக்கும் இந்தப் புரவி வழியில் சிறிது சண்டித்தனம் பண்ணிவிட்டது. ம்... என் தந்தையாரிடம் சொல்லியிருக்கிறேன். இதை விற்று விட்டு காற்றை விட கடுகிச் செல்லும் ஓர் உயர்ந்த சொகுசுப் புரவி ஒன்று வாங்க வேண்டும்."

"உல்லாசப் புரவியா மாப்ளே..." சீனா கிண்டல் செய்தான்.

"சரியாய்ச் சொன்னாய் நண்பா... அது மட்டும் கிட்டி விட்டால்... அ.. எதிரிகளின் மண்டையோட்டில் மரண சாசனமே எழுதி விடுவேன்..."

"ஏம் மாப்ள... ஓங்கப்பா எங்கியோ வேலைக்கு இட்டுக்கினு போனாரே... என்னாச்சு..."

"ப்ச்" என்ற சத்யனின் முகம் இதுகாறும் கொண்ட பிரகாசத்தை இழந்தது. மௌனமாக, வேகவேகமாக சிகரெட்டை உறிஞ்சினான்.

கனத்த மௌனம் நிலவியது. எங்கோ ஓடும் பஸ்ஸின் இரட்டை ஹாரனின் பிளிறல் இப்போது கேட்டது.

சத்யன் சட்டென்று பேசினான்.

"அது வெறுப்பு மாப்ள. அவருக்குத் தெரிஞ்ச ஒரு மார்வாடி திருப்பாபுலியூர்ல இருக்காராம். வீட்டுக்குள்ள நொழையறச்சேயே ஒரே டால்டா வாடை. அங்க ரெண்டு மூணு பசங்க. அதுங்களுக்கு ட்யூஷன் எடுக்கணுமாம். இரு நூறு ரூவா சம்பளம்."

"போலாமேடா டைம் பீயிங்..."

"அஞ்சலேந்து ஒம்போது, டைமு. ட்யூஷன் மாத்திரம் இல்லே. அக்கௌண்ட்ஸ் பாக்கணும். எங்கியாச்சும் வெளியூர் அனுப்பினா போவணும்.. எங்கப்பா, சம்பளத்தை என்னையே எடுத்துக்கச் சொன்னாரு."

"வேணாம் மாப்ள" என்றனர் நண்பர்கள். ஐந்திலிருந்து ஒன்பது

# என்றால்...

என்னும் அந்த முகூர்த்தம் இவர்களுக்கு முக்கியமானது. சத்தியன் போனால் யாரை ஏளனம் செய்வதாம்.

சத்யன் மேலும் சூழ்நிலையைக் கனமாக்க விரும்பவில்லை.

"நண்பா... கலிங்கத்து பீமா. உனக்கு ஒரு பணி தொடர்பாக ஓலை வந்ததே. என்னா யிற்று"

"எங்கியோ பலோஞ்சா போ'ன்றான். எவன் போவான்? சோறும் கெடைக்காது ஒண்ணும் கெடைக்காது. எங்க அப்ஸ்க்கு ரொம்பக் கடுப்பு. ரெண்டு நாளா பேச்சு வார்த்தையே இல்ல..."

"மச்சான். வெள்ளிக்கிழமை எக்ஸ்பிரஸ்ல ஒரு அட்வர்டைஸ்மெண்ட் வந்திருக்கு..."

"அது ஒப்பேறாது... நானும் பார்த்தேன்."

"டேய்.. டேய். விடுங்கடா. நாம எல்லாத்தை யும் அப்ளை பண்ணிட்டுத்தான் வர்றோம். விடுங்கடா. ஒண்ணும் சரி வரலேன்னா, லோகல்ல நம்ம எல்லாருக்கும் ஒரு ஏற்பாடு பண்ணியிருக்கேன். ஒரு யூனிட் போட்ரு வோம்."

"சரி... படம் போவமா? என்னப்பா சத்யா. அயம் சாரி. கருணாகரப் பல்லவன்."

"திரைப்படமா நண்பா. எப்போதோ பார்த் தது... ஸ்ரீதர் படம். சுமைதாங்கி..."

"சுமைதாங்கியா.. டேய்.. கொல்லாதடா. இன்னும் வயசிருக்கு எனக்கு. கொஞ்சம் பிஞ்சா பாப்பம். நீ சொல்ற படம் நல்ல படம் தான். ப்ளாக் அண்ட் ஒயிட், தொள தொள பேண்ட் ஜிப்பா. ரொம்ப முத்தல்..."

"ஏன் நண்பா... அப்போதைய கதையும், பாடலும் இப்போது உண்டா?" சொல்லிக் கொண்டே வந்த சத்யன் பாட ஆரம்பித்தான்.

"வாழ்க்கையென்றால் ஆயிரம் இருக்கும்.
வாசல் தோறும் வேதனையிருக்கும்..."

"போர். போர். போறுண்டா..." சீனு ஒரு கையை மடித்து முகம் மறைத்து மறுகையை சத்யன் பக்கம் நீட்டி, விஸ்வாமித்திர முத்திரை காட்டினான்.

சத்யன் எதிரிலுள்ளவன் முகவாயைத் தொட்டு தலையை மெல்ல அசைத்தபடி பாட லைத் தொடர்ந்தான். கதவருகில் போன சைக் கிள் ஒன்று, ஒரு வினாடி இதைப் பார்க்க நின்று, பின்பு கடந்தது.

"அண்ணே... கொடுமைப்படுத்த ஒரு எல்லை இருக்குண்ணே. பி.பி.எஸ். பாட்டை அவுரு பாடினாத்தான் நல்லா இருக்கும். அண்ணனுக்கு அவுரு மேல என்ன கோவம்..." பாஸ்கரன் கையைக் கட்டிக் கொண்டு கேட்க, சிரிப்பு வெடித்தது.

"கலோனியல் சாங்ஸ் கேட்டியா மாப்ள... சும்மா அள்ளிக்கினு போவுது. நம்ம ஊட் டாண்ட ஒரு சின்னப் பையன் கேக்கறான்."

"அந்த ஆல்பம் வந்திடுச்சா மாமூ..."

"சூப்பர்டா.. அப்பா பல்லவா... அதக் கேளு. போற வழிக்குப் புண்ணியமாச்சும் கிட்டும். அதை விட்டுட்டு ஒன்னையும் கஷ்டப்படுத்திக் கிட்டு இருக்கறவனையும் ஏன் கஷ்டப்படுத் தறே..."

சத்யன் முகம் சட்டென்று ஸ்தம்பித்தது.

"ஏன்... ஏன் இந்தப் பாட்டுக்கு என்ன... எத் தினியோ பாட்டு வந்திடுச்சு. இத அடிக்க முடி யுதா... அதுக்கெல்லாம் ரசனை வேணும்..."

"ஏன்.... என் ரசனையில என்னத்தக் கண்டே... நீ கலோனியல் சாங்ஸ் கேளு..."

"இவுரு பெரிய ரசிகமணி. இந்த லொள்ளு தான வேணான்றது. வூட்ல அப்பா ஏறினா அந்தக் கடுப்பை இங்க கொட்டறதா? இதுக்கு மார்வாடி வீட்டுல டால்டா உருக்கலாம்..." சீனா சொல்லவும் சபை சிரித்தது.

"என்னது... நாயே..." சத்தியன் சீனா மேல் பாய்ந்தான். இருவரையும் விலக்குவதற்குள் தத்தம் படிப்பு, பொது இடம் என்பதை மறந்து மண்ணில் புரண்டிருந்தார்கள்.

"ச்சீ. விடுங்கப்பா. சின்னப் புள்ளைங்க தேவலைடா. பாசு.. நீ அவன இட்டுகினு போய் கழுவி உடு. சத்யா, வாட்ஸ் திஸ்?" தோளைப் பற்றிய மூர்த்தியை விலக்கினான் சத்தியன்.

தடாரென்று ஸ்டாண்டை உதைத்ததில் சைக்கிள் ஓரடி முன்னால் ஓடியது. யாரிடமும் எதையும் பேசாமல் ஏறினான். யாருக்கும் கூப் பிடவும் தோன்றவில்லை. மறைந்தான்.

பாஸ்கரனும் சீனாவும் சரிசெய்து கொண்டு வந்தனர்.

"காட்டுப் பய. பேசிட்டே இருக்கறச்சே மேல விழுறான்.




- பணத்திடம் நம்பிக்கை வைக்காதே. நம் பிக்கையிடம் பணத்தைப் போட்டுவை!

— பலூசிஸ்தான் பழமொழி

- நேர்மையைப் பறிகொடுத்துப் பெறும் லாபம் உண்மையில் நஷ்டமே!

— அல்பேனியப் பழமொழி

தொகுப்பு : வெ. சந்திரா

''இந்த அரசியல்வாதிங்க அடிக்கிற கூத்துனால, வீட்ல பெரிய பிரச்னை.''

''அதெப்படி?''

''நேற்று என் அம்மா, அண்ணாசாலையில் மருமக 'கொடும்பாவியை'க் கொளுத்தறேன்னு கிளம்பிட்டா!''

— ஆர். வசந்தகுமார்



விட்டிருந்தா இன்னிக்குத் தொவட்டியிருப்பேன்." சீனா விரலை ஆட்டினான்.

"ம்..." என்று அதட்டினான் பாஸ்கரன். "இன்னிக்கு ஏதோ மூட் அவுட்றா.. பாவம்... இதை விட நக்கல் பண்ணப்பல்லாம் சிரிச்சுக்கிட்டுத்தான போயிருக்கான்..."

"எங்களுக்கு மட்டும் மூட் அவுட் இல்லியா. ஒனக்குச் சோறு ஒரு கேடான்னு ஸ்ட்ரெயிட்டா எங்கப்பா இப்ப கேட்டாரு."

"விடு. நீயும் அவனை ரொம்ப ரேக்கிட்டே..."

"என்னடா ரேக்கினேன். எனக்கும் பி.பி.எஸ். புடிக்கும். சும்மா தமாஷ் பண்ணேன்டா. உண்மையில் அவன் நல்லாவே பாடினான்."

"கரெக்ட். ஆனா அவன டால்டா உருக்கப் போன்னு சொல்றது அவ்வளவு சரியா இல்ல. நாம இங்க வர்றதே புழுக்கத்தைப் போக்கிக்கத்தான். இப்பிடியேவா பர்மனென்டா இருக்கப் போறோம். ஆளுக்கு ஒரு வேலை கிடைச்சா அப்புறம் இந்த மைதானத்தைத் திரும்பிப் பாப்போமா.. பாக்கத்தான் முடியுமா? இறந்த காலத்தை நினைச்சு பெருமூச்சுத்தான் விட முடியும்..." மூர்த்தி குரல் லேசானது.

"அயம் வெரி சாரி. எப்பவும் போலத்தான் நான் பேசினேன். சத்யன் இப்படி ரியாக்ட் பண்றவன் இல்ல. மாப்ள, வா, நேரா அவன் வீட்டுக்கே போய் மன்னிப்புக் கேட்டுடலாம். நீ சொல்ற பாய்ண்ட் வாஸ்தவம்தான். இங்க ஒக்காந்து பேசினோம், சிரிச்சோம்கறது இனிப்பானது. அதுல இது நெருடலா வந்துடுச்சு. நான் கொஞ்சம் எல்லையோட இருந்திருக்கலாம்."

"சீச்சி. முட்டாள். ஃபிரெண்ட்ஸ்க்குள்ள எப்பவாவது இந்த மாதிரி ஆகும்... ஆல் இன் தி கேம்..."

"இப்ப சத்யன் வீட்டுக்குப் போக வேண்டாம். அவங்கப்பாவுக்கு நம்மள கண்டா லேசான இர்ரிடேஷன். ரெண்டாவது, பையன் இப்பத்தான் போயிருக்கான். கோவமும், விறைப்பும் தணிஞ்சிருக்காது. அவனுக்குக் கொஞ்சம் டயம் குடுப்போம். அவனும் யோசிப்பான்."

"நோ. நோ. சத்யன் ரொம்பச் சாது. ஆனா மிரண்டுட்டா அவ்ளோதான். மாடர்ன் ரேடியோஸ் கவுசும் இவனும் ரொம்ப திக். ஒரு நாளைக்கு சத்யன் கைபட்டு ஒரு பல்பு விழுந்து ஒடைஞ்சுடுத்து. கவுஸ் கடுப்படிச்சுட்டான். அன்னிக்கு படி எறங்கினவன் தான். அதுக்கப்புறம் கவுஸ் எத்தினியோ வாட்டி கால்ல விழாத குறையா வந்தப்ப திரும்பிக்கிட்டான்."

சட்டென்று மௌனம் இறங்கியது.

"அப்ப வீட்டுக்குப் போவ வேணான்றியா..."

"ஆமாம். அவங்க வீட்டுல ஃபோன் இருக்கு. அவங்கப்பா ஆபீஸ் ஃபோன். ஒரு ஒம்போது மணிக்கு அடிப்போம். நீ பேசு. அப்புறம் நாங்க கலந்துக்கறோம்...'' பாஸ்கரன் சொன்ன யோசனையை அனைவரும் ஆமோதித்தனர். எனினும் சீனா முகத்தில் கலவரம் அடங்கவில்லை. கடிகாரம் பார்த்தான். ஒரு மணி நேரம் எப்படிப் போகுமோ...

மூன்றாவது முறை முயற்சி செய்த போது சத்யனின் எண் கிடைத்தது. யாரோ பெண் குரல். நல்லவேளை அவன் அப்பா எடுக்கவில்லை. சத்யா என்ற அழைப்பு சீனாவைத் தாண்டி இவர்களுக்கும் கேட்டது.

"அலோ. சத்யா... நான் சீனா பேசறேன் மாப்ளே..."

"......................"

"மாப்ள. ஐயம் வெரி சாரி. ஆங். சத்தமா பேசு.. காதுலயே விழலே."

"......................"

"மாப்ள. நான் வேணும்னு செய்யலடா. என்னவோ... ஆமாம்... ச்சீ... ஃபார்மலா கேக்கலடா... நீ எவ்ளோ வருஷப் பழக்கம்..."

சீனு தொடர்ந்து பேசாமல் கொஞ்ச நேரம் கழித்து போனை வைத்தான்.

"என்னடா. என்ன ஆச்சு?" டென்ஷன் ஆயினர் பாஸ்கரனும் மூர்த்தியும்.

"மொத்தக் கோவத்தையும் சட்னு தீர்த்துக்கிட்டான் மாப்ள..." மூர்த்தி சிரித்தான்.

"என்னடா சொன்னான்?"

"சொல்லலடா... பாடினான்டா. வாழ்க்கையென்றால் ஆயிரம் இருக்கும்."

திடீரெனப் பாடிய சீனுவைப் புரியாமல் பார்த்தனர், காத்திருந்த நண்பர்களும் தொலைபேசி பூத் பெண்ணும்.

# “இந்தத் தடவையாவது நேசமா இருப்பானோன்னு ஒரு நப்பாசை...”

**எழுத்தாளர் சு. சமுத்திரம், தாம் கதைகள் எழுதுவதற்குத் தூண்டுதலாய் அமைந்த பல்வேறு சம்பவங்களை மிகச் சுவைபட ‘எனது கதைகளின் கதைகள்’ என்ற புத்தகத்தில் விவரிக்கிறார். புத்தகத்தின் சில பக்கங்களின் சுருக்கம்.**

### அங்கே கல்யாணம்; இங்கே கலாட்டா

1950களில், பொது இடங்களில் நடந்த அரசியல் விவாதங்கள் அடிதடி அளவுக்குப் போய் விடும். தி.மு.க.வினர், நேரு, காமராஜ் போன்ற தலைவர்களையும், காங்கிரஸ்காரர்கள் அண்ணாத்துரையையும் கொச்சையாய் வருணித்த காலம். வீரமான புறநானூறு முழக்கங்களோடு, ஓசைப்படாத அகநானூறு நிகழ்ச்சிகளும் நடந்த காலம்.

இப்படிப்பட்ட காலப் பின்னணியில், எங்கள் பக்கத்து ஊரில் ஒரு வாத்தியாரும், அப்போதைய ‘பெரிய படிப்பான’ எட்டாம் வகுப்புப் படித்த ஒருத்தியும் காதலித்த நேரம். இருவரும் குலம் பார்த்துக் காதலித்ததால் பிரச்னை இல்லை. இல்லற ஒப்பந்த விழாவுக்கு யாரைத் தலைமைதாங்க வரவழைப்பது என்பதில் சிக்கல். பெண் வீட்டார் காங்கிரஸ்; மாப்பிள்ளை வீட்டார் தி.மு.க. பிரச்னை பெரிதாகி, இருதரப்பு தலைவர்களும் கடுமையாய் விமர்சிக்கப்பட்டார்கள். தொண்டர்கள் கம்பு தூக்கினார்கள். கடைசியில் அந்தத் திருமணமே நின்று விட்டது! அந்த ஆதங்கத்தில் ‘குட்டம்பட்டியில் கலாட்டா, சென்னையில் கல்யாணம்’ என்று ஒரு சிறுகதை எழுதினேன். எந்தத் தலைவர்களுக்காக, குட்டம்பட்டி கல்யாணம் நின்று போனதோ, அந்தத் தலைவர்களின் மகனுக்கும், மகளுக்கும் திருமணம் நடப்பதாகவும், இதில் சர்வகட்சித் தலைவர்கள் கலந்து கொள்வதாகவும் கதையை முடித்தேன். ‘அங்கே கல்யாணம், இங்கே கலாட்டா’ என்ற தலைப்பில் அந்தக் கதை விகடனில் வெளியானது. கதையைப் படித்த டில்லி தமிழர்கள், “சிரித்துச் சிரித்து வயிறு புண்ணானது; ஒரே தமாஷ்!” என்று சொன்னபோது நான் நொந்து போனேன்!

### கலெக்டர் வருகிறார்!

பஞ்சாயத்து வளர்ச்சி அதிகாரியாக செங்கை மாவட்டத்தில் ஸ்ரீபெரும்புதூர் ஊராட்சி ஒன்றியத்தில் பணியாற்றினேன். அந்தப் பகுதிக்கு கலெக்டர் வேட்டைக்கு வருவார். அவர் ஓய்வெடுக்கும் அறைக்கு வெளியே ஏக கெடுபிடி இருக்கும். கலெக்டர் முன்பு தாசில்தார்களும், ஆணையாளர்களும் குழைகிற குழைவு பார்க்க வேடிக்கையாக இருக்கும்.

அந்த சமயத்தில், ஒரு பஞ்சாயத்து யூனியனில் யாரோ ஓர் அலுவலர் கலெக்டரிடம் கோழி வறுவலையும், அதன் இதர வகையறாக்களையும் கொடுக்க, கலெக்டர், ஏன் இவ்வளவு பணம் செலவழித்தாய் என்று கேட்டார். அந்த ஆசாமியோ, ‘அவ்வளவும் ஒரு ரூபாய்தான்’ என்று சமாளித்திருக்கிறார். கலெக்டர் ஐ.ஏ.எஸ். ஆச்சே! விடுவாரா? அந்த ஆசாமியின் கையில் முப்பது ரூபாயைத் திணித்து, தினமும் ஒரு ரூபாய்க்கு ஒரு கோழி வாங்கி, தன் வீட்டுக்கு அனுப்பும்படி கேட்டிருக்



கிறார்!

இது நடந்ததோ, நடக்கவில் லையோ, நடந்ததாகக் கூறப்பட்ட செய்தி. இதை வைத்து, 'கலெக்டர் வருகிறார்' என்ற தலைப்பில் குமுதத்தில் ஒரு கதை எழுதினேன். சொந்தப் பெயரில் எழுத அச்சப்பட்டு (அரசு ஊழியனாச்சே!) 'கடல் மணி' என்ற பெயரில் எழுதினேன். அப்போது சேலத்தில் நடைபெற்ற கலெக்டர்கள் மாநாட்டில், பல தாசில்தார்கள் என் கதை வெளியான இதழை முப்பது பிரதிகள் வாங்கி, கலெக்டர்கள் கண்ணில் படும்படியாய்ப் போட்டதாக அப்போது டெபுடி கலெக்டராக இருந்த என் நண்பர் தெரிவித்தார்!




ஒரு கோழி, ஒரு ரூபாய் என்று சொல்லி அசட்டுத்தனமாய் மாட்டிக் கொண்டவருக்கு, 'பண்டாரம்' என்று பெயர் வைத்தேன். இந்தப் பண்டாரம் பிறகு என் பல சிறுகதைகளில் வந்தான்.

## நடை அலவன்ஸ்!

கர்நாடக மாநிலத்தில், மத்திய அரசு விளம்பரத் துறை தலைமை அதிகாரியாய் பெங்களூரில் இருந்தபோது, அங்குள்ள தலைமை கணக்காயர் அலுவலகத்தில் ஒரு சம்பவம் நடந்தது.

ஓர் ஆடிட்டரை மங்களூருக்கு டூர் அனுப்பினார்கள். ஒரே வாரத்தில் திரும்பி வர வேண்டியவர், ஒரு மாதமாகியும் வரவில்லை. அதிகாரிகள் குழம்பிப் போனார்கள். திடீரென ஒருநாள் அந்த ஆடிட்டர் திரும்பி வந்தார். ஒரு வாரத்துக்குள் திரும்பாமல், ஒரு மாதமானதற்கு எழுத்து மூலம் விளக்கம் கேட்கப்பட்டது. அந்த சூரர், தமக்கு, இலாகாவிலிருந்து அனுப்பப்பட வேண்டிய டூர் அட்வான்ஸ் (முன்பணம்) அனுப்பவில்லை; கையில் காசில்லாததால், ஒரு வார காலப் பணியை முடித்துவிட்டு, மங்களூரிலிருந்து, பெங்களூருக்கு (300 கி.மீ.) இருபத்தி இரண்டு நாட்களில் நடந்து வந்ததாய் எழுதிக் கொடுத்தார். அதற்காகத் தமக்கு நடை அலவன்ஸ் கொடுக்க வேண்டும் என்று ஒரு சட்ட விதியையும் குறிப்பிட்டிருந்தார்.

அதிகாரிகளால் அவரை ஒன்றும் செய்ய முடியவில்லை. கடைசியில், கெஞ்சிக் கூத்தாடி, அவரிடமிருந்து லீவு லெட்டர் எழுதி வாங்க வேண்டியிருந்தது. இதை 'நடந்தது' என்ற தலைப்பில் கல்கியில் கதையாய் எழுதினேன்.

## அன்பில்லாத அண்ணன்

நான் சுய விமர்சனக் கதைகளும் எழுதி

... என்னைப் படிக்க வைத்த என் சித்தப்பா இறந்தபின், எனது சித்தியும், குழந்தைகளும் சென்னையிலிருந்து, ஊருக்கு வந்து விட்டார்கள். மாதச் சம்பளக்காரனான என்னால், அவர்களுக்கு அதிகம் உதவ முடியவில்லை. என் சித்தியும் என்னிடமிருந்து, அன்பைத்தான் எதிர்பார்த்தாளே தவிர, பணத்தை அல்ல. வயது வந்த சித்தப்பா மகள் ஒருத்திக்குத் திருமணம் முடிவாகி, எனக்கு அழைப்பிதழும் வந்தது. நான் அந்த அழைப்பிதழைக் காட்டி, பிராவிடெண்ட் பண்டு லோன் போடப் போனேன். நம்மால் திருமணத்துக்கு உதவ முடியாவிட்டாலும், அந்த அழைப்பிதழையே லோன் போட மூலதனமாக்குகிறோமே என்று, எழுதிய விண்ணப்பத்தைக் கிழித்துப் போட்டேன். அந்த குற்ற உணர்வில், எழுதிய கதைதான் 'அன்பில்லாத அண்ணன்' (குமுதம்).

## மூஞ்சியும், முகரக் கட்டையும்

நான் கல்லூரியில் படிக்கும்போது, விடுமுறைக்கு ஊருக்குப் போவேன். ஓர் இளம்பெண் எனக்கு தூரத்து முறைப் பெண் தான் – லேசாய்ச் சிரிப்பாள். எனக்கு, படிப்பு போய்விடக் கூடாதே என்ற பயம். எச்சரிக்கை. அவளோ, என்னிடம் என்னென்னவோ பேசிப் பார்த்தாள். நான் என்னைக் கட்டுப் படுத்திக் கொண்டேன்.

ஒருநாள் என்னையும் மீறி, தனியா வந்த அவளிட ஏதோ பேச போனேன். உடனே அவள் 'முகரக் கட்டையும், மூஞ் சியையும் பாரு' என்றாள். முழு கருப்பனாகவும் நீளமான மூஞ்


சு. சமுத்திரம்




பற்கள் உடையவனாகவும் உள்ள நான். கோபத்தில் கண்சிவந்து, பதிலுக்குத் திட்டிவிட்டு, வந்து விட்டேன்.

நாலைந்தாண்டுகளுக்கு முன்பு - இருவருமே அரை கிழடுகளான பிறகு - சந்தித்தோம். அவளிடம் முகரக்கட்டை பற்றிக் கேட்டேன். அவள், தான் செல்லமாய் சொன்னதாகவும், நான்தான் அவளது காதலைப் புரிந்து கொள்ளாமல் திட்டி விட்டதாகவும் அங்கலாய்த்தாள். அன்புச் சக்தி எப்படி விபரீதமாகவும் மாறலாம் என்பதை வைத்து, 'கதிர் வராத பயிர்கள்' என்ற கதையை தேவியில் எழுதினேன்.

### சந்தேகத்தின் நன்மை

எங்கள் ஊருக்குப் பக்கத்து ஊரில் ஓர் இளம்பெண் இறந்து விட்டாள். தாய் வீட்டிலிருந்த அவளை, வெளியூரைச் சேர்ந்த கணவன் விஷம் வைத்துக் கொன்று விட்டதாக ஊரில் பேச்சு. இறந்த பெண் வீட்டில், அவளுடைய உற்றார், உறவினர்கள் கணவனை எதிர்பார்த்துக் காத்திருந்தார்கள். அவனையும் வெட்டி, அவளுக்காக வெட்டிய குழியிலேயே போட்டு விட வேண்டும் என்பது அவர்கள் முடிவு.

கணவனின் பெரியப்பா மகள், அந்த ஊரில் திருமணமானவள். விஷயம் அவளை எட்டியது. அண்ணன்காரன் தொலைவில் வரும்போதே, "அடே! அற்பப் பயலே! எங்க மதனியை விஷம் வெச்சாடா கொன்னே? வா! உன்னையும் வெட்டி, புதைக்கப் போறோம் பாரு!" என்று வாயிலும், வயிற்றிலும் அடித்தபடி அவனை நோக்கி ஓடினாள். அவனும் விஷயத்தைப் புரிந்துகொண்டு, விரைந்து ஓடி, உயிர் பிழைத்தான். இந்தப் பெண், இறந்த பெண்ணின் கணவனை, சாமர்த்தியமாய்ப் பேசி, தப்பிக்க வைத்ததாக ஊரார் பேசிய போது, அவள் உணர்ச்சிவசப்பட்டு, தார்மீகக் கோபத்தில் அப்படிச் செய்ததாக மறுத்தாலும், யாரும் நம்ப வில்லை. அந்தப் பெண்ணை, இறந்து போன பெண்ணின் அண்ணனாக மாற்றி, 'ஒரு சந்தேகத்தின் நன்மை' என்ற சிறுகதையை விகடனில் எழுதினேன்.

### சினிமாவும் நிஜமும் ஒன்றே!

என் வீட்டுக்குப் பக்கத்து வீட்டில் முப்பது வயதுப் பெண் ஒருத்தி இருந்தாள். கணவன்காரன் அவளைத் தள்ளி வைத்து விட்டான். இவள் கூலி வேலை பார்த்து, கொஞ்சம், கொஞ்சமாய்ப் பணம் சேமிப்பாள். ஐந்தாறு மாதம் கழித்து, அவள் கணவன் வீட்டுக்கு வருவான். பேண்ட், சட்டை போட்டு கிருதா, மீசையோடு இருக்கும் கணவனைப் பார்த்தவுடன் இவள் மயங்கி விடுவாள்.

அவனும் இவள் சேமிப்பினை வைத்து ஒரு வார காலம் அவளிடம் உல்லாசமாக இருந்துவிட்டு, முடிந்தால் அவள் நகை நட்டு எதையாவது வாங்கிக்கொண்டு போய் விடுவான். அவன் போனவுடன் இவள் குமுறிக் குமுறி அழுவாள். அவனைக் கண்டபடி திட்டுவாள். இனி வந்தால் அவனைச் சேர்க்க மாட்டேன் என்று சபதம் போடுவாள். எல்லாம் பிரசவ வைராக்கியம் போலத்தான்.

இதைப் பார்த்த என்னால் தாள முடியவில்லை. ஒருமுறை இப்படி ஏமாற்றி விட்டுப் போனவுடன், அந்த அக்காளிடம் போய் 'இப்படி ஏமாறலாமா?' என்று கேட்டபோது, அவள் அளித்த பதில் எனக்கு வியப்பைக் கொடுத்தது.

'நீ சொல்லறது நியாயம்தான் நயினா. ஆனாகாட்டி ஒண்ணு சொல்லறேன் கேளு. சினிமா பாக்கோம். அதுல வரது வெறும் கதைதான்னு தெரியும். ஆனாலும் அந்தச் சமயத்துல அதை நெசம்னு நம்பி அழுவறோம்; சிரிக்கிறோம். அது போலத்தான் இந்த கசமாலம் காசுக்காவ என்னை ஏமாத்தறான்னு எனக்கே தெரியும். ஆனாலும் அவன் பேசற சமயத்துல, சினிமாவுல நம்ம மறக்கிறது மாதிரி மறந்துடறேன். இன்னொண்ணு. இந்தத் தடவையாவது அவன் நெசமா இருப்பான்னு ஒரு ஆசை.' இப்படிச் சொன்ன அந்தப் பெண், ஏங்கி ஏங்கி, அழுதாள். பின்னாளில் இந்தச் சம்பவத்தை வைத்து குங்குமத்தில் ஒரு கதை எழுதினேன்.

(எனது கதைகளின் கதைகள்;
ஆசிரியர்: சு. சமுத்திரம்
வெளியீடு : ஏகலைவன் பதிப்பகம், சென்னை - 41. விலை ரூ. 45/-)

தொகுப்பு : **மௌஷ்மி**

புதிய




நவீன விஞ்ஞான முறையில் ரிஃபைன்ட் செய்யப்பட்டது

## ஆஹா ! நெய் போன்றது ! நெய்யின் சுவையுடையது !!
## ஆனா, கொழுப்பும், வாசனையும் கிடையாது.



கே.கே.ஆர். பாமாயில் அதிக ஊட்டச் சத்து மிக்கது. இதர சமையல் எண்ணெய்களிலிருந்து பல வகையில் மாறுபட்டதால் தனித்தன்மை வாய்ந்தது. உயர் தரமான கே.கே.ஆர் பாமாயில் பாம் பழத்திலிருந்து பிழிந்தெடுக்கப்படுகிறது. • வைட்டமின் A & E அதிக அளவில் நிறைந்துள்ளது • புரதச்சத்துக்கள் நிறைந்துள்ளது • கொலஸ்ட்ராலை கட்டுப்படுத்துகிறது • ஈரலுக்கு நன்மையானது • புற்று நோயை தடுக்கக்கூடியது.




இலவசச் சலுகை சென்னையிலும் அதன் புறநகர் பகுதிகளிலும் முடிவடைந்தது.

* கே. கே. ஆரின் செம் பனை பண்ணையில் இரண்டு யூனிட் (10 செண்ட் ஒரு யூனிட்) வாங்குபவருக்கு, ஒரு வருடத்திற்கு மாதந்தோறும் ஒரு லிட்டர் கே.கே. ஆர் பாமாயில் இலவசமாக வழங்கப்படும்.




மொத்த விற்பனையாளர்கள் தாலுகா வாரியாக வரவேற்கப்படுகின்றனர்




KKR

பாம் ஆயில் (இந்தியா) லிட்.,
NO. 121, மாதவரம் நெடுஞ்சாலை (வடக்கு),
பெரம்பூர், சென்னை 600 011. Ph: 5375456, 5376796.

ADEPT/KKR/96

**கே.கே.ஆர் பாமாயில், தூய்மை மற்றும் முழு குடும்பத்தின் ஆரோக்கியம்**

# என் நிலவிடம் கேட்டவை...

மௌனச் சுரங்கத்தினுள்
ஒரு வார்த்தை வைரக்கல்

அந்தக்
குளிர் புன்னகைக்கு
ஒரு கம்பளி உடை

ஓரப் பார்வையின்
ஒளியில் படிக்க
உன்னிதயக் கடிதம்

கல்லூரியில்
உன் - தரிசனப் பார்வை போல்
வரையறுக்கப்படாத
பேச்சுக்கள்.

அந்தச் சந்திப்புக்கு
நான்
அவசரமாய் வந்தும்
உன் தாவணித் துண்டின்
சாமர வீச்சு!

விடுமுறைக்கு ஒருமுறை
என்னிதய ரோஜாவிடம்
உன் -
காகித வண்டின் வருகை

மறுபடியும் ஒருமுறை
நிலவொளியில்
கடலோரச் சந்திப்பு

சோக வரட்சி
சுழலும் போதும்
ஒரு புன்னகை மழை

வாழ்வில்
நிலவாக மட்டுமல்ல
நிழலாகவும் இருக்கும் வரம்!

- நானா ஷியாம்
(மருதமுனை, இலங்கை)



# 1

பறவைகளின் கூவலைக் கேட்டுக் கண்விழித்தாள், அனு.

பறவைகளின் பாஷை, அவளுக்குத் தெரியாது. அது தப்பு இல்லை. என்றாலும், புரிந்து கொள்ள முடிகிறது. அவை, விடிகின்ற காலைப் பொழுதை வரவேற்கின்றன. இரவுகள் தொலைந்தமைக்காக, அவை சந்தோஷமடைகின்றன. இருள் என்பது எல்லாரையும் அச்சமூட்டும் விஷயம்தான் போலும்.

அனு, படுக்கையை விட்டு எழுந்து, ஜன்னல் ஓரம் வந்து நின்று, வெளியே பார்த்தாள். நுங்குத் தோல் மாதிரி வெளிச்சம் வெளியே பரவி இருந்தது. லேசாக, புகபுக வென்று மூச்சு விட்டுக் கொண்டு உறங்கிக் கொண்டிருந்தான் சபேசன். அவளுடைய கணவன். சற்றேறக் குறைய ஒன்றரை மாதத்துக்கு முன்தான் கைப்பிடித்துச் சொந்தமாக்கிக் கொண்டவன். என்றென்றும் அவனோடு தன் வாழ்க்கையை ஒப்புக் கொடுப்பதாக தீ வலம் வந்து, அக்கினி சாட்சியாக அவள் தத்தம் செய்து கொடுத்து, ரொம்ப நாள் ஆகிவிடவில்லை. அவள் கழுத்தில் அவன் கட்டிய தாலிச் சரடின் மஞ்சள், இன்னும் பிரகாசமாகவே இருந்தது.

ஏதோ ஒரு பெயர் தெரியாத பறவை, அவளை 'அனு' என்றது. அப்படி அழைப்பதாக அவளுக்குத் தோன்றியது. கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்தாள். அடைப்புக் கம்பி கதவு கூடே, நேரு காலனி அவள் முன் விரிந்தது. அச்சு பண்ணப்பட்டவை மாதிரி, ஒரே மாதிரியாக, சற்றும் வித்தியாசம் இல்லாமல், இரட்டைக் குழந்தைகள் மாதிரி இருந்தன, அந்தக் காலனி வீடுகள். நடுவில், மைதானம். சுற்றிலும் 'ப' வரிசை மாதிரி வீடுகள். மைதானத்தில், அங்கும் இங்குமாக நாலு தூங்குமூஞ்சி மரங்கள். ரொம்ப முதிர்ந்து வயசான மரங்கள்.



**பிரபஞ்சன்**

# பூக்கள் நாளையும் மலரும்



அல்லிக்குளத்தில் அவள் பிறந்து, வாழ்ந்து, புழங்கிய வீடு, இப்படி இருக்கவில்லை. அது, தோட்ட வீடு. சுற்றிலும் தென்னந்தோப்பு. நடுவில் வீடு. மாடுகள் கழுத்து மணி அசைய, எந்நேரமும் சத்தமும் ஆரவாரமும் கொண்ட வீடு அவளுடையது. வருவார் போவார் அதிகம். மதியமும் ராத்திரியும் பந்திக்கு இருபது முப்பது இலை போடும் பண்ணை வீடு.

சுற்றுமுற்றும் பார்த்தாள், அனு. ஈ, காக்கை மட்டும்தான் இருந்தது. மனித அரவம் மட்டும் இல்லை. திரும்ப எத்தனித்தாள்.

"யாரது... புதுசா வந்திருக்காப்பிலயா?" என்றது ஒரு குரல். அனு திரும்பினாள். ஒரு மாமி. ஈரப் புடைவை. பாதம் அப்பிய ஈர மண். சொட்டச் சொட்ட நீர்த் தலை.

"புதுசா வந்திருக்கோம். நேற்று ராத்திரிதான் வந்தோம்" என்றாள் அனு.

"ஓகோ... சபேசன்னுட்டு ஒருத்தர் மராமத்து இலாகாவிலே இருக்கிறவர்னு சொன்னாளே..."

"ஆங்!"

"என் பேர் ஜானகி. இங்கிருக்கிற வாண்டுகள் கூட என்னை ஜானு மாமிங்கும். அப்புறமா, சாவகாசமா வர்றேன். ஊர் புதுசு. உனக்கு 'ஹெல்ப்' தேவைப்படுமோல்லியோ... வர்றேன்" என்றபடி ஜானு மாமி நகர்ந்தாள். ஜானு மாமி நடப்பது, ஓடுவது மாதிரி இருந்தது, அனுவுக்கு.

உள்ளே திரும்பினாள். சபேசன், எழுந்து, கண்ணாடி முன் தலைவாரிக் கொண்டு இருந்தான்.

"யாரிட்டே பேசிக்கிட்டு இருந்தே?" என்றான் சபேசன்.

"யாரோ ஜானு மாமியாம். அப்புறமா, வர்றேன்னுட்டு போனாள்."

"ஜானு மாமியா?"

"தெரியுமா?"

"தெரியும். கிழவி, எமன்."

அவன் பாத்திரத்தை எடுத்துக்கொண்டு, பால் வாங்கி வரக் கிளம்பினான். படி இறங்கி, தெருவில் தென்பட்ட சபேசனைப் பார்த்தாள் அவள். தூக்குப் பாத்திரம், கமண்டலமாகத் தெரிந்தது அவளுக்கு. யாரோ, ஒரு ரிஷி குமாரன், இமயமலையை நோக்கிப் போவது போல உணர்ந்தாள் அவள். மூட்டை மூட்டையாக,

இரவு அவர்கள் கொண்டு வந்து சேர்த்த பொருட்கள் – எல்லாம் அவள் பிறந்த வீட்டுச் சீதனமாக்கும் – ஹாலை அடைத்துக் கிடந்தன. இவைகளையெல்லாம் பிரித்து அடுக்க வேண்டும். மலைப்பு ஏற்பட்டது அவளுக்கு. திடீரென்று, அவள் அம்மாவின் நினைப்பு வந்தது. இவள் புறப்படும்போது கட்டிக் கொண்டு அழுதாள். ஒற்றைக்கு ஒரு பெண் என்று செல்லம் கொடுத்து வளர்த்த பெண். என்ன பண்ண? 'பெண்ணாய்ப் பிறந்தால், இன்னொருத்தன் வீட்டுக்கு என்றைக்கிருந் தாலும் போக வேண்டித்தானே இருக்கிறது' என்றார்கள் உறவினர்கள்.

இந்நேரம், வீடாக இருந்தால், காப்பி ஏந்திக்கொண்டு காத்திருப்பாள், தாயம்மாள். வெந்நீர், காத்திருக்கும். துவைத்துப் பெட்டி போட்ட துணி தொங்கும், கொடியில். இட்லி, சூடாறிப் போகிறதே என்று கவலைப்படும் அம்மா...

அனுவுக்கு அழ வந்தது.

**வ**ள்ளி, கதவைத் திறந்துகொண்டு, ஆளோடியில் வந்து நின்றாள். இருபக்கமும் திரும்பி வேடிக்கை பார்த்தாள். காலில், ஐஸை மிதித்து மாதிரி இருந்தது. பால் பொட்டலம். எடுத்துக் கையில் வைத்துக் கொண்டாள். எதிர் போர்ஷனில், நிற்கும் அந்தப் பெண்ணைப் பார்த்தாள். அர்த்தநாரி சொல்லிக் கொண்டிருந்தது நினைவுக்கு வந்தது. அள்ளி, அனுவைப் பார்த்துச் சிரித்துத் தலையசைத் தாள். பிறகு அவளை நோக்கிச் சென்றாள்.

"மிஸ்டர் சபேசன் வீட்டுக்காரங்களா?"

அனு, முதலில் சற்று மிரண்டாள். பிறகு சமாளித்துக் கொண்டாள்.

"ஆமாம்."

"நான் வள்ளி. எங்க வீட்டுக்காரரும் உங்க வீட்டுக்காரரோடுதான் வேலை பார்க்கிறார். ரெண்டு பேருமே ஒரே காலேஜ்ல படிச்சவங் களாம்."

"உள்ளே வாங்களேன்..."

வள்ளி உள்ளே வந்தாள். பொருட்கள் மூட்டைகளாய் இருந்ததைக் கவனித்தாள்.

"இதையெல்லாம் ஒழுங்கு பண்ணவே, ஒருநாள் ஆகும். அவரை ஆபீசுக்கு அனுப் பிட்டு வந்துடறேன். நாம் சேர்ந்தே எல்லாத் தையும் அடுக்கலாம்."

"யாரோ ஜானு மாமியாம். அவங்களும் வர்றாங்களாம்."

"ஜானு மாமியா. ரொம்ப நல்ல மனுஷி... உங்க பேர்?"

"அனு— அனுசூயா."

"டிபனுக்கும் சாப்பாட்டுக்கும் எங்க வீட்டுக்கு வந்துடுங்க... எதிர் போர்ஷன்தான். இல்லைன்னா, நானே எடுத்து வந்துடறேன்."

"உங்களுக்கு எதுக்கு சிரமம்?"

"சிரமமாவது. ஒத்தாசைதானே? இந்த மாதிரி காலனியில, டவுன்லே, போர்ஷன் காரங்கதான் உறவும் சுற்றமும். கூச்சப்படாமே, எது வேணும்னாலும் கேட்கலாம்; நீங்க..."

"சரி."

**அ**னுவை, வள்ளிக்குப் பிடித்துப் போயிற்று. 'ஷேவிங்' செய்து கொண்டிருந்த கணவனிடம் சொன்னாள்.

"அந்த அனு, ரொம்ப நல்ல மாதிரிப் பெண்ணாய்த் தெரியுது... சபேசன் மாதிரியே ரொம்பவும் சங்கோஜி மாதிரி, தெரியுது."

"பாவம்" என்றான், அர்த்தநாரி.

"என்ன பாவம்?"

"சாமியாரைக் கட்டிக்கிட்ட அந்தப் பொண்ணுதான்... வேற யார்?"

"சாமியாரோ, சம்சாரியோ, சந்தோஷமா வாழணும்..."

"சந்தோஷமா வாழணும்னா, பணம் பண்ணத் தெரியணும்."

"பணக்காரங்க எல்லாம் சந்தோஷமா வாழலையே.."

வள்ளி, இட்டலி வார்த்துக் கொண்டிருந் தாள். கிரைண்டரில் அரைத்த சட்னிக்குத் தாளிதம் செய்தாள்.

குளியல் அறைக் கதவைத் தாழிடும் முன், அர்த்தநாரி சொன்னான் :

"பணம் இல்லாதவங்க, சந்தோஷமா வாழறதா தெரியலையே..."

ஆசைக்கும் பேராசைக்கும் மத்தியில் உள்ள கோடு எது? தேவையையும், அதீதத் தையும் பிரிக்கிற புள்ளி எது? எ த ன்



"தீபாவளிக்கு இரண்டாயிரம் ரூபாய்க்கு என் மனைவி பட்டுப் புடவை கேட்டா.. கன்னாபின்னாவென்று திட்டிட்டேன்."

"மனைவியையா?"

"இல்ல... நரகாசுரனை!"

– ஜெ. கீதா

# தீபாவளி திருநாளின்
# விசேஷ சேமிப்பு திட்டம்

## சில்வர் டெபாசிட் திட்டம்



டெபாசிட்டுகள் வரவேற்கப் படுகின்றன

**EXPRESS**
**FINANCIAL EXCHANGE LIMITED**

பாங்க் ஆப் அமெரிக்காவின் சார்பு நிறுவனம்

- வாகனங்களுக்கான கடன்கள்
- பங்குகள் மீதான கடன்கள்

அங்கீகரிக்கப்பட்ட டீலர் அமெரிக்கன் எக்ஸ்பிரஸ் டிராவலர்ஸ் செக்குகள்

பதிவு அலுவலகம்: நெ. 9, அட்வேல் டவர், தெற்கு போக் சாலை, சென்னை-600 017.
போன்: 4340325, 4340329, 4341403, ஃபாக்ஸ்: 4341518.

• சென்னை • ஹைதராபாத் • விஜயவாடா • விசாகப்பட்டினம் • பெங்களூர் • திருச்சி
• கும்பகோணம் • கோயம்புத்தூர் • பாண்டிச்சேரி

1996 மார்ச் 4ந் தேதி எகனாமிக் டைம்ஸில் வெளியான எமது சட்ட பூர்வ விளம்பரத்தைத் தொடர்ந்து இந்த விளம்பரம் வெளியிடப்படுகிறது.

Helios & Mathison



''சரி சரி... ரொம்பத்தான் பய முறுத்தாதீங்க! இனிமே நான் செஞ்ச தீபாவளி பலகாரத்தை சாப் பிடச் சொல்லி உங்களைத் தொந் தரவு பண்ண மாட்டேன். இறங்கி வாங்க!''

— எஸ்.எஸ். பூங்கதிர்

பின்னால் ஓடு கிறோம்? எதை இலட்சியம் என்று தீர் மானிக்கிறோம்? மெய் மானையா, மாரீச மானையா?

வள்ளி, சொல்லத்தான் நினைத்தாள். சொல்லவில்லை. விழுங்கிக் கொண்டாள். ஒரு வருஷமாகவே, நிறைய வார்த்தைகளை விழுங்கி விழுங்கி, அவை வயிற்றுக்குள் கல்லாய்க் கிடக்கின்றன. அகலிகைக் கல்லாய்...

கதவைச் சாத்திக் கொண்டு, கீழே இறங்கி, தெருவுக்கு வந்தாள். 'பப்ளிக் பூத்'துக்குச் சென்று டெலிபோன் செய்தாள். அதிர்ஷ் டம்தான். கோரிய எண் உடனே கிடைத்தது. பேசினாள். விடுமுறை என்றாள். காரணத்தைச் சொன்னாள். எதிர் போர்ஷன்காரிக்கு உதவ வேண்டும். 'இதுக்குமா விடுமுறை?' என்றது எதிர்க்குரல். 'பொய் சொல்ல விரும்பலை, தலைவலி, வயிற்றுவலி இருக்கவே இருக்கிறது. பொய்யைப் பள்ளிக்கூடத்திலிருந்தே தொடங்க வேண்டுமா?' தலைமை ஆசிரியப் பெண்மணி அரை மனசோடு சம்மதம் சொன்னாள். திரும்பும்போது, ஜனனி எதிர்ப்பட்டாள்.

"என்ன இத்தனை காலைலே?'' என்றாள் வள்ளி. கண்ணாடியை எடுத்துத் துடைத்துக் கொண்டாள். நாக்கால் எச்சில் பண்ணித் துடைத்துவிட்டுக் கொண்டாள், மேலும்.

''ஸ்பெஷல் கிளாஸ், மேடம்.'' ஜனனி, அவசரமாக இருந்தது தெரிந்தது.

"சரி" என்றதும், ஜனனி துள்ளிக் கொண்டு ஓடியதைக் காண, யோசனையாக இருந்தது. அவளுக்கு. நேற்று முன்தினம், சக ஆசிரியை ஒருத்திக்குப் பிரசவம் என்று மருத்துவமனைக் குச் சென்றவள், கடற்கரை வழியாகத் திரும்பினாள். காந்தி சிலைக்கு அருகில் அவர் களைப் பார்த்தாள். முதுகுப் புறம்தான் தெரிந் தது. ரோஸ் நிற ஜாக்கெட். தோள். தெரிந்த மனுஷி மாதிரி இருக்கிறதே என்று பார்வை கூர்மை பெற்றது. ஜனனிதான். அவள், பார்த்த மாத்திரத்திலேயே, ஒரு ஹீரோவை அச்சு பண்ணியது மாதிரி இருந்தாள்.

"எல்லாம் ஒழுங்காக ஓடும் வரை சரி.." என்று நினைத்துக் கொண்டாள்.

அர்த்தநாரி, சாப்பிட்டுக் கொண்டிருந் தான்.

"லீவ் சொல்லிட்டு வர்றேன்."

''என்னத்துக்கு? லீவ் இல்லேன்னு சொன்னியே."

"கேஷ் லீவ்தான். பரவாயில்லை. அனுவுக்கு உதவியா இருக்குமே."

அவன் அலுவலகம் புறப்பட்டான். டிபன் கேரி யரில், இட்டலிகளைப் போட்டுக் கொண்டு புறப்பட்டாள், வள்ளி. தலை யில் துண்டு கட்டிக் கொண்டு, காலனியின் சங்கச் செயலாளர், சுந்தா அவளை நிறுத்தி னார்.

"மிஸஸ் அர்த்தநாரி... எல்லாம் சரியாக இருக்கிறதா? ஏதாவது பிரச்னை இருக்கா. சொல்லுங்கோ."

"சுந்தா சார் மேற்பார்வையிலே என்ன குறை இருக்க முடியும்?"

சுந்தா தலையசைத்து, அந்தப் பாராட்டை ஏற்றுக் கொண்டார். நாலாம் பிளாக்கில் 'லைட்' போட்டுவிட்ட தகவலைச் சொல்லி விட்டு, "எல்லாம் ஒழுங்கா நடக்கணும். அது தான் என் பிரின்ஸ்பிள். எங்கே, டிபன் கேரியரோடு?"

வள்ளி பதில் சொல்லிவிட்டுக் கிளம்பும் போது, சுந்தா சொன்னார்.

''மிஸஸ். அர்த்தநாரி. இந்த வருஷம், பெண்கள் கிளப்புக்கு நீங்கதான் பிரசி டெண்டா வரணும். இந்தக் காலனியை ஒழுங்கா கொண்டு வரணும், என்ன சொல்றீங்க?"

காதில் விழாத மாதிரி புறப்பட்டாள் வள்ளி.

இரைக்க இரைக்க ஓடிவந்த ஜனனி, பேருந்து நிறுத்தம் வரும்போது, சரியாகப் பேருந்தும் வந்து நின்றது. காலை வேளை. கூட்டம் இல்லை. ஜனனிக்கு மகிழ்ச்சி கிளர்ந்தது. ஜன்னல் ஓரம் இருக்கை கிடைத்தது. அவள் காதுக்குள் குயில் கூவிக் கொண்டிருந்தது. காற்று, வளையம் வளை யங்களாக மாறி, அவள் காதுகளுக்கு மாட்டல் ஆவதாக அவள் உணர்ந்தாள். எல்.ஐ.சி. நிறுத்தத்தில் ஆல்பர்ட் காத்திருப்பானாக்கும். காத்திருப்பானா? காத்திருக்க வேண்டும். இல்லையென்றால், இரண்டு நாள் சண்டை

போட வாய்ப்பு கிடைக்கும். முகத்தைத் தூக்கி வைத்துக் கொண்டு, உதட்டைச் சுழித்தாலே போதுமே. ஆள் நொறுங்கிப் போவானே! அவள் சிரித்துக் கொண்டாள். மனசுக்குள் தான். முகம் சீரியசாக, நடத்துனரிடம் சீட்டு வாங்கிக் கொண்டாள். 'பட்டேல் பஜார்' மரங்கள், கையசைத்து 'ஹலோ' சொல்லின. சூரியனே, உருண்டு உருண்டு, அவளுக்கு வழிகாட்டிக் கொண்டு முன்னே போய்க் கொண்டிருந்தான். எழுபத்தைந்து பைசா டிக்கெட்டுக்கும் பத்து ரூபாயை வாங்கிக் கொண்டு முகம் சிணுங்காமல், மேலும் சிரித்தபடி சில்லறை கொடுத்தார், நடத்துநர்.

உலகில் சத்திய யுகம் திரும்பி விட்டதா, என்ன?

எல்.ஐ.சி. நிறுத்தத்தில் இறங்கினாள் ஜனனி. நிறுத்தம், வெறுமையுடன் இருந்தது. ஆல்பர்ட்டைக் காணவில்லை. காற்று நிறைந்த பலூனில் ஊசி வைத்தாற்போல, அவள் சுருங்கிப் போனாள். எத்தனை நாடகம் ஆடி, எத்தனை பொய்கள் சொல்லி, அவள் அங்கு சொன்ன நேரத்துக்கு வந்திருக்கிறாள். எல்லாவற்றிலும் ஒழுங்கு பார்க்கிற அப்பாவை ஏமாற்றி விட்டல்லவா வரமுடிந்தது? இவனுக்கென்ன கேடு?

ஜனனி, அவனுக்காகக் காத்திருந்தாள்.

சூரியன், இரக்கமில்லாமல் காய்ந்து கொண்டிருந்தான். தெரு, பெட்ரோலின் கரிப்புகையால் மூடப்பட்டு, ஏதோ கரித் துணியை நீளவாக்கில் விரிக்கப்பட்டது போல மல்லாந்து கிடந்தது. மனிதர்கள், பாம்பு போல் ஊர்ந்து செல்லாமல் நெட்டாக வளர்ந்து, நடந்து போய்க் கொண்டிருந்தார்கள். அவள் தன் கைவிரல் நகங்களைப் பார்த்தாள். நகங்களின் சிவப்பு வண்ணம், ரத்தம் கசிவது மாதிரி இருந்தது.

ஆல்பர்ட், ஒரு ஆட்டோவில் வந்து இறங்கினான். பணத்தைக் கடாசிவிட்டு, அவளிடம் வந்தான்.

"சாரிம்மா... ஊரிலேந்து அம்மா வந்துட்டாங்க... உடனே கிளம்ப முடியலை... சாரி... வெரி சாரி..."

இன்னும் சற்று போனால் கலங்கி விடுவான் போல இருந்தது. கலங்கட்டும். அவள் முகத்தை இயன்றவரை கடுமையாக வைத்துக் கொண்டாள்.

"வா.. பிரேக் ஃபாஸ்ட் சாப்பிட்டுக்கிட்டே பேசலாம்'' என்றபடி அவன் நடந்தான். அவளுக்கும் உட்கார வேண்டும் போல கால் வலித்தது. அவளும் அவனைப் பின்தொடர்ந்தாள். அவன் அணுக்கம், அவளை மென்மை அடையச் செய்தது. அவன் சொன்ன காரணம், நியாயமானதாக இருந்தது. இருந்தாலும் கோபத்தைக் கொஞ்ச நேரம் நீட்டலாம் என்று முடிவெடுத்தாள். இது அவனுக்கு அவள் விடுக்கும் எச்சரிக்கை. அவள் ஏன் என்னு முன்பே எண்ணெய்யாக வந்து நிற்க வேண்டாமா? இதைச் சாதாரணமாக விட்டால் பையன்கள் துளிர்த்துப் போய்விட மாட்டார்களோ?

இருட்டும் அவர்கள் மேசையில் மட்டும் கவியும் வெளிச்சமும், இதமாக இருந்தது. அவன் கேட்டான்.

"என்ன சாப்பிடறே? வழக்கம் போலத் தானே?"

அவளுக்கும், இந்த ஓட்டலில் பூரி பிடிக்கும். என்றாலும், அதை இன்று சாப்பிடக் கூடாது என்பது போல மனசில் வைரம் பொங்கியது.

"இல்லை. தோசை."

அவன் சிரித்தான். வெயிட்டரை அனுப்பிவிட்டுச் சொன்னான்.

''என் தங்கைக்குக் கல்யாணம் நிச்சயமாயிருக்கு. மாப்பிள்ளை இங்கே தலைமைச் செயலகத்தில் இருக்கிறாராம். அடுத்த செப்டம்பரில், நிச்சயம் பண்ணி இருக்கு.''

ஜனனியின் கோபம், மறைந்தே போயிற்று.

"பரவாயில்லையே'' என்றாள். சட்டென்று மனம் லேசாகியது. எங்கிருந்தோ மெல்லிசாக ஒலித்துக் கொண்டிருக்கும் பாட்டு, மிகவும் இனிமையாக இருந்தது. ஒளியும், நிழலுமாய் வெளிப்பட்ட ஆல்பர்ட், திடுமென அவளுக்கு மிக இன்றியமையாதவனாகத் தெரிந்தான். அவர்கள் இருவரும் இரு கண்களைப் போல. இரு நாசித் துவாரங்களைப் போல, இரு காதுகளைப் போல, ஒரு



''ராப்பிச்சைக்கு, நான் செஞ்ச தீபாவளி ஸ்வீட்டைப் போட்டது உங்களுக்கு எப்படிங்க தெரிஞ்சது?''

''பிச்சை எடுக்கறதை நான் நிறுத்தறதுக்கு உங்க மனைவிதான் காரணம்'னு மறுநாளே எங்கிட்ட சொன்னாளே!''

– தமாஷ்காரன்

காரியத்தையே சேர்ந்து செய்கிற இரு உருவங்கள் அவர்கள்.

மேசை மேல் படிந்திருந்த ஆல்பர்ட்டின் புறங்கையைக் கிள்ளினாள் ஜனனி.

'ஸ்ஸ்ஸ்' என்று வலிப்பது போலப் பாவனை செய்தான் அவன். அழகிய பாவனை. காதல் கூட பாவனைதானா?

ஜனனிக்கு அந்தச் சந்தேகத்தை அவனிடம் கேட்க வேண்டும் போல இருந்தது. கேட்டாள்.

"ஆல்பர்ட்... காதல் காதல் என்கிறார்களே, அப்படியானால் என்ன?"

அவன் சிரிக்கிறபோது, மீசையின் ஓரம் சற்றே வளைந்து, 'ட' ஆணியைப் படுக்க வைத்தது போலத் தெரிந்தது.

"தெரியலையா? இன்னிக்குக் காலைலே, அவசர அவசரமாக ஓடிவந்தோமே, அப்படி ஓடி வரச் செய்த தூண்டுதல், ஊக்கி, எழுச்சி, இப்படி ஏதோ ஒன்று."

ஆமாம். அப்படித்தான் இருக்க வேண்டும். குபுக்குபுக்கென்று நெஞ்சை அடைக்கிற தவிப்பு. மகிழ்ச்சியை மேலே பூசிய விதிர் விதிப்பு. அது மழையை ரசிக்கும். வெயிலைத் தாங்கும். மறு ஆத்மா எதையெல்லாம் ரசிக்குமோ, ஏற்குமோ அதையெல்லாம் தானும் ஏற்க வேண்டும் என்கிற ஆகுதி. நெருப்பைத் தீண்டுகிற இன்பம். காயிலே இனிக்கிற அபூர்வக் கனி. மனிதகுலச் சங்கிலி அறுபடாது இறுக்கிப் பிணைக்கிற வைரக் கொக்கி.

"அப்பாவை ரொம்ப நாள் ஏமாற்ற முடியாது" என்றாள் ஜனனி, கவலையோடு.

"கவலைப்படாதே. எல்லாம் நல்லபடியாக முடியும்."

"வரும்போது வள்ளி டீச்சர் என்னைப் பார்த்து ஒரு மாதிரியாக விசாரித்தது. விஷயம் தெரியுமோன்னு பயமா இருக்கு."

"வள்ளி யார்?"

"அர்த்தநாரீன்னு ஒரு லஞ்சப் பிசாசு. அவரோட மனைவி. ரொம்ப நல்ல டைப்."

"நாளைக்குக் காலேஜ் இருக்கா?"

"அரை நாள் இருக்கு."

"மத்தியானத்துக்கு மேலே மகாபலிபுரம் போலாமா?"

"சீ.. வேணாம்பா... எனக்கு பயமா இருக்கு."

அவன் முகம் சுருங்கியது. சிறுத்தது.

"என் மேல் உனக்கு நம்பிக்கை இல்லை. என்னை ரௌடின்னு நினைக்கிறே..."

"சீ.. அப்படி இல்லேப்பா... அப்படி நினைச்சிருந்தா அப்பா, அம்மாவை ஏமாத்திட்டு வந்திருப்பேனா?"

அவளுக்கு ஏனோ எரிச்சல் பொங்கியது. அந்தக் கோபத்துடனேயே, "சரி, போவோம்" என்றாள்.

(தொடரும்)



ஆசிரியர்: மந்திரிக்கு அழகு?
மாணவன்: வரும் பொருள் சுருட்டல் சார்.
-புளியறை கணேசன்



**"சின்ன வயசுல ஸ்கூல் பக்கம் தலை காட்டாததுக்கு தலைவர் இப்ப ஃபீல் பண்றாரு."**

**"ஏன்?"**

**"ஜெயில்ல கம்பியை சரியா எண்ணத் தெரியலையாம்!"**

**– எஸ்.எஸ். பூங்கதிர்**



● செல்லுலரின் லேட்டஸ்ட் உபயோகம், பரீட்சை எழுதும் மாணவ மணிகளுக்கு உதவுவதுதான். தன்னிடமிருக்கும் செல்லுலரில் ஒரு நம்பரை டயல் செய்துவிட்டு அமைதியாக செவி மடுத்தபின், 'டிக்டேட்' செய்யப்பட்ட விடைகளை எழுத ஆரம்பித்து விடுகிறான்! நாடு எவ்வளவு முன்னேறுகிறது.

– வடவள்ளி ராமசுப்ரமணியன்

புதன்கிழமைப் புயல் இன்னும் வீசத் தொடங்கவில்லை. பேட்டிக் கட்டுரைகள், சிறுகதைகள் என்று அனைத்தும் சீஃப் எடிட்டர் மேஜைக்குப் போயிருக்கின்றன. சனிக்கிழமை வெளிவரும் எங்களது வாரப் பத்திரிகைக்கு எல்லாம் ஆயத்த நிலையில்.... என்னுடைய பகுதிக்கான மேட்டர் மட்டும் இன்னும் தயாராக இல்லை.

''சுமன்! என்ன உங்க ஆலோசனைப் பகுதி மேட்டர் ரெடியா?'' எடிட்டர் அறையிலிருந்து இன்டெர்காம் அழைப்பு வந்தது.

"இதோ ரெடியாயிடும் சார்."

"இன்னிக்குச் செவ்வாய்."

"இன்ட்ரெஸ்டிங் லெட்டர்ஸ் எதுவும் வரலை சார்."

"நீ என்ன செய்வியோ தெரியாது. நைட்டு எட்டு மணிக்குள் என் டேபிளுக்கு ஆலோசனை நேரம் பகுதிக்கான மேட்டர் ரெடியா இருக்கணும்."

"கண்டிப்பா ஸார்."

மற்ற பத்திரிகைகளில் வருமே உடல் நலம். மனநலம், சட்ட ஆலோசனை, பொருளாதார ஆலோசனை அதுபோல் இல்லாமல், எந்த விஷயத்தின் மீதான சந்தேகத்திற்கும், கேட்கப்படும் விஷயத்தை அடிவரை ஆராய்ந்து கட்டுரையாக வெளியிடுவோம். அதனால் ஆலோசனை நேரம் பிரபலமானதைத் தொடர்ந்து, சுமன் என்ற பெயரும் வாசகர்



மத்தியில் மிகப் பிரபலமான ஒன்றானது. சுப்பிரமணியன் என் முழுப் பெயர்.

"மத்யான தபால் எடுக்க ரங்கசாமி போய்ட்டானா?" என விசாரித்தேன்.

போயிருப்பதாகத் தகவல் வந்தது.

இன்று செவ்வாய். இனி மேல் உருப்படியான ஆலோசனைக் கடிதத்தைப் பார்த்து, விஷயம் சேகரித்து, கட்டுரை எழுதி... முடியுமா? ஒவ்வொரு வாரமும் பத்திரிகைக்காரர்கள் ரத்தம் சூடாவதை மாற்றவே முடியாதா?

"சுமன்! உனக்கு ரெண்டு கடுதாசு வந்திருக்குபா..." ரங்கசாமி இரண்டு கடித உறைகளை என் மேசை மேல் வைத்து விட்டுப் போனான். இரண்டின் மீதும் ஆலோசனை நேரம் என்று மறக்காமல் குறிப்பிடப்பட்டிருந்தது. இரண்டு கடிதங் களுமே ஒரு கவிதையாக, ஒரு சிறுகதையாக, ஒரு சந்தோஷ அதிர்ச்சியாக மாறப் போவது அறியாமல் படிக்கத் தொடங் கினேன்.

அன்புள்ள சுமன் அவர்களுக்கு,

அன்பு. அன்பறிய ஆவல்.

முதலில் கடிதம் எழுத இது என்ன மிகப் பெரிய விஷயமா எனத் தோன்றியது. அதன் பிறகு இந்தக் கடிதம் எழுதுவதால் பலன் இருக்குமா என்ற ஐயம் ஏற்பட்டது. அதையும் மீறி இதை எழுதும்பொழுது தான் இது அவளுக்காகவோ, உங்களுக்காகவோ எழுதப்பட்ட கடிதம் இல்லை. எனக்காக நான் எழுதிக் கொண்ட கடிதம் எனப் புரிந்தது.

நான் யார் என்று முதலில் சொல்லி விடுகிறேன். அவள் யாரெனப் பிறகு சொல்

# அன்பு, அன்பறிய ஆவல்

கிறேன். முப்பத்தியாறு வயதாகும் நான் ஒரு மிகப் பின் தங்கிய நடுத்தர வர்க்கத்தைச் சேர்ந்தவன். நான்கு தங்கைகள். என் தந்தை வெறும் சமையல்காரராக இருந்து, செத்துப் போனவர். நான் எஸ்.எஸ்.எல்.ஸி.யுடன் படிப்பை முடித்து விட்டு, சின்ன கம்பெனிகளில் கணக்கெழுதியபடி, டைப் லோயர், ஹையர் முடித்து, ஷார்ட்ஹாண்ட் லோயர் (இங்கிலீஷ்) முடித்தேன். மோட்டார் டயர்களைத் தயாரித்து, ரீட்ரெட் செய்யும் ஒரு நல்ல கம்பெனியில் எனக்கு வேலை கிடைத்து பத்து வருஷமாகிறது. மாசம் பி.எஃப், எல்.ஐ.ஸி பிரிமியம், பி.எல் (இரண்டாவது தங்கையின் கல்யாணத்திற்கு வாங்கியது) பிடித்தம் போக இரண்டாயிரத்து முந்நூறு ரூபாய் வருகிறது. ப்ரைஸ் இன்டெக்ஸ் சிங்கிள் டிஜிட்டில் இருப்பதாக காவேரி முகர்ஜியோ, ஷிவேந்திர சுந்த்ராவோ டிடி1-ல் செய்தி வாசித்தாலும், புழு இல்லாத, மக்கிப் போகாத பச்சரிசி கிலோ எவ்ளோ தெரியுமா? பதினாறு ரூபாய். ஒரு தங்கையோட படிப்பும், ஒரு தங்கையோட கல்யாணமும் பாக்கி நிற்கிறது.

இதுவரையில் நான் பெண்களை நிமிர்ந்து பார்த்ததில்லை, மாலதி என் ஆஃபீஸில் க்ளெரிகல் அசிஸ்டென்டாக சேரும்வரை. காலையில் எட்டரை

சத்தியப்பிரியன்

மணிக்கு ரெண்டு பக்கெட் தண்ணீர் தெளித்து வாசல் கூட்டி விட்டுப் போகும் பாப்பம் மாவையும் சேர்த்து எங்கள் அலுவலகத்தில் எட்டு பெண்கள். ஸீனியர் அக்கவுண்டன்ட் பகவதி மட்டும் தான் நாற்பத்தைந்து வயதைக் கடந்தவர். டெஸ்பாட்ச் கலைச்செல்வியை முழுசாக பார்க்கவே முடியாது. சிரிப்பில், கண்களில், சாயலில் ஏதோ ஒன்று அழைப் பதுபோல் இருக்கும். மாலதி இந்த ரகமில்லை. வழித்து வாரிய கூந்தல் (நேர் வகிடு பளிச் சென்று தெரியும்). ஒருநாள் கூட பூ வைத்துக் கொண்டு வரமாட்டாள். அவள் ஃபைலை கம்ப்யூட்டரில் சேமித்து வைக்கும்பொழுது கவனித்தேன். அவள் வயது இருபத்தியெட்டு. கல்யாணமாகவில்லை. இன்னொரு முக்கிய விஷயம், அவள் இடது பாதம் பலம் கொண்டு தொண்ணூறு டிகிரி திருப்பியது போல் இருக்கும். எகிறி எகிறி நடக்கும்பொழுது எவ் வளவு முறை பார்த்தாலும் மனசுக்கு வேதனையாக இருக்கும். பொறுப்பே இல்லாத அப்பா, அண்ணாக்கள் மத்தியில் இவளது ஆயிரத்து எழுநூறு ரூபாய் சம்பளத்தில்தான் மொத்த குடும்பமும் கஞ்சி குடிப்பது பின் னால் தெரிய வந்தது. இதையெல்லாம் ஜீரணிக்க அவள் எந்த ப்ராண்ட் அன்டாசிட் குடிக்கிறாள் எனத் தெரியவில்லை. எப்பொழு தும் ஆயிரம் வாட்ஸ் பல்ப் மாதிரி ஒரு சிரிப்பு. சாயம் போன வாயில் புடைவை, கருகமணி மாலை (மிஞ்சிப் போனால் எட்டு ரூபாய் இருக்கும்), ப்ளாட்ஃபாரத்தில் வாங்கிய பத்து ரூபாய் ஹவாய் செருப்புடன் கூடிய அவளை நான் மானசீகமாக காதலிக்கத் தொடங்கி இரண்டு வருஷமாகிறது.

பார்றா நம்மை விடக் கேவலமா ஒரு ஜீவன் இருக்கு என்ற அடிப்படை மனுஷ வக்ரம்கூட அவள் மீதான ஈர்ப்புக்குக் காரண மாக இருக்கலாம். அவளிடம் இன்னும் வாய் விட்டுச் சொல்லாததன் காரணம், இரண்டு பேருமே வாழ்வில் தனிப் பிடிமானங்களுடன் மேல் எழுந்து வராததுதான். இந்த அமிழ்வே கூட அவளை கைக்கிளையாகக் காதலித்தால் போதும் எனத் தோன்றி இருக்கலாம். ஆனால் போன வெள்ளிக்கிழமை அரைநாள் விடுப்பு வேண்டும் என அக்கௌன்டன்டிடம் அவள் சொன்ன காரணம் என்னை அதிர வைத்தது. 'இன்னிக்கு என்னைப் பெண் பார்க்க வர் றாங்க'. அன்று இரவு மட்டும் விடியற்காலை மூன்றரையானது நான் தூங்குவதற்கு. என்ன செய்வதென்று தெரியவில்லை. என் பிரச்னை களை இப்படி வரிசைப்படுத்துகிறேன்.

1. என் வீட்டு பிரச்னைகள் தீர இன்னமும் நான்கு வருடம் ஆகும்.

2. இன்னமும் நான்கு வருடத்தில் என் வயது முப்பத்தைந்தைக் கடந்து விடும்.

3. மாலதியை நான் காதலிக்கிறேன் உயிருக்குயிராக.

4. அவளிடம் இன்னும் வாய்விட்டு என் காதலைச் சொல்லவில்லை.

5. வாய் விட்டுச் சொன்னாலும் இன்னும் நாலைந்து வருடம் அவளை காத்திருக்கச் சொல்ல எனக்கு என்ன உரிமை இருக்கிறது?

தயவு செய்து என் இந்தப் பிரச்னைக்கு தகுந்த ஆலோசனை வழங்குமாறு கேட்டுக் கொள்கிறேன்.

இப்படிக்கு,
சோமசுந்தரம்.

பி.கு.1
எக்காரணத்தைக் கொண்டும் கார்ல் மார்க்ஸை உதாரணம் காட்ட வேண்டாம்.

பி.கு.2
கடிதத்தைப் பிரசுரிப்பதாக இருந்தால் என் பெயரை ராமு, சோமு என வேறு பெயரில் பிரசுரிக்கவும்.

கடிதத்தை உறையில் பின் பண்ணி வைத்து விட்டு கண்களை மூடிக் கொண் டேன். முதலில் என் பத்திரிகை புத்திக்கு எட்டியது கடிதம் எழுதியவனுக்கு சிறந்த நடை உள்ளது. பயிற்சியும், இலக்கண அறிவும் இருந்தால் பெரிய எழுத்தாளராக வரலாம். இதுபோல ஏகப்பட்ட காதல் கடிதங்கள், (பதி னாறிலிருந்து அறுபது வரையிலானவர்களின்) வந்து விட்டதால் எனக்கு இந்தக் கடிதம் பெரிய பாதிப்பை ஏற்படுத்தவில்லை, இரண் டாவது கடிதத்தை படிக்கும் வரையில்.

முந்தைய கடிதம் கலங்கலாக இருந்தது. இந்தக் கடிதம் பிழைகள் அதிகமின்றி, எழுத் துக்கள் அச்சில் கோத்தவை போலிருந்தன.

திரு.சுமன் அவர்களுக்கு,
வணக்கம்.

நான் அதிகமாக புஸ்தகங்கள் படிப்பவள் இல்லை. மத்யான உணவு இடைவெளியில் என் அலுவலக சக ஊழியைகள் கொண்டு வரும் வார பத்திரிகைகளைப் புரட்டுவதுடன் சரி. தொடர்கதையின் இறுதியை அடுத்த வாரம் வரை ஞாபகம் வைத்துப் படிக்கும் அளவுக்கு வேறு மூளை ஆக்ரமிப்பு இல்லாத வள் இல்லை. ஆயினும் உங்களது வாரப் பகுதியில் வெளி வரும் ஆலோசனைப் பகுதி என்னைக் கவர்ந்து வருகிறது. இரண்டு மூன்று டைவர்ஸ் கேஸுக்கு தாங்கள் அளித்த ஆலோசனை அபாரம். உங்களை எனது சிறந்த ஆலோசகராகக் கருதி எனது பிரச் னைக்கு பதில் எழுதுமாறு கேட்டுக் கொள் கிறேன். When you start of thinking to solve a problem it is solved. என்பார்கள். இருந்தாலும் எழுது கிறேன்.

எங்கள் வீட் டில் சோற்றுக்குப் பஞ்சம் என்றாலும் வெட்டி சிரிப்புக்கும், திண்ணைப்



''பைக் ஓடறப்ப அடிக்கடி இரும்புற மாதிரி ஒரு சத்தம் வருதுங்க...!''

''அப்போ மூலிகை பெட்ரோல் போட்டுப் பாருங்க!''

— கே. அனிதா

பேச்சிற்கும் குறை விருக்காது. என் இரண்டு அண்ணன்மார்களும், ஒரு தம்பியும் அவன் ஒரு தொடர் கதையில் ஜெய்கணேஷ் வருவாரே அதே மாதிரி பொறுப்பற்றவர்கள். நான் ஒருத்தி சம்பாதிப்பதால்தான் குடும்ப வண்டி உருள்கிறது. இதன் காரணமாக இருபத்தெட்டு வயதாகும் என்னை இன்னும் கல்யாணம் செய்து கொடுக்காமல் மாதா மாதம் பொன் முட்டை பொறுக்குகிறார்கள்.

காது கிழியும் அளவிற்கு என் வீட்டாரின் அபத்த சிரிப்புகளையும், தற்புகழ்ச்சி பேச்சுக்களையும் கேட்டு வெறுத்துப்போன எனக்கு, சமீபமாக நான் வேலை பார்த்து வரும் கம்பெனியில், ஒரு சக ஊழியர் மீது பற்றுதல் ஏற்பட்டுள்ளது. எளிமையானவர். என்னைப் போலவே ஒரு பாழாய்ப் போன மிடில் கிளாஸ். அதிகம் பேச மாட்டார். பெண்களிடம் உயர்வாக காட்டிக் கொள்ள வேண்டும் என்ற அடிப்படை அலட்டல்கூட இல்லாதவர். ஏகப்பட்ட கமிட்மென்ட்ஸ் அவருக்கு உள்ளன. எனவே முப்பத்திரண்டு வயது கடந்தும் கூட திருமணம் செய்து கொள்ளாமல் இருக்கிறார். அந்தப் பொறுப்பு மிகு தன்மையே அவர் மேல் எனக்கு விருப்பத்தை ஏற்றி விட்டது. மானசீகமாக அவருடன் வாழத் தொடங்கி விட்டேன். இறுக்கமும், புழுக்கமும் நிறைந்த ஒரு ஸ்டோர் வீட்டிற்குள் நாலா பக்கமும் ஜன்னல்கள் திறந்து, வசந்தம் உள்ளே வந்தது போல உணர்கிறேன். என் தேவைகளை கவனிக்க, என் சின்ன ஆசைகளைப் பூர்த்தி செய்ய, என் கனவுகளோடு கைகோத்துக் கொள்ள, எனக்குள் பொங்கி எழும் அக்னி ஜ்வாலையை தணிக்க, எனக்கு ஒரு ஆண் துணை வேண்டும். இவராக இருந்தால் தவறில்லை எனப்படுகிறது.

அவரிடம் இதுபற்றி இன்னும் பேசவில்லை. 28 வயசுக்குப் பிறகு I love you சொல்வதற்கு கூச்சமாக உள்ளது. அதுவுமில்லாமல் என் சகோதரி போல் நீங்கள் என்று சொல்லி விட்டால் என்ன செய்வது? என்னைப் பெண் பார்க்கப் போவதாக பொய்யாக பயமுறுத்தியும் பயனில்லை. எனவே இந்தக் கடிதத்தை உங்கள் பத்திரிகையில் பிரசுரிக்கவும். உங்கள் பத்திரிகையை அவர் ரெகுலராக படிப்பவர் என்பதால் இந்தக் கடிதம் கண்ட பிறகாவது என் மனத்தைப் புரிந்து கொள்ளட்டும்.

இப்படிக்கு
மாலதி.

குறிப்பு:
எனது இடப்பாதம் பிறவி ஊனமாய் வளைந்திருக்கும்.

படித்து முடித்ததும் எனக்கு ஒன்றும் தோன்றவில்லை. மலைப்பாக இருந்தது. வேர்த்தது. தனித்தனியாக இரண்டு கடிதங்கள் இருந்திருந்தால் காதல் ஆலோசனைக் கடிதங்களுக்குக் கிடைக்கும் மரியாதைதான் இதற்கும் கிடைத்திருக்கும். குப்பைக்கூடை. எப்படி இவர்களால் ஒரே மாதிரி சிந்திக்க முடிந்தது?

இரண்டு கடிதங்களையும் எடுத்துக் கொண்டு சீஃப் எடிட்டர் டேபிளுக்குக் போனேன். படித்தார். என்னைப் போலவே அவருக்கும் சிலிர்த்தது.

"இவர்களுக்கு நாம் கண்டிப்பாக உதவ வேண்டும்!" என்றார், பரவசமாக.

"நிச்சயமாக." ஆமோதித்தேன்.

"இப்போது இரண்டு கடிதங்களையும் பிரசுரிப்போம். பின்பு அவர்கள் திருமண புகைப்படத்தையும் வேறு ஒரு இஷ்யுவிலே பிரசுரிப்போம்" என்றார் ஓர் உதவியாசிரியர்.

"ப்ச். அவங்க பிரியத்தை காசு பண்ணக் கூடாது. அப்புறம் இது போல காதலுக்கு யோசனை கேட்டு நூறு கடிதம் வரும். வேண்டாம்!"

"அப்போ என்னதான் செய்வது?"

எடிட்டர் என் முகத்தை ஆவலுடன் பார்த்தார்.

"நம் அலுவலக முத்திரை பதித்த உறைகளில் மாலதியின் கடிதத்தை சோமசுந்தரத்திற்கும், சோமசுந்தரத்தின் கடிதத்தை மாலதிக்கும் அனுப்பி வைக்கப் போகிறேன்."

"வார்ரே வ்வா" என எடிட்டர் துள்ளிக் குதித்தார்.

சிறிது நேரம் கழித்து "அப்பொ இந்த வார ஆலோசனைப் பகுதிக்கு என்ன செய்யப் போற?"

மீண்டும் தலையைப் பிய்த்துக் கொள்ள ஆரம்பித்தேன்.

**பி**ள்ளை ரொம்ப துஷ்டன், சதா அப்பா அம்மாவோடு சண்டை போடுகிறவன். அப்படிப்பட்ட பிள்ளையை அடி அடின்னு அடிச் சுட்டார் அப்பா! பையன் கோபத்தில் வீட்டை விட்டே போய்விட்டான். 'அவன் எங்கே போய் அலைகிறானோ? சாப்பாட்டுக்கு எப்படியெல்லாம் கஷ்டப்படுகிறானோ...?' என்று தாயார் கதறுகிறார்.

"பசியெடுத்தா, தானா வீடு வந்து சேர்வான். ஏன் கவலைப்படறே" என்று அப்பா சுலபமாகச் சொல்லி விடுகிறார்.

இந்த நேரத்திலே அந்த வீட்டுக்கு வந்தவர் ஒருத்தர், "உங்க பிள்ளையை அந்தச் சத்திரத்து வாசல்லே பார்த்தேனே..." என்கிறார்.

உடனே அங்கே போய், குழந்தைக்குப் பசியாற்ற வேண்டும் என்று அம்மா நினைக்கிறாள். நேரடியாகப் போய் உணவைக் கொடுத்தால், அவன் வாங்கிச் சாப்பிட மாட்டான் என்று தெரியும் அவளுக்கு. சத்திரத்து வாசலிலே இட்லி, தோசை போன்றவற்றை விற்கும் ஒரு கடையைப் போட்டாள். துணியால் முகத்தை மறைத்துக் கொண்டு அங்கே அடுப்படியில் உட்கார்ந்தபடி பலகார வியாபாரம் பண்ணினாள்.

மகன் வந்து சத்திரத்து வாசலிலே உட்கார்ந்தான்.

"அப்பா, உன்னைப் பார்த்தால் பசியாகத் தெரியறதே... ஏதாவது வாங்கிச் சாப்பிடேன்" என்றாள் அம்மா.

"எங்கிட்டே பணமில்லையே..." என்றான் மகன்.

"நிதானமாகக் கொடுக்கலாம். கையிலே பணம் கிடைக்கறச்சே கொடுத்தால் போதும்..."

மகன் பசியாறினான்! மறைந்திருந்து அந்தத் தாயார் மகனுக்கு ஊட்டினது போல, மஹாலக்ஷ்மி தாயார் நமக்கு மறைந்திருந்து கொடுக்கிறாள்.

பகவான் சொல்வதை நாம் கேட்காமல் போகும்போது அவன் நமக்கு தண்டம் கொடுக்கிறான். தாயார் பரிவு காட்டுகிறாள். பிறகு பகவானே நம்மை உய்விக்கறதுக்காக வேறு யார் மூலமாவது அனுக்கிரஹம் பண்ணி விடுகிறான்!

வேதம் சொல்கிறது-பகவான் நேரடியாக உதவாமல் வேறு ஒருத்தர் மூலமாகத்தான் செய்வான் என்று...

மஹாபலியின் அட்டகாசம் தாங்காமல் தேவர்கள் துன்பப்பட்டபோது, அதிதி அவனிடம் போய் வேண்டினாள். பகவான் நினைத்திருந்தால் தானே நேரடியாக தேவர்களுக்கு உதவியிருக்கலாம். ஆனால் அவன் என்ன பண்ணினான்...? ஓர் உயர்ந்த விரதத்தைச் சொல்லி, அதைப் பண்ணினால் கஷ்டம் நிவர்த்தியாகும் என்றான்!

அந்த விரதத்தைச் செய்து பூஜை பண்ணினாள் அதிதி... அந்த விரதத்திலும், எல்லா யக்ஞங்களிலும் ஆராதிக்கப்படுகிறவன் அந்த நாராயணன் தானே!

பித்ரு தேவதைகளுக்கு நாம் ஆராதனை செய்தால்கூட அது அந்த நாராயணனுக்குத்தான் போய்ச் சேருகிறது.

சிம்மாசனத்திலே உட்கார்ந்திருக்கும் ராஜாவுக்கு சேவகன் சந்தனம் பூசுகிறான்; பன்னீர் தெளிக்கிறான். அந்த ராஜா உடலை மறைத்து அங்கி அணிந்து கொண்டிருக்கிறார். அதற்கு மேலே பட்டு-பீதாம்பரம். அதற்கும் மேலே இன்னொரு அங்கி! சேவகன் தடவுகிற சந்தனத்தை அந்த ஆடை, ஆபரணமா ஏற்கிறது? உள்ளே இருக்கிற ஆத்மாதானே ஏற்கிறது!

அதுபோலத்தான், அதிதி செய்த விரதத்தின் பலன் பகவானையே போய் அடைந்தது. அவனே அதிதியின் மகனாய் அவதாரம் பண்ணினான்.

**க**ல்யாண காலத்திலே ஒரு மந்திரம் சொல்வதுண்டு. கோடி உடுத்தும்போது சொல்வது... "இவரே எல்லா ஜன்மாவிலும் எனக்கு பர்த்தாவாக இருக்க வேண்டும்..." என்று வேண்டும் மந்திரம்.

அந்நியோன்ய தம்பதிகள்- சிந்தையிலும் செயலிலும் ஒன்றுபடுபவர்களின் வீட்டிலே, மஹாலக்ஷ்மி வாசம் செய்வாளாம்.

அன்னியோன்ய தம்பதி என்றால்...? சீதையையும் ராமரையும்தான் முதல் உதாரணமாகச் சொல்லுவார்கள்.

கோதாவரி தீரத்திலே ராமனும் சீதையும் இருக்கும் நேரம்.

இருவரும் மௌனமாய் இருக்கிறார்கள். திடீரென்று ராமன் சிரித்தான்.

அவன் ஏன் சிரித்தான் என்று சீதாபிராட்டிக்குச் சந்தேகம் வந்தது. ஆனால் கேட்கத் தயக்கம். மனசுக்குள்ளேயே கேள்வியைக் கேட்டுக் கொண்டாள்.

சற்று தூரம் நடந்து போனதும் சீதை சிரித்தாள். அதைப் பார்த்துவிட்டு ராமன் கேட்டான்.

"சீதா! எதற்குச் சிரிக்கிறாய் நீ?" அவர் இப்படிக் கேட்டதும் சீதைக்குத் தைரியம் வந்ததாம்.

"நீங்கள் எதற்கு சிரித்தீர்கள்? அதை முதலில் சொல்லுங்கள்..." என்றாள்.

"நீதான் முதலில் சொல்ல வேண்டும்."

"அதோ, அப்படிப் பாருங்கள்...!"

– சீதை சுட்டிய திசையில் ஒரு யானைக் கூட்டம். அந்த யானைகளெல்லாம் ராமனின் கம்பீரமான நடையைப் பார்த்துவிட்டு, தங்களின் நடையை எண்ணி வெட்கம் கொண்டனவாம்! "அதைக் கண்டுதான் சிரித்தேன்" என்றாள் சீதை.

உடனே ராமன் சொன்னான்: "நானும் அதே காரணத்துக்காகத்தான் சிரித்தேன். சற்று முன் நாம் கடந்து வந்த அன்னப் பறவைகளின் கூட்டம் ஒன்று வெட்கித் தலைகுனிவதைக் கண்டேன். தாங்கள் நடையழகிலே உன்னிடம் தோற்றுவிட்டதை எண்ணித்தான் அந்த அன்னப் பறவைகள் வெட்கமுற்றன என்பது தெரிந்தது. அதைப் பார்த்துச் சிரிப்பு வந்தது."

அவனும் சிரித்தான்; அவளும் சிரித்தாள்! இருவருக்குமே மற்றவர் சிரித்ததற்கான காரணம் தெரியாது! ஆனால் இருவருமே 'நடை'யைத்தான் காரணமாகச் சொல்கிறார்கள்! இவர்கள் கருத்தொருமித்த தம்பதி என்றாகிறதல்லவா!

இப்படி கருத்தொருமித்து வாழ்க்கை நடத்தும் தம்பதிக்கு பகவான் அருள் செய்கிறான்.

யோக சித்தியை அடையும்படியான நிலையை ஒரு தம்பதி விரும்பினர். அதற்காக பகவானை நோக்கி இணையாக தபஸ் பண்ணினார்கள். பகவானும் அவர்கள் தவத்துக்கு இரங்கி பிரத்யக்ஷமானான். ஆனால், பகவானுடைய பேரழகைப் பார்த்ததும் அந்த தம்பதியின் மனம் மாறிவிட்டது! யோக சித்தியைக் கேட்பதற்குப் பதிலாக, "நீயே எங்களுக்குக் குழந்தையாகப் பிறக்க வேண்டும்" என்று வரம் கேட்டுவிட்டார்கள்!

பகவானும் அவர்களுக்கு அனுக்கிரஹம் பண்ணினான். அவர்களுக்குக் குழந்தையாய் அவதரித்தான். 'லக்ஷ்மிகர்பன்' என்று அவனுக்குப் பெயர் அந்த அவதாரத்திலே!

இப்படி வேண்டித் தவமிருந்து பெற்ற பிள்ளையாகத் தான் அதிதியின் கர்ப்பத்தில் வாமனனாக அவதரித்தார் பகவான். அந்த அதிதியையேதான் பின்னால் தேவகியாய்ப் பிறக்கச் செய்து, அவள் கர்ப்பத்திலே சாக்ஷாத் கிருஷ்ணனாய் அவதரித்தார். (ஆகையினாலே, கிருஷ்ணாவதாரத்துக்கு மூலமான அவதாரம் வாமனாவதாரம்தான்.)

ஆழ்வார்கள் வாக்கிலே வாமனாவதாரம் குறித்தும் கிருஷ்ணாவதாரம் குறித்தும் தான் நிறைய பாசுரங்கள் அமைந்துள்ளன.

வாமனாவதாரத்திலே பகவானுக்கு விசேஷமாக உபநயனம் நடக்கிறது! சூர்யனே வந்து குழந்தை வாமனனுக்கு காயத்ரி மந்திரத்தை உபதேசம் பண்ணுகிறார்!

இதைக் கேட்கவே எவ்வளவு அழகாயிருக்கிறது. அது சரி... பகவான் இங்கே பூமியிலே வந்து இப்படி உபநயனம் பண்ணிக் கொண்டான் என்றால் அதற்கு என்ன காரணம்...? அந்த ஸம்ஸ்காரம் தொடர்ந்து இங்கே நடக்கணும் என்பதற்காக! அந்த வாமனாவதாரத்தை நினைத்து வேண்டிக் கொண்டாலே குழந்தைகளுக்குச் சீக்கிரமாய் உபநயனம் ஆகிவிடுமாம்.



''உங்க அப்பாவுக்கு ரொம்ப திமிர்!''
''ஏங்க?''
''எனக்கு ரெட்டை மண்டையாம்... அவசியம் 'தலைகள் தீபாவளிக்கு வாங்க'ன்னு லெட்டர் போட்டிருக்காரு!''

– ஜெ. கீதா



**நா**ற்பது ஸம்ஸ்காரத்திலே மிக உயர்ந்த ஸம்ஸ்காரம் உபநயனம்தான். அந்த உபநயன மந்திரத்திலே என்ன போதிக்கப் படுகிறது.

"கர்மாவைப் பண்ணு..."

"பண்ணுகிறேன்..." என்று பதில் சொல்ல வேண்டும், உபநயனம் செய்து கொள்ளும் சிறுவன்.

''ஆசார்யரிடம் அபிமானமாக இருக்கணும்...''

"இருக்கிறேன்..."

"ஆசார்யருக்குக் குடை பிடிக்கணும்..."

"பிடிக்கிறேன்..."

"ஆசார்யர் உயர்ந்த ஸ்தானத்திலே உட்கார்ந்தால் நீ கீழே உட்காரணும்... அவர் உட்காரு என்று சொன்னால்தான் உட்காரணும்...''

"செய்கிறேன்."

''ஆசார்யருக்கு ஆசார்யர் பக்கத்திலே இருந்தால் அவரையும் வந்தனம் பண்ணணும்.''

"பண்ணுகிறேன்..."

இவ்வாறு வாழ்க்கை முறையை உபதேசிப்பதுதான் உபநயனம். அந்த சமயத்தில் அணிவிக்கப்படும் பூணூலும் பவித்ரமானது.

பூர்வ காலத்திலே ஒரு மகான் பூணூல் திரிப்பதையே தொழிலாகச் செய்து வந்தார். அதைத் தவிர வேறெதுவும் அவருக்குத் தெரியாது.

மந்திரம் சொல்லித் திரித்து, அதை பகவான் திருவடியிலே வைத்து எடுக்க வேண்டும். அப்புறம் ஓலைப் பெட்டியிலே பரம பவித்ரமாக அதை வைக்க வேண்டும். வெகு சிரத்தையாய் இதைப் பண்ணி வந்தார் அந்த மகான். யாராவது வந்து கேட்டால் அந்த யக்ஞோபவீதத்தை எடுத்துக் கொடுத்து அனுக்கிரஹம் பண்ணுவார்.

ஒரு நாள் அந்த மகானின் பத்னி அவரை வந்து சேவித்தாள். "நீங்கள் எப்போது பார்த்தாலும் இப்படிப் பூணூலைத் திரித்துக் கொண்டிருக்கிறீர்களே! நம் குழந்தைக்குக் கல்யாணம் பண்ண வேண்டாமா?" என்று நினைவூட்டினாள்.

"பக்கத்து தேசத்திலே ஒரு ராஜா, விசேஷமாய் எழுந்தருளியிருக்கிறார். அவரைப் போய் உதவி கேட்டால் கட்டாயம் வாரி வாரிக் கொடுப்பார். ஒரு தடவை போய்ப் பார்க்கக் கூடாதா?'' என்று யோசனையையும் சொன்னாள்.

மனைவியிடம் அவர் உறுதியாக ஒன்றும் பதில் சொல்லவில்லை. போய்த்தான் பார்ப்போமே என்று அரசனிடம் போனார். அவரிடமிருந்து பிரும்ம தேஜஸ் கொட்டுவதைப் பார்த்ததும் அந்த ராஜாவே எழுந்து நின்று விட்டார். முதலில் அவரை உட்கார வைத்தார்.

துரியோதனன் சபையிலே, பகவான் கிருஷ்ணன் நுழையும் போது யாரும் நின்று மரியாதை செய்யக்கூடாது என்று சகுனி உத்தரவு போட்டிருந்தானாம். ஆனால் பகவான் நுழைந்ததும் துரியோதனன் தன்னையறியாமலேயே தானே எழுந்து நின்றானாம்! அவன் பின்னோடேயே துச்சாதனனும் கர்ணனும் அந்தச் சகுனியும் கூட எழுந்து நின்றார்களாம்! அப்படிப்பட்ட தேஜஸ் பகவானுடையது.

அந்த மாதிரி, ராஜாவும் அந்த மகானின் தேஜஸுக்குக் கட்டுப்பட்டு எழுந்தார். அவரை அமர்த்தி, "சுவாமி உங்களுக்கு என்ன வேண்டும்? இவ்வளவு பிரும்ம தேஜஸோடு இருக்கிறீர்களே! உங்களுக்கு என்ன வேண்டுமானாலும் கேளுங்கள்; தருகிறேன்..." என்றார்.

கேட்டு அறியாதவர் அந்த ஏழை. எப்படிக் கேட்க வேண்டும் என்பது கூட தெரியவில்லை. யோசித்து விட்டுச் சொன்னார்:

"நான் ஒரு யக்ஞோபவீதம் (பூணூல்) கொண்டு வந்திருக்கிறேன். அதன் எடைக்கு நிகராகத் தங்கம் கொடுத்தால் போதும்..." அதைக் கொண்டு என் பெண்ணுக்குக் கல்யாணம் பண்ணிவிடுவேன்..."

"அது போதுமா? அதற்கு மேலே வேண்டாமா?"

"போதும்."

தராசைக் கொண்டு வரச் சொன்னான் ராஜா.

(தொடரும்)

போட்டிக் கதை - 10

# தீக்கும் தமிழென்று பேர்

பாறையின் நிழலில் நான் படுத்துக் கிடந்த நிலம் மட்டுமல்ல... எனது உள்ளமும் வறண்டு கிடந்தது. இன்று காலை அப்பா சொன்ன வார்த்தைகள் உள்ளத்து ஈரத்தை உறிஞ்சி விட்டிருந்தன.

'வேலை வெட்டியில்லாம தண்டச் சோறு தின்னுக்கிட்டு, பூமிக்குப் பாரமா இருக்கிறதைத் தவிர வேறென்னத்தை சாதிச்சிருக்கே?'

இருபது வயதில் தமிழ் இலக்கியம் முடித்தேன். இப்பொழுது வயது இருபத்தாறாகிறது. தமது மகன் ஆறு வருடமாக வேலையின்றி வெற்றுமனேயிருப்பது எந்தத் தந்தைக்குமே சலிப்பைத்தான் ஏற்படுத்தும். அந்தச் சலிப்பில் அவ்வப்பொழுது வார்த்தைகள் நெருப்பாய் வந்து விழும். இன்றைக்கு நெருப்பின் அனல் சற்று அதிகமாகவே சுட்டு விட்டது.

சுயநலமில்லாத பாசம் என்பதெல்லாம் ஒரு கால கட்டம் வரைதானா? அதன்பின் அது நிறம் மாறி விடுமா?

தந்தை தாய் தமர் தார மகவென்னும் இவையெலாம்
சந்தையிற் கூட்டம் இதிலோ சந்தேகமில்லை.

கல்லூரியில் படித்த தாயுமானவரின் வரிகள் நினைவில் மோதியது. உண்மையிலேயே உறவுகளுக்குள் நிலவுவது கொடுத்து வாங்கும் வியாபார பாசம்தானோ. தாயின் அன்பில்கூட பாதுகாப்பு சார்ந்த எதிர்பார்ப்பு நிறைந்திருக்கிறதோ...

இரண்டு நாட்களுக்கு முன் அம்மா உடுத்தியிருந்த கிழிந்த சேலையை கவனித்து விட்டு 'ஏம்மா... கிழிஞ்சதைக் கட்டியிருக்கே... வேற இல்லையா?' என்று கேட்டதற்கு 'ஆமா... நீ சம்பாதிச்சி வாங்கிட்டு வந்து தந்ததை பீரோவில அடுக்கி வைச்சிருக்கேன். தினத்துக்கு ஒண்ணா புதுசா கட்டிக்கிறேன். உள்ளதெல்லாம் கிழிஞ்சி கிடக்கு' என்றாளே...

நான் வெறுமனேயிருப்பது தாயிடம்கூட ஆற்றாமையைத் தோற்றுவித்து விட்டது.

நொந்து சுமந்து பெற்று நோவாமல் ஏந்தி முலைதந்து
வளர்த்து எடுத்து தாழாமே - அந்திபகல் கையிலே
கொண்டு என்னைக் காப்பாற்றும் தாய்.

பட்டினத்தார் பாடிய தாயின் அரவணைப்பு இப்பொழுது எனக்குக் கிடைக்காதா?

நான் பிடிவாதமாகத் தமிழ் இலக்கியத்தில் சேர்ந்ததில் அப்பாவுக்கும் அம்மாவுக்கும் விருப்பமில்லை. படிக்கப் படிக்க மூன்று வருடம் தேனாய்த்தான் இனித்தது. முடித்து விட்டு வெளியே வந்ததும்தான் யதார்த்தம் புரிந்தது.

'பாலிமர் சயின்ஸ்' படித்திருக்கிறாயா... 'கம்ப்யூட்டர்' தெரியுமா என்றுதான் தேடுகிறார்களே தவிர, தமிழ் யாருக்கும் தேவைப் படவில்லை.

'வேற பாடம் எடுத்துப் படின்னு அப்பவே நான் சொன்னேனே... கேட்டியாடா?'

'எனக்கு தமிழ்லதான் ஆர்வமிருந்தது!'

'அந்த ஆர்வந்தான் இப்ப வயித்தை நிரப்பப் போவுதா?'

பசுமாடுகளின் கழுத்து மணியோசை கேட்டது. அவற்றை மேய்த்துவிட்டு சோமன் திரும்பிக் கொண்டிருந்தான். கிராமத்திலிருக்கும் அனைத்து வீட்டு மாடுகளையும் சேர்த்து ஓட்டிக் கொண்டு போய் விட்டு விடுவான். தினத்திற்கு ஒரு வீட்டில் சாப்பாடு.

"காலையில நான் மாடுகளை ஓட்டிட்டு போறப்பவே படுத்திருந்தீக, அப்பவே யிருந்து இங்கயேதா இருந்தீகளா?'' என்றான்.

"ஆமா"

'மதிய சோறுகூட சாப்பிடலையா?'

அப்பொழுதுதான் எனக்கே உறைத்தது. பசியும் உணர்வுகளோடு மறத்து விட்டது போலும்.

மணியோசை தேய்ந்ததும் எழுந்து பொடி நடையாய் வீட்டையடைந்தேன். அம்மா வாசலிலேயே நின்றிருந்தாள்.

"எங்க போயிட்டே?"

"கரட்டாம்பாறைக்கு."

"உன்னோட வழக்கமான குட்டிச்சுவருக்குப் போயிருந்தியோ?" அப்பா உள்ளேயிருந்து கேட்டார்.

"அங்க போய் வீணா படுத்துக்கிடந்ததுக்கு நம்ம வயல்ல போய் கரும்புத் தோட்டத்துக்குக் காவல் காத்திருக்கலாமில்ல?"

நான் ஏதும் பேசவில்லை.

அம்மா தட்டை எடுத்து வைத்தாள். சாப்பிட விருப்பமில்லை. வெறுமனே கை அளைந்துவிட்டு கை கழுவி எழுந்தேன்.

"நாளைக்குக் காலையில நீ சீக்கிரமே எழுந்து வயலுக்குப் போய் தண்ணி பாய்ச்சிட்டு வரணும்."

"ம்..." என்றேன் பிடிக்காத தன்மையுடன்.

"என்ன ஐயா சலிப்போட சொல்றீக? படிச்ச படிப்புக்கு மண்வெட்டியைப் பிடிக்கறது கௌரவ குறைச்சலா நினைக்கறீகளா?"

"நான்தான் சரின்னு சொல்லிட்டேன்ல? அப்புறம் எதுக்கு இந்த வியாக்கியானம்?"

"கோபத்துக்கு ஒண்ணும் குறைச்சலில்ல. என்னைக்காவது ஒருநாள் செய்யச் சொன்னா அப்படித்தான் இருக்கும். தினம் போட்டு வாட்டினா சரிப்படும்."

"அதான் பேச்சிலேயே போட்டு வாட்டறீங்களே... இது பத்தாதா?"

கொல்லைப்புறத்தை அடைந்தேன். மனம் படபடத்தது. துவைக்கும் கல்லில் அமர்ந்தேன். வேப்பமரக் காற்று சில்லென்று வீசியது. வெள்ளி நிறப் பூக்கள் மணத்துடன் சிதறிக் கிடந்தன. உள்ளுக்குள் நன்றாக மூச்சை இழுத்துவிட்டுக் கண்மூடி புருவ நடுவே நிலைத்தேன்.

சஞ்சலப்பட்ட மனம் மெல்ல ஒருநிலை பெற்று அமைதியானது.



## உதாதிபன்

மறுநாள் விடியற்காலை ஐந்து மணிக்கே எழுந்து மார்கழி குளிருக்கு இதமாகப் போர்வையைப் போர்த்திக் கொண்டேன். அப்பாவும் குளித்து உடுத்தி முதல் பஸ்ஸுக்கே தயாரானார். வேதாரண்யம் வெல்ல மண்டிக்கு போகிறார்.

"நீ பாட்டுக்கு ஏதோ நினைப்பிலே இருந்துடாதே. ஒரு பாத்தி நிறைஞ்சதும் அடுத்ததுக்குத் திருப்பி விடு..."

"சரி..."

"பம்பு எடுக்கலேன்னா ரெண்டு வாளி தண்ணி கொண்டு பைப்ல முதல்ல ஊத்து."

"எனக்குத் தெரியாதா இதெல்லாம்..."

"ஆமாமா... படிச்சவங்க, தெரியாம இருக்குமா?"

அப்பாவின் குரலில் குத்தல் தொனித்தது. அந்நேரத்தில் விவாதம் வேண்டாம் என மௌனமாய் இருந்தேன்.

அப்பா முதலில் கிளம்பிப் போய் விட்டார். நானும் செருப்பணிந்து புறப்பட்டேன்.

"சாப்பாட்டுக்கு நேரத்தோட வந்துடு. எங்கயாவது படுத்துக் கிடக்காத..." அம்மா சொன்னாள்.

"சரி..."

நடந்தேன். ஊர்க்கோடியிலிருந்த விநாயகர் கோவிலைக் கடக்கையில் அரசமர நிழலில் யாரோ ஒரு அன்னியன் தென்பட்டான்.

கை தட்டினேன். அவன் என்னை நோக்கி வந்தான். கிட்டத்தட்ட என் வயது மதிக்கலாம். மெலிந்த தேகம். கையில் பெட்டி. முற்றிலும் விலகாத இருளிலும் அவனது கண்ணில் சோகம் தெரிந்தது.

"யார் நீ?"

"நான் சிலோனுங்க, அங்கேயிருந்து நேத்தைக்கு கோடிக்கரைக்கு வந்தேன். ஏற்கெனவே அங்க நெறைய அகதிகள் இருக்காங்க. அதனால கால்போன போக்கில் இந்த ஊருக்கு வந்து சேர்ந்தேன். ராத்திரியிலே அப்படியே படுத்துத் தூங்கிட்டேன்."

"சிலோனை விட்டுட்டு தமிழ்நாட்டுக்கு எதுக்கு வந்தே?"

அவனது கண்கள் அனிச்சையாகக் கலங்கின.'

"எங்கப்பாம்மா செத்துப் போய் பல வருஷமாச்சிங்க. சமீபமா எனக்குக் கல்யாணமாச்சு. போனமாசம் ஒருநாள் மிருகவெறி பிடிச்ச ஒரு கும்பல் எங்க கிராமத்துக்குள்ள நுழைஞ்சி, ஊரையே கொள்ளையடிச்சாங்க. அந்த பாவிங்க, கர்ப்பமாயிருந்த என் மனைவியையும் சிதைச்சி சூறையாடி.... நான் வேலைக்குப் போய்ட்டு திரும்பி வந்து பார்த்தப்ப அவ தூக்கில தொங்கிக்கிட்டிருந்தா. அதுக்குப் பிறகு அங்க இருக்க பிடிக்கல. கள்ளத்தோணி ஏறி வந்துட்டேன். இங்கயே ஏதாவது வேலை தேடி பிழைச்சுக்கலாம்னு..."

"உங்களுக்கெல்லாம் அடைக்கலம் தர தமிழ்நாடு என்ன தர்மசத்திரமா? நாங்களே இங்க வேலை கிடைக்காம அவதிப் படறோம்..."

"எங்களுக்கு தமிழ்நாட்டைத் தவிர வேற போக்கிடம் ஏது? நீங்களெல்லாம் எங்களோட சகோதரர்கள் இல்லையா?"

"தமிழ் பேசினா உடனே ஒண்ணாகிவிட முடியுமா... நீங்க யாரோ நாங்க யாரோ!"

"தனதன்னை ஈன்றவர்களை
சகோதரர்களேன்போம்
ஏனெனில் அவளது புதல்வர்களின்மூலம்
ஒன்றாம்
தமிழன்னை ஈன்றவர்களை
அன்னியனென்போம்
ஏனெனில் அவளது புதல்வர்களின்மூலம்
வெவ்வேறாம்
தனதன்னையின் கற்பு பரிசுத்தம்
என்கிறாய்... ஐயகோ
தமிழன்னையின் கற்புக்கோ களங்கம்
சேர்க்கிறாய்!"

எனக்குச் சுளீரென்றது.

"இது?"

"என்னோட கவிதைதான். அதுவும் இப்ப யோசிச்சி சொன்னது"

அவனிடமிருந்து கவித்திறனை சற்றும் எதிர்பார்த்திராத நான் அதிர்ந்தேன். கவிதையில் பொதிந்திருந்த காட்டமும், சாட்டையும் என்னைத் தாக்கின.

"உங்களுக்குக் கவிதை எழுதத் தெரியுமா?" என்னிடம் தானாகவே மரியாதை தட்டிக் கொண்டது.

"ம்... எம்.ஏ தமிழ் இலக்கியம் படிச்சிருக்கேன்."

"அங்க என்ன வேலை செய்துக்கிட்டிருந்தீங்க?"

"எஸ்டேட்ல தேயிலை பறிச்சிக்கிட்டிருந்தேன்."

"இவ்வளவு படிச்சிட்டு..."

"தமிழை நான் வேலைக்கான நோக்கத்தில வாசிக்கல. சம்பாதிக்கவும், வயிறை நிரப்பிக்கவும் மூலதனமா உபயோகப்படுத்தி அதனோட தரத்தையும், மதிப்பையும் குலைக்க எனக்கு விருப்பமில்லை! ஆத்ம பசிக்குத் தமிழ். வயிற்றுப் பசிக்குக் கூலி வேலை."

என் உடல் சிலிர்த்தது. கண் மூடினேன். அவனது கவிதை வரிகளும், வெளிப்பட்ட வார்த்தைகளும் தீயாய் என்னுள் பாய்ந்து உருக்கிப் புடம் போட்டது. கசடுகள் வழிந்து மனம் சுத்தமாகி, கண்ணீர் சுரக்க இமை திறந்தேன். அதற்குள் அவன் என்னிடமிருந்து விலகி நீண்டதூரம் சென்று விட்டான்.

யாரவன்?

என்னைத் தீயிலிட்டுப் புடம் போட்டு ஞானம் கற்பித்து, நான் புதுமனிதனாய்ப் பிறப்பெடுக்க உதவ வந்தவனோ!

அவனது பெயரைக்கூட கேட்கவில்லையே... சிறிதுநேரம் திக்பிரமையுடன் நின்றிருந்துவிட்டு வயல்காட்டை நோக்கி நடந்தேன். இப்பொழுது எனது நடையில் உற்சாகமும் தீர்க்கமான நம்பிக்கையும் மிளிர்ந்தது!

கையிலிருந்த மண்வெட்டி அமுத சுரபியாய்த் தோன்றியது.

## இதுவரை....

ஸ்ரீராம், மிகவும் ஆசாரமான குடும்பத்து மூத்த மகன். ஸாஃப்ட் வேர் நிறுவனத்தில் மதிப்பான வேலை. உடன் பணிபுரியும் சுகன்யாவுக்கும் அவனுக்கும் காதல். தங்கை வசந்தியின் கல்யாணம் முடிந்த பின் தன் காதலைப் பெற்றோரிடம் தெரியப்படுத்தி, திருமணம் செய்து கொள்ள வேண்டும், என்பது திட்டம். ஆனால் இவர்களின் காதல் விஷயம் பெற்றோருக்குத் தெரிந்துபோக, உடனடியாக அவர்கள் கல்யாணத்தை நடத்தி வைக்கிறார், அப்பா ராமநாதன்.

வங்காள அம்மாவுக்கும் தமிழ் அப்பாவுக்கும் பிறந்த சுகன்யா, மிக நவீனமானவள். பெற்றோர் சீக்கிரமே இறந்து விட்டதால் குடும்ப வாழ்க்கைக்கு ஏங்கியவள். அவள் எவ்வளவோ முயன்று தன்னை மாற்றிக் கொண்டபோதிலும் ராமநாதன் குடும்பத்தால் அவளை ஏற்க முடியவில்லை. அந்நியமாய் வெளியே நிறுத்தப்படுவதால் புண்பட்டுப் போகிறாள். எனவே தனிக்குடித்தனம் வைக்கிறார்கள், ஸ்ரீராம் - சுகன்யா. இந்த நேரத்தில், ஸ்ரீராமின் தங்கை வசந்திக்குத் திருமணம் நிச்சயமாகிறது. திருமணப் பொறுப்புகள் எதுவும் இவர்களுக்குத் தரப்படவில்லை. பண உதவியும் வேண்டாம் என்கிறார் ராமநாதன். ஸ்ரீராம், தானும் விலக்கப்பட்டிருப்பது உணர்ந்து மருகிப் போகிறான்.



**வ**யிற்றுக்குள்ளிருந்து பந்து பந்தாகக் கிளம்பித் தொந்தரவு செய்தது. வாஷ்பேசினுக்கு நேராக நின்று அதனுள் தலையைக் கவிழ்த்தபடி தவித்துக் கொண்டிருந்தாள் சுகன்யா.

'இந்தக் குட்டிப் பிசாசு வெளியே வர்றதுக்கு முன்னாலேயே இந்தப் பாடுபடுத்துதே...' என்று ப்ரியத்துடன் நொந்துகொண்டாள்.

தினமும் காலையில் எழுந்தவுடன் இப்படி வாஷ்பேசின் முன் பத்து நிமிடம் நிற்பதும், 'அப்பாடி' என்று மீண்டும் வந்து படுத்துக் கொள்வதும்...

"கொஞ்ச நாள் அப்படித்தான் இருக்கும்..." என்று டாக்டர் சொல்லிவிட்டார்.

ஸ்ரீராம் உடனடியாகப் பிள்ளைப்பேறு பற்றி மூன்று புத்தகங்களை வாங்கிப் படித்தான் : "இதெல்லாம் சகஜம்... கவலைப்படாதே" என்று தன் கவலையை மறைக்க முடியாமல் தோற்றான். காலைச் சடங்காக வாஷ்பேசின் நோக்கி அவள் நடக்க, நாய்க் குட்டியைப் போல அவனும் எழுந்து பின்னோடு போனான். சுகன்யாவின் முதுகை நீவி, தலையைப் பிடித்தபடி கூடவே நின்றான்.

இன்றைக்கு அப்படி இதம் தரவும், பிற்பாடு காப்பி தயாரித்துக் கொண்டு வந்து தரவும் ஆளில்லை. ஸ்ரீராம் பம்பாயிலிருந்து திரும்ப இன்னும் நான்கு நாட்கள் இருக்கிறது என்று கணக்குப் போட்டபடி மீண்டும் படுத்துக் கொண்டாள் சுகன்யா.

**வா**சல் மணி அழுத்தமாய் ஒலித்தது. 'யார் இந்த அதிகாலை நேரத்தில்...?' அலுப்புடன் உடலை இழுத்துக் கொண்டு வாசல் பக்கம் வந்தாள். ஜன்னல் வழியே எட்டிப் பார்த்தாள்... "குமார்."

கதவைத் திறந்து "வா, வா, குமார்! என்ன அதிசயம்! இவ்வளவு தூரம் வந்திருக்கே...?"

"குட்மார்னிங் மன்னி... எழுப்பி விட்டுட்டேனா..." - கேட்டவன் குளித்துவிட்டு கச்சிதமாக உடுத்தியிருந்தான். நெற்றியில் திருநீறு பளிச்சிட்டது.

"இல்லை குமார்... எழுந்து

ரமணி சந்திரன் ?

யாருக்காவது அனுப்பணும்னா அட்ரெஸ் எழுதிப் போஸ்ட் பண்ணிடுங்க. ஸ்டாம்பெல்லாம் ஒட்டித் தயாராய் இருக்கு... நான் வரட்டுமா? நேரமாச்சு. இன்னும் பந்தல்காரரை வேற பார்த்துட்டுப் போகணும்..."

"ஒரே ஒரு நிமிஷம் குமார்... இதோ காப்பி தயார்..."

"வேண்டாம் - இன்னொரு நாளைக்கு! இப்ப ஓடறேன்..."

அவன் கிளம்பிப் போன பிறகு கல்யாணப் பத்திரிகையை எடுத்துப் பிரித்துப் பார்த்தாள் சுகன்யா. வெள்ளை அட்டையில் வெளிர் நீல எழுத்துக்கள். வசந்தி – சந்திரசேகர் பெயர்கள் மட்டும் மற்ற வார்த்தைகளை விட நான்கு மடங்கு பெரியதா இருந்தன.

'இன்னும் கொஞ்சம் கவனமாக, அழகாக அச்சிட்டிருக்லாம்... 'க்ரீம்' கலர் அட்டையில் அரக்கு நிறத்தில் எழுத்துக்கள் வந்திருக்கலாம். ஏன்... சேகரின் ஏஜென்ஸி பணியாளர்கள் உதவியுடன் வடிவமைத்திருக்கலாமே...'

பத்திரிகையை மீண்டும் உறையிலிட்ட போது அதன் மீது ஒட்டியிருந்த ஒரு ரூபாய் ஸ்டாம்பு அவளைப் பார்த்துச் சிரித்தது. 'இந்தச் செலவு கூட உங்களுக்கு வைக்கலை பார்...'

செலவு கிடக்கட்டும். எந்த உதவியையும் ஸ்ரீராமின் பெற்றோர் இதுவரை கேட்கவில்லை. நிச்சயதாம்பூலத்துக்குப் பிறகு இரண்டு முறை அங்கே போய் வந்தாகிவிட்டது. ஒவ்வொரு முறையும் 'இப்ப ஒண்ணும் வேலை இல்லை...' என்று சம்பிரதாயமாகச் சொல்லியனுப்பிவிட்டார்கள். இங்கு குடித்தனம் வந்த நான்கு மாதங்களில் நாற்பது முறை அவர்களை வரச் சொல்லி அழைத்தாகிவிட்டது. பால் காய்ச்சிய தினத்தில் வந்ததோடு சரி... ஒவ்வொரு முறையும் ஒரு காரணம் சொல்லி ஒதுங்குகிறார்கள்.... ஒதுக்குகிறார்கள்.

இந்த எண்ணம் வலிமைப்படவேதான் சுகன்யா ஸ்ரீராமிடம் சத்தியம் வாங்கிக் கொண்டாள். இதோ நர்ஸிங்ஹோமில், டாக்டர் ஷியாமளா பரிசோதனைகளை முடித்து, கையுறைகளைக் கழற்றியபடியே "கங்கிராஜுலேஷன்ஸ்" என்று ஸ்ரீராமை உள்ளே அழைத்துச் சொன்னபோது, அவன் கண்கள், கலங்காத குறையாக இளகிப் போயின.

பாம்பே ஹல்வா ஸ்டாலில் பால்கோவா வாங்கிக் கொண்டு காரில் திரும்பியபோது, பீச் ரோடில் சிறிது நேரம் நிறுத்தி விட்டான் ஸ்ரீராம். "கனி, கனி, கனி!" அவன் கையைப் பிடித்துக் கொண்டு உணர்ச்சிவசப் பட்டான்.

கொஞ்ச நேரம் ஆயிடுத்து. உட்காரு... காப்பி எடுத்துட்டு வரேன்..."

"ஐயோ, சாரி மன்னி! அதெல்லாம் வேண்டாம். என் ஃப்ரெண்டோட மோட்டார் பைக்கைக் கடன் வாங்கிட்டு வந்திருக்கேன். எட்டு மணிக்கெல்லாம் அவன் ஆபீஸ் கிளம்பிடுவான். அதுக்குள்ளே அதைத் திருப்பித் தரணும்... அப்பா இதை உங்ககிட்டே குடுக்கச் சொன்னார்..."

ஒரு பிளாஸ்டிக் கவரை நீட்டினான். அதனுள் ஒரு கற்றை வெள்ளை உறைகள்.

"என்ன குமார் இது...?"

"வசந்தி கல்யாணப் பத்திரிகை. உங்களுக்கு வேண்டியவங்க, சொந்தக்காரங்க

14

உன்னை விடமாட்டேன்?

## தங்க நகை பரிசு!

இந்த இருபத்தாறு வாரத் தொடர், ஒவ்வொரு வாரமும் ஒவ்வொரு கதாசிரியர் பெயரில் வெளியாகி வருகிறது. ஆனால் அவர்களுள் ஒரே ஒரு நபர்தான் இதை எழுதி வருகிறார். தொடரை எழுதியவர் யார் என்பதைக் கண்டுபிடிப்பது உங்கள் சாமர்த்தியம். கடைசி வாரம் வரை காத்திருந்து, அந்த இதழில் வெளியாகும் கூப்பனில் விடை எழுதி அனுப்புங்கள். சரியான விடைக்கு, தங்க நகை பரிசு! பலர் சரியாக எழுதினால் குலுக்கலில் ஒருவரே பரிசு பெறுவார். ஆசிரியர் தீர்ப்பே இறுதி.

''என்ன? என்ன? என்ன?''

''ஐம் ஸோ ஹாப்பி, ஹாப்பி, ஹாப்பி.''

''சரி... எனக்கு ஒரு பிராமிஸ் பண்ணித் தருவியா...?''

''உனக்கில்லாததா...?''

''இப்போ இதைப் பற்றி உன் அப்பா, அம்மாகிட்டே எதுவும் சொல்ல வேண்டாம். வேற யார்கிட்டேயும் சொல்ல வேண்டாம். நான் கல்கத்தாவுக்கும் முகர்ஜி அங்கிளுக்கும் லெட்டர் போடப் போறதில்ல...''

''ஏன்...?''

''வேண்டாம்னா வேண்டாம்! இந்த விஷயம் நமக்கு மட்டுமே சொந்தமா இன்னும் கொஞ்ச நாளைக்கு இருக்கட்டுமே... திருட்டுத்தனமா 'லவ்' பண்ணின மாதிரி... திருட்டுத்தனமா இதையும் ரெண்டு மாசம் அனுபவிப்போம்... அப்புறம் தானே எல்லோருக்கும் தெரிஞ்சு போயிடும்!''

''உனக்குப் பைத்தியம்தான் பிடிச்சிருக்கு சுகன்யா....''

''ஆமாம்! பைத்தியம்தான் உன் மேல...'' கடற்கரை காற்று கலைத்துவிட்ட அவள் தலைமுடியை நெற்றியிலிருந்து விலக்கிவிட்டு முத்தமிட்டு விட்டான். தெருவிளக்கு வெளிச்சத்தில் அந்தக் காட்சியைப் பார்த்த பக்கத்துக் கார் தம்பதி சிரித்துக் கொண்டனர்.

''சரி... பிராமிஸ் பண்ணு...'' கையை நீட்டினாள்.

''முடியாது...''

''ப்ளீஸ்... ஸ்ரீராம்.''

''சின்னக் குழந்தை மாதிரி பிடிவாதம் பிடிக்காதே!''

''இந்த மாதிரி சமயத்துல பெண்கள் சின்னக் குழந்தையா மாறிடறது உண்டு...''

''பிடிவாதத்துலதான் நீ சின்னக் குழந்தையா இருக்கே சுகி... ஆனா உன் மனசுல நீ ரொம்பப் பெரிய ஆளு...''

''என்ன சொல்றே...?''

''எனக்கு உன்னைத் தெரியாதா...? எங்க அப்பா அம்மா நம்ம பேர்ல விட்டேத்தியா இருக்காங்கன்ற கோபத்துலதானே நீ இப்படி ஒரு பிராமிஸ் கேட்கறே...?''

சுகன்யா மௌனமானாள். அவளே ஆராய்ந்திராத அவள் அடி மனத்தின் ஆழத்தில், வட்டமிட்டுக் கொண்டிருந்த சின்ன வன்மத்தை மிகச் சுலபமாக தொட்டுக் காட்டி விட்டான் ஸ்ரீராம்.

ஒரு நிமிடம் முழுவதுமாகக் கடந்தபின் அவள் மீண்டும் பேசினாள்.

''நீ சொல்லுறதுதான் சரின்னு நினைக்கிறேன் ஸ்ரீராம்... பட் ஐ ஸ்டில் வான்ட் தட் பிராமிஸ். இந்தச் சந்தோஷத்தைப் பகிர்ந்துக்கற பக்குவம் எனக்கு வரவரைக்கும் இப்படியே நமக்குள்ளேயே அது இருக்கட்டும்.''

''சரி சுகி, ஐ பிராமிஸ்...'' அவனாகவே அவள் கைகளைப் பிடித்து அழுத்திய போது தெம்பாக இருந்தது.

''எனக்கும் ஒரு பிராமிஸ் வேணுமே...''

''என்ன?'' என்பது போல் அவனை நிமிர்ந்து பார்த்தாள்.

''நீ இப்படி மனசைப் போட்டு உழப்பி மோர்க்குழம்பு பண்ணக் கூடாது...''

அவள் சிரித்து விட்டாள். ''அது என்ன மோர்க் குழம்பு உதாரணம்...? கார்ன் சூப்னு சொல்லு... இல்லை மைதா கஞ்சின்னு சொல்லு... இன்னும் பொருத்தமா இருக்கும்...'' இயல்புக்கு வந்தவளாய்ப் பேசினாள்.

''ஓகே... ஐ பிராமிஸ்...''

''இந்த நேரத்துல நீ ரொம்ப சந்தோஷமா இருக்கணும் சுகன்யா...''

''ரொம்ப சந்தோஷமாத்தான் இருக்கேன். எனக்கென்ன குறைவு...'' என்றாள் மீண்டும் தழுதழுத்த குரலில். அந்தத் தழுதழுப்புக்குக் காரணம் நெகிழ்ச்சியா, வருத்தமா என்று புரியாமல் ஸ்ரீராம் குழம்ப ஆரம்பித்தான்.

இது முடிந்து பதினைந்து நாட்களுக்கு எந்த வித்தியாசமும் தெரியாமல் எப்போதும் போலவே உடம்பு இருந்தது.

# மணக்குது! மணக்குது!!

# சாம்பார், ரசம்

உபயோகியுங்கள் ருசி கூட்டும் பெருங்காயம் தூள், கட்டி.







**RUCHI-AGRO PRODUCTS PVT. LTD.**
50, Giriappa Road, Madras - 600 017
Tel : 8269290, 8269438, 8275048

---

மிகப்பெரிய ஏற்றுமதி ஆர்டர்கள் ரத்து செய்யப்பட்டதால்

## மகத்தான நகை ஆபரண விற்பனை

தங்க முலாம் பூசப்பட்ட வைர நகைகள் மதிப்பு ரூ.100,- முதல் 750,- வரை

**இப்போது ரூ.10/- முதல் 375/- வரை மட்டுமே**

புதிய மாடல் மீனாகாரி வளையல்கள், காதணிகள், வைர கம்மல்கள், பிரேஸ்லட், டைமண்ட் ப்ரூச், தங்க முலாம் பூசப்பட்ட சங்கிலி, முத்து மாலைகள், ஹேர்பின்கள், ஹேர் பேண்டுகள், ரப்பர் பேண்டுகள், மோதிரங்கள், நெக்லஸ் வகைகள் மற்றும் பல

ஒரிஜினல் ஹைதராபாத் முத்துக்கள் மதிப்பு ரூ.275/- இப்போது ரூ.95/- மட்டுமே

ரூ.250/- மதிப்புள்ள நகைகளை வாங்குவீர் மேலும் ரூ.100/- மதிப்புள்ள நகைகளை இலவசமாக எடுத்துச் செல்வீர்

**KHANNA HALL**

AA-5, 2nd Avenue, Anna Nagar, Chennai - 40. Near Roundtana Bus Stop, (Opp Shansi Restaurant). *Time : 10 A.M. to 9 P.M.*

80 X 20 Publicity

**தீபாவளி வரை மட்டுமே**

இந்த விளம்பரத்தை கொண்டு வருபவருக்கு சிறப்பு பரிசு வழங்கப்படும்

---

## கார்மெண்ட் சேல் (ரெடி மேடு விற்பனை)

**Any Item Rs.35/- Only**

சர்ட்கள், T. சர்ட்கள், பெர்முடாஸ், பேபி பேன்ட்கள், பாபா சூட்கள், ப்ராக்ஸ், ஸ்கர்ட்ஸ், டாப்ஸ் மற்றும் பல ரகங்கள்

**தீபாவளி வரை மட்டுமே**

**பாஞ்சாலி கோதண்டபாணி கல்யாண மண்டபம்**

173, புரசைவாக்கம் நெடுஞ்சாலை,
கெல்லீஸ் (அபிராமி தியேட்டர் அருகில்), சென்னை - 10

இந்த விளம்பரத்தை கொண்டு வருபவருக்கு சிறப்பு பரிசு வழங்கப்படும்.



கணவன்: ஆனாலும் மாப்பிள்ளை மகா அல்பம்.
மனைவி: ஏங்க?
கணவன்: தீபாவளி இனாம் வாங்க வந்த கூட்டத்தோட, முண்டாசைக் கட்டிக்கிட்டு நைஸா இவரும் சேர்ந்து வந்து கியூவில் நிற்கிறாரே!

—ஆலத்தம்பாடி ராஜகோபால்



''எனக்குள்ளே இப்படி ஒண்ணு இருக்குன்னு நம்பிக்கையே வரலை ஸ்ரீராம்...'' என்று சொன்ன தினத்திலிருந்து வயிற்றைப் புரட்ட ஆரம்பித்ததுதான்... தினமும் காலையில் அந்த இரண்டு மணி நேரத்தை ஓட்டுவதற்குள் இரண்டு யுகம் கடப்பது போலிருக்கிறது. அப்புறம் எல்லாம் முன்னைப் போல் சரியாகி விடுகிறது. ஏதோ கொலத்து வேலை செய்து விட்டு வந்தது போல பசியெடுக்கிறது. ஸ்ரீராம் சமைக்கப் பழகிக் கொண்டு, உப்பு கூடவும், குறையவும் செய்து தரும் உணவைக் காணாதது கண்டது போல் சாப்பிடுகிறாள்.

இப்போது அவன் இல்லாதது கையுடைந்தாற்போலிருந்தது.

"திரும்பி வர ஒரு வாரம் கூட ஆயிடும். அம்மாவோட வேணா போய் இரு சுகி."

"வேண்டாம். இங்க பக்கத்துல எல்லாரும் நல்ல மனுஷங்களாத்தானே இருக்காங்க! ஏதாவது உதவி வேணும்னா கேட்டுக்கறேன். நீ தைரியமா போயிட்டு வா. ஒண்ணு விட்டு ஒருநாள் பக்கத்து வீட்டு நம்பருக்கு போன் பண்ணு. மத்தியானம் இரண்டு மணிக்கு உன் போனுக்காகக் காத்திருப்பேன்."

அவள் போனுக்காகத்தான் காத்திருந்தாள். ஒருமுறை அடித்து, எடுப்பதற்குள் ஓய்ந்து போனது. ஸ்ரீராமாகத்தான் இருக்க வேண்டும். எஸ்.டி.டி. தொடர்பு தகராறு செய்கிறது. மீண்டும் போன் அடிக்கவில்லை. பதினைந்து நிமிடங்கள் கடந்து விட்டன. இன்னும் ஐந்து நிமிடம் பார்த்து விட்டுக் கிளம்பலாம் என்று முடிவு செய்த நேரத்தில் தன் வீட்டு இரும்பு கேட் திறக்கப்படும் பஞ்சம ஸ்வர ஓசை கேட்டது.

வாசலுக்கு விரைந்து எட்டிப் பார்த்தாள். வசந்தி!

"சரோஜா! நான் வரேன். ஸ்ரீராம் போன் பண்ணினா, நான் காத்துண்டிருந்துட்டு, இப்பத்தான் போறேன்னு சொல்லிடறீங்களா? திரும்பவும் கூப்பிடறதாயிருந்தால் ராத்திரி எட்டு மணிக்குக் கூப்பிடச் சொல்லுங்க..." பக்கத்து வீட்டுப் பெண்ணிடம் விடைபெற்றுக் கொண்டு வாசலை அடைந்தபோது, வசந்தி 'காலிங்பெல்லை' இரண்டாவது முறையாக அழுத்திக் கொண்டிருந்தாள்.

"மன்னி, வெளியில போயிருந்தேளா...?"

''இங்க பக்கத்து வீட்டுக்குத்தான் போயிருந்தேன். அண்ணா பாம்பே போயிருக்காரில்லே? மத்தியானமா அங்க போன் பண்ணுவார். பேசறதுக்காகப் போனேன்...''

"பேசிட்டேளா...?"

''இல்லை வசந்தி, அவருக்கு லைன் கிடைக்கல்லை போலிருக்கு... பரவாயில்லை. நீ வா உள்ளே...''

வாசல் கதவுப் பூட்டுத் திறந்து, உள்ளே போய் ஃபேன் சுவிட்சைப் போட்டாள் சுகன்யா.

''என்ன அதிசயம்; நீ மட்டும் தனியா வந்திருக்கே...? எப்படி வந்தே வசந்தி?''

"ஆட்டோவில் வந்தேன் மன்னி. ரொம்ப பயமாத்தான் இருந்தது. வழியும் சரியாத் தெரியலை. சுத்தி சுத்தி தேடி வர்றதுக்குள்ளே ஆட்டோ டிரைவருக்கு ரொம்ப கோபம் வந்துடுத்து..."

''ஒரு போன் பண்ணியிருந்தா நான் அழைச்சுண்டு வந்திருப்பேனே...''

''யாருக்கும் தெரியாம வரணும்னு வந்திருக்கேனே மன்னி... என் ஃபிரண்ட் பிரபா வீட்டுக்குப் போகணும்னு சொல்லித்தான் கிளம்பினேன். அப்பாதான் அவ வீட்டு வாசல் வரைக்கும் துணைக்கு வந்தார். திரும்பவும் நாலு மணிக்கு வந்து அழைச்சுண்டு போறேன்னு சொல்லியிருக்கார். அதுக்குள்ளே நான் அங்கே திரும்பிப் போகணும்...''

''ஏன் வசந்தி? இங்கே வரணும்னு சொன்னா அப்பா அழைச்சுண்டு வர மாட்டாரா...?''

"மன்னி, நீங்க விஷயம் புரியாம பேசிண்டிருக்கேள்...''

வசந்தியின் முகத்தைக் கூர்ந்து கவனித்தாள் சுகன்யா. கண்களில் மருட்சியுடன் சோகமும் ததும்பி, கண்ணீராக வெளிப்பட்டுக் கொண்டிருந்தது. உதடுகள் லேசாகத் துடிக்க ஆரம்பித்தன. சுகன்யாவின் பார்வையை நேருக்கு நேராகச் சந்திக்காமல் தலையைக் குனிந்து கொண்டாள்.

அவள் பக்கத்தில் நெருங்கி அமர்ந்து



''உங்ககிட்ட ஏகப்பட்ட அரசியல்வாதிங்க கன்சல்ட் பண்ணவர்றது வாஸ்தவம்தான். அதுக்காக 'சம்மன் ஸ்பெசலிஸ்ட்'னு நீங்க போர்டு எழுதி தொங்க விட்டுருப்பதெல்லாம் நல்லாயில்லை சார்!''

– குடந்தை எம். ராம்பிரபு



''என் அன்புக்கும், மதிப்பிற்கும், பாசத்திற்கும், ஆசிக்கும் உரிய உயிருக்கு உயிரான, உடன்பிறப்பான சீட கோடிகளே...''

''என்ன, சாமி புதுமாதிரியா பேசறார்?''

''சாமி, ஆறு மாதமா ஜெயில்ல ஒரு அரசியல் தலைவருடன் ஒரே அறையில் இருந்தாராம். அதான்...!''

– எஸ். சாந்தி



''தன்னை தாக்கி எழுதின பத்திரிகைக்கு தலைவர் எழுதின மறுப்புக் கடிதத்தை அதுல வெளியிட்டும் ஏன் தலைவர் சோகமா இருக்கார்?''

''அதை நகைச்சுவை கட்டுரைங்கிற தலைப்புல வெளியிட்டுட்டாங்களாம்; அதான்.''

– பா. ஜெயக்குமார்

கேட்டாள் சுகன்யா...

''வசந்தி, என்னாச்சு...? ஏதாவது பிரச்னையா...? எங்கிட்டே சொல்லலாம்னா சொல்லு...''

இந்தப் பரிவான வருடலுக்காகவே காத்திருந்தது போல் உடைந்து தேம்பினாள் வசந்தி...

''ஷ்... அழக்கூடாது. நான் இருக்கேன் இல்ல... என்னவானாலும் எங்கிட்டே சொல்லு. அண்ணாவும் நானும் இருக்கிற வரைக்கும் என்ன கவலை...? கல்யாணப் பொண்ணு இப்படி அழலாமா...?''

''எனக்கு இந்தக் கல்யாணமே வேண்டாம் மன்னி... ப்ளீஸ், என்னைக் காப்பாத்துங்க இதுலேருந்து...''

– சொல்லி விட்டு மேலும் பலமாக அழ ஆரம்பித்தாள் வசந்தி.

அவளை அப்படியே தன் தோளில் சாய்த்துக் கொண்டு முதுகில் தடவிக் கொடுத்தபடி, ''வசந்தி, அமைதியாய் இரு. இதைப் பாரு. அழக்கூடாது. எதுவானாலும் தைரியமாய் இருக்கணும்...'' என்று ஆறுதல் சொல்லும் போதே சுகன்யாவைக் கவலை அரிக்க ஆரம்பித்தது.

'பாக்கு – வெற்றிலை மாற்றி, பத்திரிகை அடித்த நிலையில் இப்படியொரு பிரச்னையா? என்னதான் நடந்திருக்கும்? ஸ்ரீராம் இந்த நேரம் பார்த்தா டூர் போய்த் தொலைக்க வேண்டும்...' அலுப்புடன் சோர்வும் சூழ்ந்து கொண்டது.

தோளைக் கட்டிக் கொண்டு விம்மிய பெண்ணை மெள்ள விடுவித்து அமைதிப் படுத்தினாள்.

''இதோ பாரு... இப்படி ஓரேயடியா அழுது, கல்யாணம் வேண்டாம்னா என்ன அர்த்தம்...? என்ன காரணம்னு சொல்லு.... அப்பா அம்மாகிட்டே சொன்னியா...?''

''நான் சொல்ற எதையும் அவா காது குடுத்துக் கேக்க மாட்டேங்கறாளே?''

மீண்டும் அழுகை பொங்கியது வசந்திக்கு...

''சரி. ஏன் கல்யாணம் வேண்டாங்கறே...? சேகரைப் பிடிக்கலையா...?''

சேகரும் வசந்தியும் அவ்வப்போது சேர்ந்து வெளியே போய் வருவது தெரிந்திருக்க, அந்த சந்தர்ப்பங்களில்தான் வசந்தியின் மனம் மாறிப் போயிருக்க வேண்டும் என்பதை சுகன்யாவால் யூகிக்க முடிந்தது.

'ஒருவேளை அவனுக்கு சிகரெட் பழக்கம்...? இல்லை மது அருந்துவது...? அது பிடிக்காமல் இந்தப் பெண் அரண்டு போய் விட்டாளோ...?'

காரணத்தை வசந்தியே சொல்லட்டும் என்று காத்திருந்தாள். ஒருவாறு கண்ணீர் அடங்கி, வசந்தி பேசியபோது சுகன்யாவுக்குச் சிரிப்புத்தான் வந்தது.

(தொடரும்)

## தில்லி நியூஸ் :



உத்தர பிரதேச தேர்தலில் ஜெயித்த பகுஜன் சமாஜ் கட்சி எம்.எல்.ஏக்கள் 67 பேரும், லக்னோவிலுள்ள அந்தக் கட்சி அலுவலகத்திலேயே குடியிருக்கிறார்கள். உள்ளேயும் பூட்டுப் போட்டிருக்கிறார்கள். வெளி 'கேட்'டையும் பூட்டிப் பாதுகாவல் போட்டு விட்டார்கள். எம்.எல்.ஏக்களைச் சந்திக்க விரும்பிய பத்திரிகையாளர்களை, கன்ஷிராமிடமிருந்தோ, மாயாவதியிடமிருந்தோ அனுமதி வாங்கிக் கொண்டு வாருங்கள் என்று திருப்பி அனுப்பி விடுகிறார்கள் காவல்காரர்கள்!

● நரசிம்மராவின் வலது கையாகச் செயல்பட்டு வந்த புவனேஷ் சதுர்வேதியை, கேசரி இப்போது செயல்குழு கூட்டங்களுக்கு அழைப்பதில்லை. ஆனால்

# மூப்பனார் அடிக்கும் கிண்டல்!

'செயற்குழு உறுப்பினர் அல்லாத பிரணாப் முகர்ஜியும், ஜி. வெங்கடசாமியும் மட்டும் எப்படி கூட்டத்தில் கலந்து கொள்ளுகிறார்கள்?' என்று புவனேஷ் சதுர்வேதி கேட்டதற்கு, இதுவரை பதில் இல்லையாம். உத்தரப்பிரதேசத்தில் மாயாவதியை ஐக்கிய முன்னணி ஆதரித்து ஆட்சி அமைக்க உதவ வேண்டும் என்கிற தீர்மானத்தை பிரணாப் முகர்ஜி எழுதினார். நரசிம்மராவ் குறுக்கிட்டு, மாயாவதிதான் முதலமைச்சர் என்று 'மீற முடியாத முடிவு' எடுத்திருப்பதாக ஒரு வரியைச் சேர்க்கச் சொன்னாராம்!

● ராமகிருஷ்ண ஹெக்டே கர்நாடக முதல்வராய் இருந்தபோது, முன்னாள் குடியரசுத் தலைவர் சஞ்சீவரெட்டிக்கு பெங்களூரில் வீடு ஒதுக்கினார். சஞ்சீவரெட்டி காலமானதும், பங்களாவைக் காலி பண்ணிவிட வேண்டும் என்று ஜே.எச். படேல் உத்தரவிட, மிஸஸ் சஞ்சீவரெட்டி, பிரதமர் தேவேகௌடாவுக்கு ஒரு கண்ணீர் கடிதம் எழுதிப் போட்டு விட்டார். தேவேகௌடாவுக்கு தர்மசங்கடமாகிவிட்டது. கர்நாடக முதல்வரிடம் மிஸஸ் சஞ்சீவரெட்டி வசிக்க, சிறிய பங்களா ஒன்றை ஒதுக்கிவிட்டு, பிறகு பழைய வீட்டைக் காலி செய்யச் சொல்லுமாறு போனில் கெஞ்சிக் கேட்டுக் கொண்டாராம்!

● சி.பி.ஐ. முன்னாள் இயக்குநர் மாதவன் போஃபர்ஸ் ஊழல் விசாரணையிலிருந்து விலகிக் கொண்ட பிறகு, சுப்ரீம் கோர்ட்டில் பிராக்டிஸ் செய்யும் வக்கீலாக மாறிவிட்டார் என்பது பழைய செய்தி. சமீபத்தில் ஓய்வுபெற்ற விஜயராமராவும் ஆந்திர பிரதேச உயர்நீதி மன்றத்தில் வக்கீலாகப் பணி புரியப் பதிவுசெய்து கொண்டிருக்கிறார். அவரைப் பார்த்து, நரசிம்மராவின் பாதுகாவலராய் இதுநாள் வரை இருந்து, இனியும் பதவி நீட்டிப்பு கிடைக்காது என்று தெரிந்து கொண்ட சரண் [illegible] ஹைதராபாத்தில் வக்கீலாகப் பதிவுசெய்து கொண்டு விட்டாராம்!

● ராஜ்யசபா எம்.பி.ஆன மூப்பனாருக்கு, எம்.பிக்கள்

## ஜாலிப்போட்டி-11 முடிவு

ஒளிந்திருந்த தலைப்பு:
**தானம் தந்துவிட்டுத் தவிக்கிறார்கள்**

சரியான விடை எழுதி, குலுக்கலில் ரூ.5000 பரிசு பெறுபவர்:

**எஸ்.பூமாதேவி,
பிளாக் நம்பர் c/10
No. 17-B,
மேலப் பொன்னகரம்
5-வது தெரு,
ஹவுசிங்போர்டு
காலனி,
மதுரை-16**



"'ஷட்டர்ஸ்' இல்லாத கட்டடத்துலதான் கம்பெனி வச்சி நடத்தணும்னு சட்டம் போடணும்."

"ஹூம். உன்னைப் போய்க் கேட்டேன் பாரு, ஃபைனான்ஸ் கம்பெனிங்க இஷ்டத்துக்கு இழுத்து மூடிட்டுப் போறதை தடுக்கிறது எப்படின்னு!"

-ஆலத்தம்பாடி
ராஜகோபால்

சிலருக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் தனி பங்களா கொடுக்கப்படவில்லை. அவர் வசிப்பது 'வெஸ்டர்ன் கோர்ட்' என்கிற பல மாடிக் கட்டடத்தில். அதனால் இப்போதெல்லாம் மூப்பனாரிடம் 'தனி பங்களா கிடைக்கவில்லையா?' என்று கேட்டால், 'வீட்டை விட 'கோர்ட்டில்' இருப்பதே எனக்குப் பிடிக்கிறது!' என்று கிண்டலடிக்கிறார். நரசிம்மராவ், சுக்ராம், ஷீலா கவுல், சதீஷ் சர்மா எல்லாரையும் குத்திக்காட்டுகிறாரோ என்று மூப்பனாரின் ஆதரவாளர்கள், அவர் பதிலை ரசிக்கிறார்கள்.

● உத்தரபிரதேசத்தில் கடைசியில் பகுஜன் சமாஜ் கட்சியின் கைக்குத்தான் ஆட்சி போகும் போல தெரிகிறது. சமாஜ்வாதி கட்சியின் தலைவர் முலாயம் சிங் யாதவ் தமது சட்டசபை உறுப்பினர் பதவியை ராஜிநாமா செய்து விட்டார். அவரது நம்பிக்கைக்குரிய அமைச்சர் பேனி பிரசாத் வர்மாவும், நண்பர் ரேவதி ரமண் சிங்கும் லக்னோவிலேயே தங்கி, கன்ஷிராமின் கட்சிக்காரர்களிடம் கிட்டத்தட்ட சமரசம் பேசி, ஒரு முடிவுக்கு வந்து விட்டார்கள். 'நாங்களா? சமரசமா?' என்று இருவருமே வெளிப்படையாக மறுத்து வந்தாலும், பேச்சு வார்த்தைகள் நடந்தன என்பது உண்மையாம்.

● தில்லியில் டிங்கு ஜுரம் பரவியதற்கு மிக மோசமான சுகாதாரக் கேடுகள்தான் காரணம். ஆனால் முதல்வரும் துணை நிலை ஆளுநரும் கூட இதை அரசியலாக்கி ஒருவர் மீது ஒருவர் குற்றம்சாட்டிக் கொண்டிருப்பதை அறிந்த மக்கள் மிகவும் நொந்து போய் இருக்கிறார்கள். 88ல் காலரா தாக்கிய போது, பிரதமராயிருந்த ராஜீவ் காந்தி, அதிகாரிகள் புடைசூழ எல்லா இடங்களையும் நேரிடையாகப் போய்ப் பார்த்து, சில அதிகாரிகளை வீட்டுக்கனுப்பியும், சிலரை இடமாற்றம் செய்தும் அதிர்ச்சி வைத்தியம் செய்ததை எல்லாருமே நினைத்துப் பார்க்கிறார்கள்.

● அண்மையில் நடைபெற்ற ஜவாஹர்லால் நேரு பல் கலைக் கழக மாணவர் யூனியன் தேர்தலில், பா.ஜ.க.வின் அகில் பாரதிய வித்யார்த்தி பரிஷத் அமோக வெற்றி அடைந்திருப்பது அதிகார வர்க்கத்துக்குக் கொஞ்சம் அதிர்ச்சியைக் கொடுத்திருக்கிறதாம்.

● தில்லியின் வட பகுதியில் ஒருசில இடங்களில் குரங்குகளின் தொல்லை அதிகம். டீக்கடையில் வேலை பார்க்கும் பன்னிரண்டு வயதுப் பையன் ஒருவன் மொட்டை மாடியில் தூங்கிக் கொண்டிருந்தான். ஆறேழு குரங்குகள் அவனைக் கடித்துக் குதறி விட்டன. பயந்து போய் இரண்டாவது மாடியிலிருந்து குதித்தான். ஏகப்பட்ட காயங்கள். செயின்ட் ஸ்டீபன்ஸ் ஆஸ்பத்திரியிலும் சரி, ஹிந்துராவ் ஆஸ்பத்திரியிலும் சரி, அவனைச் சேர்த்துக் கொள்ளவே மறுத்து விட்டார்கள். கடைசியில் ராம் மனோகர் லோகியா மருத்துவமனையில் சேர்த்தும், ஐந்து மணி நேரம் கழித்துப் பையன் மரணம் அடைந்தான். தில்லி மாநகராட்சிக்கு எத்தனையோ தடவை முறையிட்டும் ஒன்றும் கவனிக்கவில்லை என்கிறார்கள் அந்தப் பகுதி மக்கள்.

— நியூஸ்வாலா

குமுறல்

குமுறல்

● உடனடி லாட்டரி, ஒரு நெம்பர் லாட்டரி, தங்கு தடையின்றி விற்கப்படுவதால் சீரழியும் குடும்பங்கள் ஏராளம். சூதாட்டத்தை ஊக்குவிக்கும் இந்த அரசு மக்களின் கோபத்துக்கு, குறிப்பாக பெண்களின் சாபத்துக்கு ஆளாகிறது. லாட்டரி சூதாட்டத்தை ஒழிக்க சட்டம் இயற்றக்கூடாதா?

திருப்பூர், என். ரவிச்சந்திரன்.

●● விழுப்புரத்தில் தி.மு.க. மாணவரணி சார்பில் பொதுக் கூட்டம் தொடங்குவதற்கு முன் வெற்றிகொண்டான் பேச்சின் ஒலி நாடாவை ஒலிபரப்பினார்கள். முந்நாள் முதல்வர் ஜெயலலிதா பற்றி அருவருக்கத்தக்க வகையில் தரக்குறைவாக அந்தப் பேச்சு அமைந்திருந்தது. ஜெ. மீது ஆயிரம் குற்றச்சாட்டுகள் இருக்கலாம். அதற்காக ஆபாசமாகத் திட்டுவது அநாகரிகம்.

விழுப்புரம், சி. வேதவல்லி.

குமுறல்

# குரூப் டான்ஸ்களில் மடிசார் மாமிகள்!

●● பரங்கிமலை ரயில்வே ஓவர் பிரிட்ஜில் ஏறி கடப்பதற்குள் நாய்களின் உருவில் அபாயம் காத்திருக்கிறது. ஒன்றல்ல இரண்டல்ல, சுமார் இருபது நாய்களை சென்ற வாரம் அங்கு காண நேர்ந்தது. ஒவ்வொரு படியைக் கடக்கும்போதும் "பக் பக்"தான்.

சென்னை – 61, ஆர். ஜானகி ரங்கநாதன்.

●● தமிழ்த் திரைப்படங்களில் சமீப காலமாக மறுபடி அந்தணர் சமுதாயத்தை இழிவுபடுத்த ஆரம்பித்து விட்டனர். குருப் டான்ஸ் அல்லது பாட்டில் தேவையில்லாமல் மடிசார் மாமிகளும் பஞ்சகச்சம் சாஸ்திரிகளும் திணிக்கப்படுகின்றனர். "செங்கோட்டை" படத்தில் சாஸ்திரிகள் டில்லி கணேஷின் வீட்டில் ஃபிரெஞ்சு யுவதி மீன் பொறிப்பதும் சாஸ்திரிகள், "அப்படியொன்றும் வாசனை ரொம்ப மோசமாய் இல்லையே" என்று சொல்வதும் நகைச்சுவை அல்ல; மனத்தைப் புண்படுத்துவதில் இன்பம் காணும் வக்கிரச் சுவை.

மதுரை, எஸ். வைத்தியநாதன்.

குமுறல்

●● டெல்லி தொலைக்காட்சியின் இரவு ஒன்பது மணி ஆங்கிலச் செய்திகளில் வெப்பநிலை அறிக்கையில் FORCAST என்று காண்பிக்கிறார்கள். FORECAST என்பதே சரி. சென்னையை CHANNAI என்று எழுதிக் காட்டுகிறார்கள். CHENNAI என்று திருத்திக் கொள்வார்களா?

உத்தமபாளையம், கே. சுரேஷ்.

●● வைகை வட்டம் பெரியகுளத்தில் ஒரு வகுப்பார் சிலையை அனுமதியின்றி வைக்க, அதிகாரிகள் அப்புறப்படுத்தப்போய், பஸ் உடைப்பு, எரிப்பு, கடை அடைப்பு, கல் வீச்சு, குத்துவெட்டு என்று ஆரம்பமாகி விட்டது. இந்தக் கலவரம் முடிவதற்குள், இதன் எதிரொலியாக மதுரையில் கலாட்டா – மறியல். மறுதினம் உசிலம்பட்டியில் இதே கதை! போக்குவரத்து தடைப்பட்டு, பொதுமக்களுக்கு சொல்லொணா துன்பம். நாட்டில் இருக்கிற சிலைகள் போதும். சிலை 'எடுக்கும்' கலாசாரத்துக்கு ஒட்டுமொத்தமாக தடைவிதித்து விடலாம் அரசு.

போடி, எஸ். செல்லப்பன்.

●● ஒரு மாதத்துக்கு முன் விழுப்புரத்தில் ஒருவருக்கு ஆயுள்தண்டனை வழங்கப்பட்டது. அதனால் நீதிபதியின் கார் உடைபட்டது; கடைகள் நொறுக்கப்பட்டன. இதைவிடக் கேவலம், உள்ளாட்சித் தேர்தல் பிரசாரத்துக்காக முதல்வர் இங்கு வந்திருந்த போது, அவருக்கு ஆயுள்தண்டனை பெற்ற அந்தக் கைதியின் பெயரால் (மின்னல் ராஜா) போஸ்டர்களும் விளம்பர தட்டிகளும் வரவேற்பு சொன்னதுதான்! அவர் பெயர் பொறித்த கார்களும் கருணாநிதியுடன் நகர்வலம் வந்தன. முதல்வர் இதை எப்படி அனுமதித்தார்?

விழுப்புரம், வா.க. பாலமுருகன்.

குமுறல்

# சதீஷ் ஷர்மாவின் அரண்மனை எப்படி?



• ஊழல்



• ஊ ஊ ஊ......ழல்!

● எல். எம். அபிதாட்சயா, மதுரை – 16.

**? தி.மு.க. ஆட்சிக்கு எதிராக அனைத்து எதிர்க்கட்சியினரையும் ஒன்று திரட்டும் சு. சுவாமியின் முயற்சி வெற்றி பெறுமா?**

! தி.மு.க. ஊழலற்ற, திறமையான ஆட்சி தரும் வரை; த.மா.கா. எதிர்ப்புப் பணி ஆற்ற வேண்டிய கடமை இருப்பதை மறவாத தோழமை கட்சியாக இருக்கும் வரை... சு. சுவாமியின் முயற்சி மக்களைக் கவராது.

● எஸ். விஜயலதா, தூத்துக்குடி – 1.

**? தமிழக மக்களை 'ஏமாளிகள்' என்கிறாரே ஜெயலலிதா?**

! ஆமாம் சென்ற ஐந்து ஆண்டுகள் வரை!



• அபாயத்துக்கு அழைப்பு

● ச. ஜான்ரவி, கோவில்பட்டி.

**? 'டிங்கி ஜுரம்' என்கிறார்களே... அதைப் பற்றி கொஞ்சம் சொல்லுங்களேன்?**

! அது 'டிங்கி'யல்ல... 'டிங்கு'. பெரும்பாலும் கொசுக்கள் மூலம் பரவும் வைரஸ் ஜுரம். டெல்லியில் இப்போது அரசியல் ஜுரத்தை விட இந்த ஜுரம் அதிகம்! அங்கு குளிர் காலம் நெருங்க, நெருங்க, குளிருக்குப் பயந்து கொசுக்கள் வேறிடத்துக்குப் போய் விடும்! நோயாளிகளின் எண்ணிக்கை குறையும்.

● வெ. நீலா, மன்னார்குடி.

**? தொடர்ந்து முதலமைச்சராக இருக்கும் ஜோதிபாசு, ஏன் பிரதமராக முடியவில்லை...?**

! அவருக்கு அரசியல் தெரியுமேயொழிய அரசியல் 'பண்ண'த் தெரியாதே!

● ஆர். சி. முத்துகண்ணு, திருத்தியமலை.

**? பணத்தால் சாதிக்க முடியாதது எது?**

! முன்ஜாமீன்! – இன்றைய சூழ்நிலையில்!

● இரா. நடராஜன், சீர்காழி – 11.

**? உள்ளாட்சித் தேர்தலில் தி.மு.க.வினர் தில்லுமுல்லு செய்ததாகக் கூறப்படுவது பற்றி...?**

! தேர்தலின் போது தில்லுமுல்லு நடந்ததோ இல்லையோ... இப்போது நகரசபைத் துணைத் தலைவர் பதவியை த.மா.கா.வுக்குத் தர ஐம்பதாயிரம், அறுபதாயிரம் என்று விலை பேசப்படுவதாக வரும் செய்திகள் மகிழ்ச்சியாக இல்லை. இரு கட்சிகளுமே ஏணிகளாகவும் இருந்திருக்கின்றன. இரு தரப்பினரும் ஏறியும் வந்திருக்கிறார்கள். இப்போது உதைத்துத் தள்ளும் வேலை வேண்டாம்!

● டி. வரதன், மன்னார்குடி.

**? இன்றைய நிலையில் சீட்டு கம்பெனிகள் எப்படி இன்னமும் விளம்பரங்கள் செய்கின்றன?**

• விடா முயற்சி!



! இப்போது கூட, கரண்டல் லாட்டரி, உடனடி லாட்டரி போன்றவற்றை பிற மாநில அரசுகள் நடத்த, அதற்குத் தமிழகத்தில் மட்டும் தடைவிதிக்க முடியாது என்று உயர்நீதிமன்றத் தீர்ப்பு வெளியாகியிருக்கிறது. நீதிபதிகள் சட்டத்தின் அடி

படையில்தான் நீதி வழங்க முடியும். ஆனால் தர்மம் என்று ஒன்று இருக்கிறதே! அரசாங்கமே சூதாட்டம் நடத்தி, மக்களை மனத்தளவிலும் பணத்தளவிலும் பலவீனப்படுத்துவது மாபெரும் அக்கிரமம்! இது நாடாளுமன்றத்தில் விவாதிக்கப்பட்டு, நல்ல முடிவு வரவேண்டும்.

● **ஜான் சாமுவேல், பம்பாய் – 19.**

? **பெங்களூர் வெற்றி எப்படி...?**

! கர்நாடக வீரர்களான கும்ப்ளே, ஸ்ரீநாத் இருவரும் வெற்றிக்குக் காரணமானது பெங்களூர் ரசிகர்களுக்குத் திருப்தி அளிக்கலாம். ஆனால் போலர்கள்தான் சிறப்பாக பாட் செய்து காப்பாற்றியிருக்கிறார்கள் என்பது அணிக்குப் பெருமையில்லை.... போதாக் குறைக்கு எல்.பி. டபிள்யூ தீர்ப்பு தந்த அதிருப்தியில் அஷார் திரும்பித் திரும்பிப் பார்த்து அலுத்துக் கொண்டு போனது தவறு. அதன் விளைவாக ரசிகர்கள் உணர்ச்சிவசப்பட, கலவரம் முற்ற ஆரம்பித்து விட்டது. இப்படியே போனால், நாம் எந்த ஆட்டத்தையும் ரசிக்க லாயக்கற்றவர்களாகி விடுவோம்.

● **பாலகிருஷ்ணன், கும்பகோணம்.**

? **ராமர் பிள்ளையின் கண்டுபிடிப்பான மூலிகை பெட்ரோலை விஞ்ஞானிகள் ஏன் அங்கீகரிக்க மறுக்கிறார்கள்?**

! அவர் ஏமாற்று வேலை செய்வதாக அவர்கள் நினைப்பதால் தான்!

● **கு. அருணாசலம், தென்காசி.**

? **சிறையில் இருப்பவரை கம்பி எண்ணுகிறார் என்று சொல்வது ஏன்?**

! 'ஆஸ்பத்திரியில் படுத்து, செல்லுலரில் பேசுகிறார்' என்று வர்ணித்த காலமும் இருந்ததே! மக்கள்தான் கம்பி எண்ண வாய்ப்பளித்திருக்கிறார்கள்!

• தெரிந்ததும் தெரியாததும்!

● **சி. முருகேசன், பெண்ணாட்டகரம்.**

? **இன்றைய உலகம் கணிப்பொறிமயமாக உள்ளது. இந்த கணிப்பொறி வளர்ச்சி, மனிதவளத்தைச் சீராக்குமா? சீர் குலைக்குமா?**

! அது, கணிப்பொறியை எப்படிப் பயன்படுத்துகிறோம் என்பதைப் பொறுத்து அமையும். உலகை அழிப்பதற்கும் பயன்படுத்தலாம். உணவுப் பெருக்கத்துக்கும் உபயோகிக்கலாம்.

● **கே. ஆர். குமரேஷ், திருபுவனம்.**

? **சதீஷ் ஷர்மாவின் அரண்மனை போன்ற முப்பது கோடி ரூபாய் பங்களா எப்படி...?**

! சசிகலா அண்ட் கோவை ஒப்பிட, சதீஷ் ஷர்மா வெறும் தூசு!

**○ ❑ ரூ. 25 பரிசு பெறுபவர் : வை. செம்பியன், மேலையூர், சீர்காழி வட்டம், 609 107.**

● **மஞ்சுதேவன், மும்பை – 86.**

? **கவர்ந்த கண்டல்?**

! வெல்லப் பாகு செலுத்தி, தேங்காய்த் துருவலைத் தூவிய காராமணி இனிப்புச் சுண்டல். கூடவே ஒரு சிம்டா உப்பும் வேண்டும்!

● **கே. ஏ. காளிமுத்து, காரை.**

? **உள்ளாட்சித் தேர்தலில் அமைச்சர் வீரபாண்டி ஆறுமுகம் மனைவி, மகன் தோல்வி அடைந்திருப்பது பற்றி...?**

! தகுதி என்பது கணிசமாக இல்லாத நிலையில் வெறும் 'குடும்ப அரசியல்' மட்டும் வெற்றியைத் தேடித் தராது என்பது நிரூபணமாகிறது.



• காரணம்ந்திக்.

● **வை. செம்பியன், ❑ மேலையூர்.**

? **சசிகலா மீது தவறு ஒன்றும் இல்லை. அனைத்துக்கும் காரணம் ஜெயலலிதாதான் என்று கருணாநிதி கூறுவது சசிகலாவைப் பாதுகாக்கவா? அல்லது சசி மீது பரிதாபம் கொண்டு அவ்வாறு பேசுகிறாரா?**

! இரண்டுமே இல்லை. ஜெ பதவியில் இருந்த போது சசிகலா குடும்பத்துக்குப் பாதுகாப்பும் ஆதரவும் தந்திருக்காவிட்டால் இத்தகைய உலகமகா ஊழலை அவர்கள் நடத்தியிருக்க முடியாது என்பதைத்தான் அடிக்கோடிட்டுக் காட்டுகிறார். எய்தவன் இருக்க, அம்பை மட்டும் நோவதில் அர்த்தமில்லை என்பதைச் சுட்டிக்காட்டுகிறார். ஜெயலலிதாவின் பினாமிதான் சசிகலா என்று சொல்லாமல் சொல்கிறார்.



• ...கொடுத்தார்கள்!

# கள்ள நோட்டுக்கு ஜூட்!

ரிசர்வ் வங்கி சமீபத்தில் புதிய வடிவமைப்புடன் 100 ரூபாய் நோட்டை வெளியிட்டுள்ளது. வழக்கமாக கவர்னரின் கையெழுத்து மாறும். இல்லையேல் புலிக்கு பதில் யானை என்ற பட வித்தியாசங்கள் இருக்கும். ஆனால் இதுபோல் இல்லாமல் 'டெக்னிகலாய்' நிறைய மாற்றங்கள் உள்ளடக்கி இந்தப் புதிய நூறு ரூபாய் வெளிவந்துள்ளது.

ஏன் இந்தத் திடீர் மாற்றம்?

தற்காலத்தில் மிகத் துல்லியமாய் காப்பியெடுக்கும் கலர்







• கொங்கணியும் நேபாளியும்...

ஜெராக்ஸ்கள் பிரபலமாகி வருகின்றன. அதைத் தவிர கம்ப்யூட்டர் ஸ்கேனிங் முறையில் ரூபாய் நோட்டுக்களைப் படிய வைத்து, அதன் அச்சு முறைகளை அலசி ஆராய்ந்து, அதே போல அச்சடிக்க எளிதாய்ப் போய் விடுகிறது. எனவே, இது போன்ற போலிகளின் சவால்களைச் சமாளிக்கும் அளவுக்கு, ரூபாய் நோட்டின் தரத்தை உயர்த்தியாக வேண்டிய கட்டாயத்தில் இருப்பதாக ரிசர்வ் வங்கி கூறுகிறது.

சரி. அது என்ன டெக்னிகலான விஷயங்கள்?

ரூபாய் நோட்டுக்களின் 'செக்யூரிடி நூல்' என்கிற வெள்ளிக்கம்பி மாதிரியான பட்டையான நூல் ஒன்று நோட்டின் உள்ளே, ஊடுருவியவாறு இருக்கும். ரூபாய் நோட்டை சற்று வெளிச்சத்தில் தூக்கிப் பார்த்தால் கருப்பாய்த் தெரியும் - கோடு போல. தற்போது இந்த செக்யூரிடி நூல் கொஞ்சம் உள்ளேயும் கொஞ்சம் வெளியேயும் மாறி மாறி வரும்படி அமைக்கப்பட்டிருக்கிறது. அதைத் தவிர மிகச் சிக்கலான விஷயம் இதுதான். மைக்ரோ பிரிண்டிங் முறையில் அந்த செக்யூரிடி நூலில் RBI என்றும் ஹிந்தியில் "Bharat Reserve" என்றும் எழுதப் பட்டிருக்கும்!

ரூபாய் நோட்டின் முன் பகுதியில் தேசத் தந்தையின் உருவப் படம் இரண்டுமுறை அச்சாகியுள்ள இப்படத்தைச் சற்று உற்று நோக்குங்கள் குறிப்பாய் பின்னந் தலையை! மைக்ரோ பிரிண்டிங் முறையில் காந்தி மிக மிக சிக்கலாய் வரையப்பட்டிருக்கிறார்!

இன்னுமொரு காந்தி எங்கே?

வாட்டர் மார்க் என்று சொல்லப்படும் வெள்ளைப் பகுதியைச் சற்று உயர்த்தி

வெளிச்சத்தில் பாருங்கள். காந்தியின் உருவப் படம் தெளிவாய்த் தெரியும். இது பெரிய விஷயமில்லை! காந்தி வரையப்பட்ட விதம் தான் சுவாரஸ்யமானது!!

நேர் நேர் கோடுகளாய்ப் பல திசைகளில் குறுக் கும் நெடுக்குமாய் போடப்பட்ட கோடுகளால் காந்தி படம் வரையப்பட்டிருக்கும்!

இதுவரை காலம் காலமாய் வாட்டர் மார்க் பகுதியில் அசோகஸ்தூபிதான் இருந்து வந்தது. தற்போது ஏன் காந்தி வந்தார் என்பதற்குக் காரணம் இல்லாமல் இல்லை. "பிரபல சின்னங்களை விட, பிரபல மனிதர்களின் உருவப்படத்தை காப்பி அடிப்பதுதான் மிகக் கடினமானது" என்று சொன் னார் ரிசர்வ் வங்கியின் ஒரு மூத்த அதிகாரி.

கூடவே, "எங்களுக்கு மிக சிக்கலான உருவ அமைப்பு கொண்ட பிரபல மனிதர்களின் உருவப் படம் தேவைப்பட்டது. தாடியுடன் கூடிய உருவம் இருந்தால் நல்லது என்று நாங்கள் அலசோ அலசு என்று அலசினோம். ஆனால் அரசியல் காரணங் களுக்காக நிறையப் பிரபலங்கள் அடிபட்டுப் போக, கடைசியில் அப்பழுக்கில்லாத தேசத் தந்தையே சரி என்று தீர்மானித்து விட்டோம்" என்றார்.

ஆனாலும் மிக சிக்கலான உருவமைப்பு கொண்ட, தாடியுடன் உள்ள பிரபல மனிதர்களின் தேடல் இன்னும் தொடர்கிறதாம்.

மேற்கூறிய விஷயங்களையெல்லாம் தூக்கிச் சாப்பிடும் விஷயம் ஒன்றும் உள்ளது. ரிசர்வ் வங்கியின் சின்னம் பொறித்த பகுதிக்கு மேலே, ஒரு குறிப்பிட்ட கோணத்தில் மிக அதிகமாய் ஒளியைப் பாய்ச்சிப் பார்த்ததால் 'ரூ.100' என்று எழுதப்பட்டி ருக்கும். அதைத் தவிர காந்தியின் தலையிலிருந்து கழுத்து வரையிலான இடைப்பட்ட பகுதியில் சிறிது சிறிதாக 'ரூ.100/-' என எழுதப்பட்டிருக்கும்!

கடைசியாய் குவிஸ் பிரியர்களுக்கு ஒரு விஷயம். உடனே குறித்துக் கொள்ளுங்கள். ரூபாய் நோட்டின் பின் பகுதியில் பிராந்திய மொழிகளில் இத்தனை ரூபாய் என்று எழுதப்பட்டிருக்கும். முன்பு 13 மொழிகளில் எழுதப்பட்டிருந்தன. தற்போது? 15. கொங்கனியும், நேபாளும் சேர்க்கப்பட்டுள்ளன!

குட்டிச் செய்தி:

ரூபாய் நோட்டுகள், கையாளுவதால் கிழிந்து போவதை விட, ஸ்டாப்ளர்கள் அடிப்பதால் மிக சீக்கிரம் கிழிந்து போகின்றன. ஸ்டாப்ளர் பின்னை சரிவர நீக்கத் தெரியாமல் பெருவாரியான மக்கள், நோட்டுக்களை பொத்தல் ஆக்கி விடுகின்றனர். எனவே ரிசர்வ் வங்கி இந்த ஸ்டாப்ளர் முறையை ஒழித்து விடப் போகிறது. அமெரிக்காவில் மிகப் பிரபலமான பைண்டிங் முறை ஒன்றை இங்கு அறிமுகப்படுத்தப்போகிறார்கள் மிக விரைவில்.

- அனுராஜன்

## கின்னஸ் குழந்தைகள்

நடிகை ரேவதிக்கு அருகே அமர்ந்திருக்கும் இந்த இரு குழந்தைகளும் யார்?

**சரவணன்:** இவன் பிறவியிலேயே போலியோவால் பாதிக்கப்பட்டு கால்கள் செயல் இழந்த நிலையிலும் கையால் தலைகீழாக 1000 மீட்டர் நடந்து உலக சாதனை புரிந்துள்ளான்.

**முத்துக்குமார்:** இருகைகளும் வளர்ச்சி குன்றியவன் இவன். அபிநயத்துடன் தொடர்ந்து ஒரு மணி நேரம் நடனமாடி உலக சாதனை புரிந்துள்ளான்.

இருவரும் கின்னஸில் இடம் பெறத் தகுதி பெற்றுள்ளனர்.

இருவரும் கோவை மாவட்டம், குடும்பபாளையம், யுனைடட் ஊனமுற்றோர் பள்ளி மாணவர்கள்.

— எம்.ஸ்ரீதர்



## ஜாலி போட்டி - 14

## பரிசு ரூ. 5000/-

**கீழே சில நாடுகளும் அவற்றின் தலை நகரங்களும் இடம் மாற்றித் தரப்பட்டுள்ளன. சரியாகப் பொருத்துங்கள் பார்க்கலாம்! சரியாக எழுதும் ஒருவருக்குப் பரிசு ரூ. 5000/-. பலர் சரியாக எழுதினால் குலுக்கலில் ஒருவர். ஆசிரியர் தீர்ப்பே இறுதி.**

**கடைசித் தேதி 11.11.96**

1. அங்கோலா - தாலின்
2. ஆஸ்திரியா - ஒட்டாவா
3. உருகுவே - ஏதென்ஸ்
4. எஸ்தோனியா - போர்ட் மோர்ஸ்பி
5. கனடா - வியன்னா
6. கிரீஸ் - திரானா
7. அல்பேனியா - கோபன் ஹேகன்
8. டென்மார்க் - வெல்லிங்டன்
9. நியூஸிலாந்து - மோன்டே வீடியோ
10. பாப்வா நியூ கினியா - லுவாண்டா

### ஜாலி போட்டி - 14

சரியான தலை நகரங்கள் :

1. அங்கோலா -
2. ஆஸ்திரியா -
3. உருகுவே -
4. எஸ்தோனியா -
5. கனடா -
6. கிரீஸ் -
7. அல்பேனியா -
8. டென்மார்க் -
9. நியூஸிலாந்து -
10. பாப்வா நியூ கினியா -

பெயர் : ..............................................................

முகவரி : ..........................................................

.......................................................................

.......................................................................

# இன்டர் நெட்டில்

இந்தப் பக்கத்தை எப்படி எழுதலாம் என்று அச்வினிடம் கேட்டேன். "அறுசீர் கழி நெடிலடி ஆசிரிய விருத்தமாக" என்றபடி காான் வாஸ் பையைக் கவிழ்த்தான்.

'நன்னூல் இலக்கணம்', 'ஜாவா மொழியில் கம்ப்யூட்டர் ஆணைத் தொடர் எழுதுவது எப்படி?', 'நரசிம்மப்ரியா', 'காலச்சுவடு', மீசை மழித்த மம்முட்டி சங்கோஜமாகச் சிரிக்கும் மலையாளப் பத்திரிகை, 'இன்டெர்நெட் வெப் பேஜ் விலாசங்கள்' என்று அட்டையில் கிறுக்கிய நோட்டுப் புத்தகம்... கலந்து கட்டியாகச் சரிய, கடைசியாக விழுந்ததை எடுத்துப் புரட்டினான் அச்வின்.

அவன் புரட்டி முடிப்பதற்குள் சில மினி தகவல்கள்...

'இன்டெர்நெட்' - உலகில் எங்கெங்கோ இருக்கும் லட்சக்கணக்கான கம்ப்யூட்டர்களை இணைக்கும் வலைப்பின்னல். 'வெப்' இன்டெர்நெட்டில் தகவலை ஒலி-ஒளி வடிவாகப் பெறும் வசதி. 'ஹோம்பேஜ்' அல்லது 'வெப் பேஜ்' என்ற 'வீட்டுப் பக்கம்' -- வெப்பில் தகவல் அளிக்க விரும்புகிறவர்கள் இதற்காக ஏற்படுத்தப்பட்ட ஏதாவது ஒரு கம்ப்யூட்டரில், துண்டு போட்டு வைக்காமல் பிடித்து வைத்திருக்கும் இடம். 'விலாசம்' - நம் கம்ப்யூட்டர் மூலம் அங்கே போய்ச் சேரத் தேவையான ஒற்றை வரித் தகவல்.

"ஷம்மி கபூர் மாட்டினார்... வா... அவர் கூட சண்டை போடலாம்..."

நோட்டுப்புத்தகத்தை மூடி வைத்துவிட்டு, கையைச் சொடக்கியபடி சொன்னான் அச்வின்.

ஷம்மிகபூர்? கேபின் டீவியில் விடிகாலை நேரத்தில் தினசரி 'ஜப்பான்... லவ் இன் டோக்கியோ' என்று படுகுஷியாகப் பாடிக் கொண்டு, கதாநாயகியை (ஆஷா பரேக்?) துரத்தோ துரத்தென்று துரத்திக் காதலிக்கும் பழைய இந்திப் படக் கதாநாயகன்... சானலை மாற்றினால், தாடியும் ருத்ராட்ச மாலையும் முரட்டு குர்த்தாவுமாக ஜர்தாபான் விளம்பரம் செய்யும் வயசாளி....

அந்த வாலிப - வயோதிகருக்கும் இன்டெர்நெட்டுக்கும் என்ன சம்பந்தம்?

"ஷம்மி கபூர் தற்போது எல்லாக் கெட்ட பழக்கத்தையும் ஏறக்கட்டிவிட்டு, ஒரு நாளைக்குப் பத்து மணி நேரம் போல கம்ப்யூட்டர் முன்னால் உட்கார்ந்து, தகவல் வீதியில் ஜாலியாகச் சுற்றிக் கொண்டிருக்கிறார்... வெப் பக்கம் கூட உண்டு...."

அச்வின் கம்ப்யூட்டரை இயக்கி, 'விண்டோஸ்' மென்பொருள் மூலம் 'நெட்ஸ்கேப்' என்ற இன்னொரு மென்பொருளைக் கூப்



பிட்டான்.

"பொற்கைப் பாண்டியன் போல எல்லா வீட்டுக் கதவையும் தட்ட வேணாம்.... போக வேண்டிய தகவல் வீட்டுக்கு டாண்ணு போய் நிற்க. அங்கே சுற்றிப் பார்க்க இந்த பிரவுசர் சாப்ட்வேர்... தமிழ்லே சொன்னா 'மேய்வான்'..."

சொல்லியபடி, கம்ப்யூட்டர் விசைப்பலகையில் அவன் எழுத்தெழுத்தாகத் தட்டிய வெப் விலாசம்.

http://www. mafatlal. co. in/Shamsher

"அதாகப்பட்டது வேர்ல்ட்வைட் வெப்பில், மபத்லால் என்ற இந்திய கம்பெனியின் தகவல் வீட்டுக்குள் ஒரு போர்ஷனில் இருக்கப்பட்ட ஷம்ஷேர் ஷம்மிகபூருக்கு இதுதான் இன்டெர்நெட் விலாசம்..."

அச்வின் சொல்லி முடிப்பதற்குள் திரையில் பாதிக்கு மேல்

# 'சாரி' சொன்னார் ஷம்மிகபூர்!

அடைத்துக் கொண்டு இந்தி சினிமாவின் பெரிய கலைக் குடும்பம் - பிருத்விராஜ் கபூர், அவருடைய பிள்ளைகள் ராஜ்கபூர், ஷம்மிகபூர், சசிகபூர், அவர்களுடைய வாரிசுகள்.... எல்லோருமே வஞ்சனையில்லாத வளர்த்தி.

அப்பாவின் பிருத்வி தியேட்டர்ஸில் மாதச் சம்பளம் ரூ. 50/-க்கு கலைச்சேவையைத் தொடங்கிய தம் சுருக்கமான பயோ-டேட்டாவை தகவல் பக்கத்தில் போட்டு வைத்திருக்கிறார் ஷம்மி கபூர். 'பசந்த்', 'உஜாலா', 'பிரம்மசாரி' என்று அவர் நடித்து ஓஹோ என்று ஓடிய படங்களின் பட்டியல் தொடர்கிறது. எல்லாப் படத்துக்கும் மறக்காமல் ஹீரோயின் பெயரும் தருகிறார்.

"பாரு... பெரிய ஸ்டார்... தன்னை குட்டி நட்சத்திரம் (Starlet)ன்னு சொல்லிக்கறார்... என்னே தன்னடக்கம்...!"

அச்வின் சூயிங்கம் மென்றபடி சிலாகிக்க, நான் சண்டையைப் பற்றி நினைவு படுத்தினேன்.

"போட்டுட்டால் போச்சு... இதோ முதல் அஸ்திரம்..."

டீவி மகாபாரதத்தில் டப்பிங் குரலுக்கு வாயசைக்கும் அர்ஜுனன் போல முழங்கியபடி, அச்வின் திரை யின் மேல்பகுதியில் 'ஈமெயில்' என்ற கட்டத்தைத் தேர்ந்தெடுக்க, வண்ணப் படமாகத் திரை முழுதும் வழிந்த ரிஷிகபூரைப் பாதி மறைத்தபடி காலி இடம்.

"எத்தனை பெரிய ஆக்டர் நீங்க ஷம்மி கபூர்ஜி! ஜர்தாபான் விளம்பரத்துக்கு நடிக்கலாமா? கேவலமா இருக்கு... சகிக்கலே!"

நமுட்டுச் சிரிப்பு சிரித்தபடி அச்வின் எழுதியதின் சாராம்சம் இது.

"சூடா ஏதாவது பதில் வரும்... வம்பு வளர்த்து வேடிக்கை பார்க்கலாம்..."

அச்வின் சொன்னபடியே 'அனுப்பு' என்ற பகுதியைத் தேர்ந்தெடுக்க, நொடியில் கடிதம் போய்ச் சேர்ந்து விட்டது.

நான் கரிஷ்மா படத்தைப் பார்க்கக் காத்துக் கொண்டிருக்க, அச்வின் ஷம்மிகபூர் வீட்டை விட்டு வெளியே வந்தான். சே. ரசனையே கிடையாது.

**"வா**... அகோபில மடம் போகலாம்...." பக்தி சிரத்தையாகக் கூப்பிட்டபடி அடுத்த வெப் விலாசத்தை எடுத்தான்.

இந்தக் கால இளைஞன்.. எல்லாமே பிடிக்கும்... கரிஷ்மாவை சாவகாசமாகப் பார்த்துக்

## யுவர் அட்டென்ஷன் ப்ளீஸ்!

### அடுத்த இதழ்.....

## தீபாவளி சிறப்பிதழ் - 2

**கல்கி — அனுபவ் கவிதைப் போட்டியில் வென்றவர்கள் யார் யார்?**

**பட்டியல் + முதல் பரிசுக் கவிதை.**

**மற்றும்**

கல்கி ஸ்லோகன் போட்டிக்கான முடிவு அறிவிப்பு சற்றே தள்ளிப் போகிறது! தபால் துறை ஊழியர்களின் வேலை நிறுத்தம் காரணம்.

பலர் கூரியரில் ஸ்லோகன்களை அனுப்பியிருக்கிறார்கள்தான் என்றாலும், தபாலில் அனுப்பிவிட்டு, நகம் கடித்துக் காத்திருப்பவர்களை ஏமாறவிடலாமா?

அதனால் -

கொஞ்சம் பொறுத்திருங்கள் ப்ளீஸ்!

கொள்ளலாம் என்று அகோபில மடப் பக்கத்தில் நுழைய, சட்டென்று கண்ணில் பட்டது பஞ்சாங்கம். தொடர்ந்து ஜீயர் சுற்றுப் பயண விவரத்தில் நவம்பர் 3 - 13 சென்னை விஜயம்.

'நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம் பகுதிக்குள் புகுந்து 'நெறிவாசல் தானேயாய் நின்றானை' பாசுரத்தைத் தேட ஆரம்பித்தான் அச்வின்.

சொல்லியபடி, தொடர்ந்து வந்த 'ஒலி'ப் பகுதியைத் தேர்ந்தெடுக்க, எங்கள் கம்ப்யூட்டரிலிருந்து "பல்லாண்டு... பல்லாண்டு..." என்று கம்பீரமான கோஷ்டிகானம் ஒலிபரப்பானது!

செவிலிமேடு சீனுவாசாச்சாரி குழுவினர் இசைத்த திருப்பல்லாண்டையும், சார் முறையையும் ஒலி வடிவில் தங்கள் தகவல் பக்கத்தில் தரும் அகோபில மடம், அந்த இரண்டையும் நம் கம்ப்யூட்டரில் பிரதி செய்து இறக்கிக் கொள்ளவும் வழி செய்திருக்கிறார்கள். கேட்டு ரசிக்க, கம்ப்யூட்டரில் 'மல்ட்டி-மீடியா' வசதி அவசியம். கேட்கத் தேவைப்படும் gldwaw30.exe என்ற மென்பொருளும் இலவசமாக விநியோகிக்கப்படுகிறது.

**"சன் டீவி அடுத்த தகவல் வீடு..."**

அச்வின் www.wp.wm/suntv என்று விலாசம் கொடுத்த மாத்திரத்தில் சன் டீவியின் தகவல் பக்கத்துக்குப் போய்ச் சேர்ந்தோம்.

சூடான தலைப்புச் செய்திகள், டாப் டென் திரைப்படங்கள், இந்த வார 'பிலிப்ஸ் சூப்பர் 10' பாடல்கள் விவரம் (ஒய்.ஜி. மகேந்திரனின் பழைய ஜோக்குகள் இல்லாமல்) என்று கல கலப்பான தகவல்களோடு, சன்டீவியை எத்தனை பேர் பார்க்கிறார்கள், எந்த நிகழ்ச்சிகளுக்கு அதிகப் பார்வையாளர்கள் என்பது போன்ற வியாபாரக் கண்ணோட்டத்தோடான புள்ளி விவரங்களும் உண்டு.

சீக்கிரமே ஒலி-ஒளியாகவும் சன்-டீவி தகவல் பக்கம் வழங்கப்படும் என்றும், அதை நம் கம்ப்யூட்டருக்குப் பிரதி எடுத்துக் கொள்ளவும் வழி செய்யப்படும் என்றும் தெரிகிறது. (காப்பிரைட் பற்றி நிச்சயம் கவனித்திருப்பார்கள்!).

பார்த்துக் கொண்டிருக்கும்போது "சார் போஸ்ட்" என்று கம்ப்யூட்டர். ஷம்மிகபூர் உடனடியான பதில்.

"நான் தெரிந்தும் தெரியாமலும் செய்த தவறுகளில், ஜர்தாபான் விளம்பரத்தில் நடித்ததும் அடங்கும். 'அசோக்குமார் தி கிரேட்' கூட நடிக்கும் சந்தோஷத்துக்காக அப்படி நடித்தேன். ஆனாலும் என்ன... தப்புதான்... வருத்தப்படுகிறேன்... ஷம்மிகபூர்."

"யாஹூ!"

அச்வின் துள்ளிக் குதித்தான்.

ஷம்மி இப்படி ஜகா வாங்குவார் என்று எதிர்பார்க்கவில்லை. ஆனாலும் என்ன... ஷம்மி நிச்சயம் டம்மி இல்லை.

**— இரா. முருகன்**

இன்டெர்நெட் கம்ப்யூட்டர் உதவி : **SAP Computers, Chennai -17.**



**"அடடா! திடீர்னு மழை வந்து பீச்லேர்ந்து நம்மை விரட்டுதே!"**

**"இன்னைக்கு நீங்க சுண்டலுக்குப் பணம் கொடுக்கும் போதே நினைச்சேன்!"**

**— எஸ்.எஸ். பூங்கதிர்**

✉ கள்ளச்சாராய வேட்டையில் வெற்றி காணும் காவல் துறையினருக்குப் பரிசும்; காந்தி பதக்கமும் வழங்கும் அரசு, எப்படி 'மலிவு விலை மதுவை'க் கொண்டு வரலாம்? என்கின்ற கல்கியின் தலையங்கக் கேள்விகள் வாசகர்களை மட்டுமல்ல; கலைஞரையும் நிச்சயம் சிந்திக்கத் தூண்டியிருக்கும்.
கபிஸ்தலம், எஸ். வினோத்பாபு.

✉ முதல்வருக்கு ஆலோசனை வழங்கும் விதமாகவும், எச்சரிக்கும்விதமாகவும் இருந்தது தலையங்கம்.
சாலியமங்கலம்,
நீடா. சி. இளஞ்செழியன்.

✉ 'உலகைக் கலக்கும் சூப்பர் ஸ்டார்' நடிகர் ஜாக்கிசான் பற்றி வந்த கட்டுரையையும், புகைப் படங்களையும் பார்த்தேன். ஆரம்ப காலத்தில் திரையுலகில் அதுவும் ஹாலிவுட்டில் நுழைய ஜாக்கிசான் எடுத்துக் கொண்ட உயிரைப் பணயம் வைக்கும் முயற்சியை கல்கியின் வாயிலாக முதன் முதலில் படித்து மெய்சிலிர்த்துப் போனேன்.
லால்குடி, எம். இராஜேந்திரன்.

✉ மனக்குமுறலைக் கொட்டியது வக்கீல் விஜயன் மட்டுமல்ல; இலட்சக்கணக்கான மக்களின் மனக்குமுறல்தான் விஜயனின் வழியே வந்துள்ளது.
பாண்டிச்சேரி - 4, பூங்கோதை கிருஷ்ணராஜ்.

✉ 'சாடிலைட் டி.வியால் சீரழிவா?' ஒரு காரசார விவாதம் படித்தேன். எஸ்.வி. சேகரும் பாரதியும் சிறப்பாக விவாதித்துள்ளனர். சுதந்தர தினத்தன்றும் தியாகிகளைப் பற்றி திரையில் வராதது வருந்தத்தக்கது என்று பாரதி கூறுவது யாரும் மறுக்க முடியாத உண்மை.
பொறையாறு, கானா. கணேசன்.

✉ தபால்களைப் பிரித்தெடுக்கும் தானியங்கி இயந்திரம் பற்றிய கட்டுரை மக்களின் வரிப் பணம் எவ்வாறு வீணடிக்கப்படுகிறது என்பதற்கான ஓர் எடுத்துக் காட்டு!
காரைக்கால், 'நவோதயா' செந்தில்.

✉ 'டாட்டா-பிர்லா' சினிமா விமர்சனத்தில் பாடல் என்ற பெயரில் ஒலிக்கும் ஏகப்பட்ட இரைச்சலைப் பற்றிக் குறிப்பிடவே இல்லையே. பாடல் காட்சிகளின்போதெல்லாம் 'பாத்ரூம்' போய் தப்பித்துக் கொண்டு விட்டீரோ!
அரவக்குறிச்சிப்பட்டி, எம். அசோக்ராஜா.

✉ சென்னைத் தொலைக்காட்சியில் சுஜாதா விரும்பிப் பார்க்கும் நிகழ்ச்சிகளையும் அதற்கான காரணங்களையும் தமக்கே உரிய கிண்டல் கலந்த பாணியில் எழுதியிருக்கிறார். ஆனால் அவருக்குப் பிடித்தது அனைவருக்கும் பிடிக்க வேண்டிய அவசியம் இல்லையே!
தஞ்சாவூர், கே. கிருஷ்ணமூர்த்தி.

✉ 'வி.ஐ.பி.க்கு வந்த கடிதங்கள்' - பக்கங்களில் 'நல்ல விஷயங்களை தள்ளிப் போடவே கூடாது' என்ற ஆலோசனையுடனான தென்கச்சியாரின் அனுபவத்தைப் படித்ததும் மனம் கனமானது.
பல்லவன்நகர், எல். எம். மங்கை.

## அரசுக்கு ஓர் அவசர வேண்டுகோள்!

✉ முன்னாள் 'அம்மா' ஜெ.க்கு புத்தி தர எறும்பார் கடித்த ஐடியா - அருமை, அற்புதம், அழகு!
மதுரை - 16, சீதாமகன்.

✉ கல்கி 13.10.96 இதழில் பூங்கா நிலம் டவர்ஸ் ஊப்புக்கு அளிக்கப்படுவது பற்றிய கட்டுரை படித்தோம். புதுக்கோட்டை, ராஜகோபாலபுரம், பூங்காநகர் வீட்டு வசதி குடியிருப்பில், பூங்காவுக்காக ஒதுக்கப்பட்டுள்ள காலியிடத்தில், பெரிய கொட்டகை போட்டு மறைத்து விட்டு, அவசரம் அவசரமாக ஒரு மருதி கட்டும் வேலை நடந்து வருகிறது. பூங்கா இடத்தில் மருதி கட்டுவதால் எல்லா வகையிலும் அமைதி கெடும் என்று அஞ்சுகிறோம். அரசு கவனிக்குமா?
புதுக்கோட்டை,
ஊர்மக்கள் (7 பேர் கையெழுத்து)

# நம்பிக்கைப்பூ

புவனபாரதி

**வே**கமாக நடந்து வந்ததில் மூச்சு இரைத்தது.

அவர் வருவதற்கு முன்பே அலுவலக வாசலில் கூட்டம் கூடியிருந்தது. ஆவேசம் கொண்ட ஜனம் அலுவலகத்தை அடித்து நொறுக்கியிருந்தது. "செங்கதிர் நிதி நிறுவனம்" - பெயர்ப் பலகையில் 'வனம்' தனியே உடைந்து தொங்கியது.

கண்ணாடிகள், மரச்சேர்கள், எல்லாம் நொறுங்கி, பேப்பர்கள் கிழிந்து கிடந்தன.

வேதாசலம் வியர்த்திருந்த முன் தலையை துண்டால் துடைத்துக் கொண்டார். மூக்குக் கண்ணாடியைக் கழற்றி சட்டைப்பையில் போட்டுக் கொண்டு ஓரமாக உட்கார்ந்தார்.

இன்னும் படபடப்பு அடங்கவில்லை. யாரிடம், என்ன கேட்பது என்று புரியவில்லை. நேற்று இரவுதான் பக்கத்து வீட்டு ராமசாமி சொன்னார்.

"வேதாசலம், தெரியும்ல! செங்கதிர் ஃபைனான்ஸ் கம்பெனிகாரன் பணத்தை எல்லாம் சுருட்டிக்கிட்டு ஓடிட்டாம்ல."

"என்னது?"

"ஆமாம்ல. ஆளைக் காணோம்னு ஜனங்க அலையுது."

தீ வைத்த மாதிரி இருந்தது.

ரிடையர் ஆகி வந்த பணத்தை அவர் அதில்தான் போட்டிருந்தார். வட்டிக்கான காசோலைகளை முன்தேதியிட்டு முன்னாடியே தந்தது நிறுவனம். இரண்டு காசோலைகளுக்குப் பணம் கிடைத்தது. மூன்றாவதுக்குப் பணம் இல்லை என்று திரும்பி விட்டது. அது விஷயமாய் போன வாரம் கேட்கப் போனபோது 'அடுத்த வாரம் வாங்க பெரியவரே' என்றார்கள்.

அதற்குள் ஓடி விட்டானா? பாவிகளா!

வயிறு எரிந்தது. ஏமாற்றத்தில் அழுகை வந்தது. குருவி மாதிரி சேர்த்த காசு. ஒரு கம்பெனியில் பியூனாக வேலை பார்த்து, ரிடையர் ஆனபோது கிடைத்த பணம். பென்ஷன் கிடையாது. கிடைத்த பணத்தை டெபாசிட் செய்து வட்டி வாங்கி சாப்பிட முடியாது. ரெண்டு பெண்கள். பையன் காலேஜில் பி.ஏ. படிக்கிறான். என்ன செய்வது என்ற கவலை ரிடையர் ஆவதற்கு முன்பே வந்து விட்டது.

அப்போதுதான் டீ.வி.யில் இந்த நிதி நிறுவனத்தின் விளம்பரம் பார்த்தது.

அது ஒவ்வொரு நடுத்தரக் குடும்பத்துப் பெற்றோர்களின் மனநிலையைப் பிரதிபலித்தது.

வண்ணமயமான கனவு அது. ஒரு நடுத்தர அரசு அலுவலர் குடும்பம் அது. அப்பா, அம்மா, தாத்தா, இரண்டு பேத்திகள். பேத்தி அசப்பில் ராஜேஸ்வரி மாதிரியே இருந்தாள். படிப்பு முடிந்து வரும் பெண்ணுக்கு, திருமணம் ஏற்பாடு செய்கிறார்கள். நல்ல பையன். நல்ல வேலை. பணத்துக்கு என்ன செய்வது என்று குடும்பம் தவிக்கிறது. கனவுகளோடு, இந்தக் கல்யாணம் நடக்குமா என்று பெண் ஏங்கும்போது தாத்தா வருகிறார். கலகலவென்று சில்லறையும் ரூபாய் நோட்டுமாய் கொட்டுகிறார்.

"செங்கதிர் நிதி நிறுவனத்துல நான் பணம் டெபாசிட் செஞ்சிருந்தேன். அஞ்சு வருஷத்துல பணம் இரட்டிப்பாயிடுது. 30% வட்டி, 8% ஊக்கத் தொகையும் தராங்க. கூடவே போனஸூம் உண்டு" - தாத்தா சொல்லச் சொல்ல குப்பென்று மகிழ்ச்சி பொங்கப் பூமழை பொழிகிறது.

"ஆனந்தம் ஆனந்தம் பாடும்
செங்கதிர் வாழ்த்துப் பாடும்
வாழ்வில் வண்ணமும் மகிழ்ச்சியும்
செங்கதிர் நிதி நிறுவனம் தந்திடுமே"

பெண் ஆடிப்பாட, அம்மா, அப்பா கை உயர்த்தி ஆசீர்வதிக்கிறார்கள்.

அதே மாதிரி தானும் ராஜேஸ்வரியை ஆசீர்வதிக்க வேண்டும் என்று வேதாசலத்துக்கு ஆசை. இந்த விளம்பரம் கண்ட பிறகு அது இன்னும் அதிகரித்தது. அடிக்கடி விளம்பரம் பார்த்து, பார்த்து உறுதி ஏற்பட்டு, ரிடையரானதும் கிடைத்த நாற்பதாயிரத்தில் முப்பதாயிரத்தை இதில்தான் டெபாசிட் செய்தார்.

பத்தாயிரத்தில் பையன் காலேஜ் போய் வர ஒரு சைக்கிளும் ரெண்டு பெண்ணுக்குத் தோடும் வாங்கித் தந்தார்.

ராஜேஸ்வரிக்கு சிவப்புக்கல் வைத்து

தொங்கட்டான். அவள் பேசித் திரும்புகையில் அது கன்னத்தில் மின்னும்.

ராஜேஸ்வரி நல்ல அழகு. இந்த மார்கழி வந்தால், அவளுக்கு இருபது ஆகிறது. தையல் தெரியும். வீட்டு வேலை பூவாய்ப் பண்ணும். எந்நேரமும் சிரிப்பும் பாட்டுமாய் வளைய வரும். அதைப் பார்க்கும்போதெல்லாம் பகீரென்று வயிறு குழையும். போன வாரம் அடுத்த சின்னக்குட்டியும் வயதுக்கு வந்து விட்டாள்.

இந்த நிறுவனத்தில் டெபாசிட் செய்த பிறகுதான் மனது நிம்மதி அடைந்தது. பணம் போட்டு விட்டு அவர்கள் தந்த கிஃப்ட் பையுடன், வைரம் ஜுவல்லர்ஸில் தோடு வாங்கிக் கொண்டு, லக்ஷ்மி பவனில் பால் அல்வா, நெய் ரோஸ்ட் சாப்பிட்டு விட்டுத் தான் வீட்டுக்கு வந்தது.

ரொம்ப வருஷமாய், வேலை முடிந்து லக்ஷ்மி பவன் வழியாக வரும்போது நாக்கு ஊறும். நிதி நிலைமை, குடும்பச் சூழல் இடம் தராது. குடும்ப பாரத்தில் ஆசை நிறைவேற வழி ஏது?

வேதாசலம்தான் பெரியவர். மூணு பெண்கள். பதினேழு வயசிலேயே அப்பா போய் விட்டார். பதினெட்டு வயதில் இந்தக் கம்பெனியில் வேலைக்குச் சேர்ந்தது. வெறும் முந்நூறுதான் சம்பளம். ஆனால் பெயர் பெற்ற பெரிய கம்பெனி. உண்மை உழைப்புக்குப் பலன் தந்த கம்பெனி.

எம்.டி.யின் தனி வேலையாள். கம்பெனியும், எம்.டி.யும் தந்த எல்லாச் சலுகைகளையும் பயன்படுத்தி மூணு அக்காக்களின் கல்யாணம், வளைகாப்பு, பிள்ளைப்பேறு எல்லாம் செய்தார். முப்பத்தஞ்சு வயதில் கல்யாணம்.



''மூன்று குடை வச்சிருக்கே; அக்கம் பக்கத்து வீட்டுக்காரங்க இரவல் கேட்டால் கொடுக்க மாட்டேன்றியாமே?''

''இவை அக்கம்பக்கத்து வீடுகளில் இரவல் வாங்கினதாச்சே!''

–லலிதா செல்லப்பா



'ஓ'வென்று மீண்டும் ஒரு அழுகைக் குரல். ஒரு விதவைப் பெண்மணி நெஞ்சு, நெஞ்சாய் அடித்துக் கொண்டு அலறினாள்.

"போயிருச்சே! அம்புட்டும் போயிருச்சே! ஒரு லச்சம் சாமி..."

"இப்படித்தான் அதிக வட்டிக்கு ஆசைப் பட்டு பணத்தையும் டெபாசிட் செஞ்சிர வேண்டியது. கடைசில போச்சே, போச்சேன்னு அலற வேண்டியது" - கான்ஸ்டபிள்.

அடுத்த வாரம் நிச்சயம் சாமி. இந்தப் பணத்தை நம்பித்தான் கல்யாணம் வச்சிட்டேன். கடவுளே! என் பொண்ணு கதி என்ன?"

"நாசமாப் போவியடா பாவி" - மண்ணை வாரி இறைத்தாள்.

அவளோடு கூட்டமே புலம்பியது. என்ன செய்வது என்று புரியாமல் அலைமோதியது.

தாங்க முடியாத சோகத்தையும், ஏமாற்றத்தையும் வசைபாடுவது மூலம் தீர்த்துக் கொண்டிருந்தாள். அலறும் அம்மாவை பெண் சமாதானப்படுத்தியபடி தானும் அழுது கொண்டிருந்தாள்.

அந்தப் பெண் ராஜேஸ்வரி மாதிரி இருந்தாள். ராஜியின் மனசு இப்போ எப்படி இருக்கும்?

நினைக்கவே முடியவில்லை. இந்தப் பணம் தந்த தைரியத்தில்தான் நிம்மதியாய் நடமாட முடிந்தது. ராஜியைக் கிண்டல் கூட செஞ்சார்.

"பூலான்தேவி மாதிரி அத்தனையையும் கொள்ளையடிச்சிக்கிட்டு போப்போறே."

"போப்பா" முகம் முழுதும் பூரிப்பும் வெட்கமுமாய்ச் சொல்லும் மகளைப் பார்க்கையில், மனம் முழுதும் வாஞ்சையில் நிறையும். நிறைந்து போன இதயம் கனிவுடன் அவள் தலை தடவும்.

இப்போ... இப்போ...

பெரிதாய் ஒரு கேவல் எழுந்தது. கட்டுப் படுத்த முடியாமல் உடம்பு குலுங்கியது.

"பெரியவரே கலங்காதீங்க" - யாரோ தேற்றினார்கள்.

எந்த ஆறுதலையும் ஏற்க முடியாமல் மனது சின்னாபின்னமாகி இருந்தது. கத்தியால் குத்தியது போல் இதயம் நொந்து வலித்தது.

ரெண்டு பொண்ணு. நடுவில் பையன். கவலையும், சுமைகளையும் சுமந்து, முதுகே கூனிப் போன மாதிரி இருந்தது. எல்லாம் முடிந்து இனி தன் குழந்தைகளுக்கு ஒரு வழி செய்யலாம் என்றபோது ரிடையர் ஆகியாச்சு. வந்த பணத்தை டெபாசிட் செய்ததற்கு மாதம் வட்டி உண்டு. ஆஹா, அது குடும்பத்துக்கு மாதச் செலவுக்கு.

அஞ்சு வருஷத்தில் தொகை இரட்டிப் பாகும். போனஸ், ஊக்கத் தொகை உண்டு. அது பெண்கள் கல்யாணத்திற்கு.

நம்பிக்கை தந்த சந்தோஷத்திற்கு எல்லை தான் ஏது? இன்று வெயிலில் தலையில் துண்டுடன் நிற்கையில் ஏமாளியாய்ப் போன மாதிரி இருந்தது.

**யா**ரோ ஒருவன், ஏமாற்றிப் பிழைக்க எத்தனை பேர் ஏமாளியாக வேண்டியிருக்கிறது.

"ஆள் கிடைப்பானாமா?"

"எங்கே? தலைமறைவாயிட்டானாமே."

''புடிச்சிருவாங்க. எஸ்.ஐயே அம்பதாயிரம் போட்டிருக்காராம்.''

''புடிச்சாலும் அம்புட்டு பணமும் வராது. எங்கெங்கே பதுக்கி இருக்கானோ?''

வேதாசலம்



நிருபர்: கவர்ச்சி நடிகையான நீங்க அரசியல்ல குதிச்சு ஆட்சியை பிடிச்சா என்ன பண்ணுவீங்க?''

நடிகை: கவர்ச்சிகரமான திட்டங்களை மக்களுக்கு அடிக்கடி அறிவிப்பேன்!

– ஜி. செல்லத்துரை

டைரக்டர்: குரூப் டான்ஸில் முதலில் நிற்கிற பெண்ணை கடைசியில் நிற்க வைங்க.
டான்ஸ் மாஸ்டர்: ஏன் சார்?
டைரக்டர்: கதாநாயகியை விட அழகா இருக்காங்க!
- கோவி. செல்வகுமரன்



நிற்க முடியாமல் தடுமாறினார்.

அப்போதுதான் அவருக்கு மாரடைப்பு ஏற்பட்டது.

ராஜேஸ்வரி சாப்பாட்டுக் கூடையை ஓரமாய் வைத்தாள். படுக்கையில் உட்கார்ந்து எங்கோ பார்த்துக் கொண்டிருந்த அப்பாவைப் பார்க்கையில் பாவமாக இருந்தது. எப்படிப் போய் விட்டார்?

"ஒண்ணும் ஆபத்தில்லை. அதிர்ச்சிதான். ஆனா இனி அதிகமா எந்தக் கவலையும் தரக் கூடாது என்று டாக்டர் சொல்லியிருக்கார். வீட்டுக்கு கூட்டிப் போகச் சொல்லி விட்டார். சந்தானம் வந்ததும் சாயந்திரம் கிளம்ப வேண்டியதுதான்."

அவன் ஒரு வேலை விஷயமாய்ப் போயிருக்கிறான். "நீ போக்கா. நான் வேலையை முடிச்சிட்டு வரேன்" என்று போயிருக்கான். சின்னக்குட்டிக்குப் பரீட்சை.

அம்மா தட்டைக் கழுவி வைத்தாள்.

"கஞ்சிதாம்மா."

"எனக்கு வேண்டாம் ராஜி"

"ஏம்பா. ஒண்ணாவுதே மணி."

"ப்ச."

"பட்டினி கிடந்தா பணம் வந்துருமா?"

வேதாசலத்திற்குக் கண்ணீர் ததும்பியது.

"நான் ஒரு தகப்பனா இருக்கவே லாயக்கில்லை ராஜி. பெத்த குழந்தைகளுக்கு எதுவுமே பண்ணலை. இருந்த பணத்தையும் இழந்துட்டு நிக்கறேன். உன்னைப் பாக்குறப்போ எல்லாம் பகீர்னு இருக்கு."

அப்பா இப்படி ஏங்கியே போய் விடுவாரோ என்று பயமாக இருந்தது. இழப்பு ஈடு செய்ய முடியாததுதான். ஆனால் அதையே நினைத்து ஏங்கி நிற்பதில் என்ன பயன்?

"பணம்தானேப்பா போச்சு?"

"இனி உங்க கதி என்ன தாயி? பென்ஷனும் இல்லை. பணமும் போயிருச்சு. சந்தானம் படிப்பு முடியலை. உனக்கும் வயசாச்சி. நாலு வீட்ல பத்து பாத்திரம் தேய்க்கறேங்கறா உங்கம்மா. தேவையா கண்ணு இது?"

"நான் சொல்லட்டுமா ஒண்ணு?"

"சொல்லு."

"பணம் போனதுல என்ன நஷ்டம்?"

"பணம்தான் சகலமும்."

"இல்லைப்பா. நல்லவங்களா இருக்கறது தான் முக்கியம். நாம நல்லவங்கப்பா. யாரையும் ஏமாத்தலை. நம்பிக்கை தந்து பணம் பறிக்கலை. குத்தமில்லா மனசோட இருக்கோமே. இது பெரிசில்லையா? அந்த ஃபைனான்ஸ்காரன் பயந்து, பயந்து ஓடிட்டே இருக்கணும்பா. நாம அப்படி இல்லை: நிமிர்ந்து தைரியமா நடக்கலாம்."

"..................."

ஏனோ அவள் வார்த்தைகள் இதமாய் இருந்தன. மனசு லேசானது போல்.

"நேத்து சந்தானம் உங்க கம்பெனி எம்.டி.யைப் பார்த்தான். விஷயத்தை கேட்டுட்டு அவர் ரொம்ப வருத்தப்பட்டார். கம்பெனி காம்பவுண்ட் ஓரமா டீக்கடை போட்டுக்க பர்மிஷன் தந்திருக்கார்."

"டீக்கடையா?"

"ஆமாம். இதுல கேவலமில்லைப்பா. மத்தவங்களை ஏமாத்திப் பிழைக்காத எல்லாத் தொழிலும் உசத்திதான். கூடவே ஒரு ஸ்வீட் ஸ்டால். அம்மா ரொம்ப ஜோரா லட்டு, மைசூர்பாகு எல்லாம் போடும். நான் முறுக்கு சுத்துவேன். சந்தானம் கடைகளுக்கு சப்ளை பண்ணுவான். சின்னக்குட்டி பாக்கெட் போடும்."

"நான் கூட மிளகுவடை, சீடை போடுவேன்."

"அப்புறம் என்ன? யார் கண்டது. கிருஷ்ணா ஸ்வீட்ஸ், கிராண்ட் ஸ்வீட்ஸ் மாதிரி நம்ம விநாயகா ஸ்வீட்ஸ்ும் நகரையே கலக்குமோ என்னமோ?"

வேதாசலம் வாய்விட்டுச் சிரித்தார்.

"நல்ல கற்பனைம்மா உனக்கு."

"அதுதாம்பா நமக்கு டானிக்."

"உன் கல்யாணம் தாயி?"

"நடக்கும்பா. எப்போ கல்யாணம்கறதை விட, யார் கூட கல்யாணம்கறதுதான் முக்கியம்பா. ஒரு நல்ல மனுசன் வராமயா போவார்? வருவார்."

"ஆமாம்மா" - வேதாசலத்துக்குக் குரல் அடைத்தது. இந்த நேரத்து மனநிறைவுக்காகவே ஆண்டவன் தன்னை செங்கதிர் ஃபைனான்ஸிடம் ஏமாறச் செய்தானோ... என்று ஒரு கணம் நினைத்துக் கொண்டார்.

## வி.ஐ.பி குடும்பம்!

"நான் ஒரு ஐடியாலஜிஸ்ட். என் மனைவி சீதாலட்சுமி ரொம்ப ப்ராக்டிகல்" என்றார் உதயமூர்த்தி.

சமீபத்திய பொதுத்தேர்தலில் கணவர் போட்டியிட்டது பற்றிக் கேட்டபோது, "ஏற்கெனவே வேண்டிய பணமும் புகழும் இருக்கு. எதுக்கு இவர் அரசியல் கட்சியெல்லாம் தொடங்கி அனாவசியமாக மத்தவங்க விரோதத்தை சம்பாதிக்கணும்?" என்றார் சீதாலட்சுமி. இதைத் தொடர்ந்துதான் தமது மேற்படி கருத்தை உதயமூர்த்தி கூறினார்.

இவர்கள் சென்னையில். ஆனால் இவர்களது மூன்று வாரிசுகளும் (இரண்டு மகன்கள், ஒரு மகள்) வசிப்பது அமெரிக்காவில்.

"நான் கும்பகோணம் கல்லூரியில் படித்த காலத்தில் நவாப் ராஜமாணிக்கம் பிள்ளை பல நாடகங்கள் போட்டதைக் கண்டு ரசித்திருக்கிறேன். ஆனால் புத்தர் பற்றிய நாடகம் மட்டும் காணோம்! அப்படி ஒரு நாடகத்தை நாமே எழுதினாலென்ன என்று யோசித்தேன். இதற்காகப் பல நூல்களைப் படிக்கத் தொடங்கினேன். புத்தரின் ஆழமான அறிவு என்னை ரொம்பக் கவர்ந்தது. இதனால்தான் முதல் மகனுக்கு சித்தார்த்தன் என்றும் அடுத்த மகனுக்கு அசோகன் என்றும் பெயரிட்டேன். மூன்றாவது முறை என் மனைவி கருவுற்றபோது என் அம்மா இறந்துட்டாங்க. அம்மாவின் நினைவாக அவர் பெயரான கமலா என்பதையே என் மகளுக்கு வைத்தேன்" என்றார் உதயமூர்த்தி. (அம்மா உயிருடனிருந்தால் மகளின் பெயர் 'சங்கமித்திரை'யாக இருந்திருக்கும்?).

மூத்தவர் சித்தார்த்தன் அமெரிக்காவிலுள்ள ஹூஸ்டனில். வங்கிக் கண்காணிப்பாளர் பணி. வங்கிகள் எப்படிச் செயல்படுகின்றன என்பதைக் கவனிக்க அங்கு சில குழுக்கள் உண்டு. அவற்றில் ஒரு குழுத் தலைவர். "ஒரு நாள் நாங்கள் தங்கியிருந்த

## "மகனின் காதலை சந்தோஷமாக ஏற்றுக் கொண்டோம்!"

• உதயமூர்த்தி தம்பதி





• அப்பாவினருகே கண்ணாடி அணிந்து சித்தார்த்தன்; அம்மாவினருகே அசோகன்; சகோதரர்களுக்கிடையே நிற்பது கமலா; கீழே அமர்ந்தபடி மருமகள்கள் மற்றும் பேரக்குழந்தைகள்...

தெருவிலிருந்த வங்கி ஒன்று திடீரென்று மூடப்பட்டது. "நேற்று நான்தான் அந்த வங்கியை க்ளோஸ் பண்ணினேன்" என்றான் சித்தார்த் கூலாக. அவன் ரொம்பக் கண்டிப்பான பேர் வழி. "இரவிலும் பல் துலக்கணும். தினமும் குறிப்பிட்ட நேரம் படித்தே ஆகணும்" என்றெல்லாம் தன் இரண்டு மகள்களிடமும் கறாராக இருப்பான். நல்ல வழிமுறைதான். ஆனால் என்னிடம் இதைப் பற்றி பேத்திகள் புகார் செய்யும்போது, இவன் தன் கண்டிப்பைக் கொஞ்சம் குறைச்சுக்கலாமேன்னு தோணும்" என்றார் உதயமூர்த்தி.

சித்தார்த்தனின் மனைவி தஞ்சை மருத்துவக் கல்லூரியில் பட்டம் பெற்றவர். இப்போது ஹூஸ்டனில் டாக்டர். "ரொம்ப கைராசியான டாக்டர்னு பேர் வாங்கியிருக்கா" என்றார் மாமனார் பெருமையுடன்.

நமக்கு ஆச்சரியம் ஏற்பட்டது - அவரது கைராசியைப் பற்றி அல்ல. அவரது பெயர் யசோதரா என்பதை அறிந்ததும். புரிந்து கொண்டு விளக்கினார் மாமனார் டாக்டர்.

"சித்தார்த்தன் பிறந்த ஒன்றரை வருடத்தில் என் பெரிய மைத்துனருக்கு மகள் பிறந்தாள். 'இவ சித்தார்த்தனுக்குத்தான். அதுக்காகவே என் மகளுக்கு யசோதரான்னு பெயர் வைக்கிறேன்'னார். எனக்கு உதைப்புதான். நாளைக்கே மகன் வளர்ந்தபிறகு இந்த ஏற்பாட்டை வேண்டாம் என்று சொல்லிவிட்டால்? தவிர, நெருங்கிய உறவில் சம்பந்தம் செய்து கொள்வதில் எனக்கும் இஷ்டமில்லை என்றாலும் வளர்ந்தபிறகு அவர்களே மணமுடிக்க சம்மதம் தெரிவித்து விட்டனர்.

மூவரிடமுமே பாசம் உண்டு என்றாலும் இரண்டாவது மகன் அசோகனிடம் பெற்றோருக்குக் கொஞ்சம் எக்ஸ்ட்ரா பரிவு இருப்பது தெரிகிறது. "எங்களை அதிகமாகப் புரிஞ்சுக்கிட்டு அதன்படி அனுசரணையாக நடந்துக்குவான்". இது சீதாலட்சுமியின் சான்றிதழ்.

"அமெரிக்காவுக்குப் படிக்கப் போன நான் நாளடைவில் சில குறிப்பிட்ட ரசாயனங்கள் (பெட்ரோல் வெளியேற்றத்தின்போது பயன்படுத்தப்படுபவை) தொடர்பான வியாபாரத்தில் இறங்கினேன். (எழுத்தாளர் என்றே இங்கு கணிசமானவர்கள் இவரை அறிந்திருந்தாலும், அமெரிக்க விஸ்கான்ஸின் பல்கலைக் கழகத்தில் ரசாயனத்தில் டாக்டரேட் பெற்றவர்). நான் இந்தியாவுக்குத் திரும்பிய பிறகு அந்த வியாபாரத்தை அங்கு தொடர்வது அசோக்தான். அவனுக்கு மெக்கானிக்கல்

## — உதயமூர்த்தி தம்பதி

## எறும்பார் கடிக்கிறார்!

**சசிகலாவின் வசந்த மாளிகையில் மொத்தம் 45 அறைகள், நவீன நீச்சல் குளம், மூன்று சுரங்க அறைகள், ரூ. 20 லட்சம் மதிப்புள்ள ஜெனரேட்டர்கள்.**

**- செய்தி**



**'பவர்' போனா இருக்கட்டும்னு வாங்கிப் போட்டவங்க, இப்படி பவர்லெஸ் ஆயிடுவோம்னு நினைச்சிருக்க மாட்டாங்க... பாவம்!**

வேலையெல்லாம் அத்துப்படி. வீட்டுக் கார் அவன் சொன்னபடியெல்லாம் கேட்கும். அதற்கு ஏதாவது ரிப்பேர் என்றால் அவனே சரி செய்து விடுவான்."

அசோகனும் உறவில்தான் மணமுடித்திருக்கிறார். மற்றொரு மாமா பெண்ணை மனைவியாக்கிக் கொண்டிருக்கிறார். ஆனால் உதயமூர்த்தி தம்பதியரின் மாப்பிள்ளையின் பெயர் டாம் விட் - ஓர் அமெரிக்கர்!

"வேற்று நாட்டவரை கமலா மணந்து கொள்ளப் போவதாக அறிவித்தபோது அதை எளிதில் ஜீரணிக்க முடிந்ததா?"

"இவருக்கு முதலில் தயக்கம் இருந்தது. எனக்கு அதெல்லாம் இல்லை. தன் நாலாவது வயசிலிருந்தே கமலா அமெரிக்காவில் வளர்ந்திருக்கா. அந்த சூழலின்படி காதல் திருமணம்னு அவ முடிவெடுத்தப்போ நான் மறுப்பு தெரிவிக்கலே. என் மனதை இதற்குத் தயார் நிலையிலே வச்சுக்கிட்டிருந்தேன்னு இப்போ தோணுது" என்றார் சீதாலட்சுமி.

"சர்ச்சில்தான் திருமணம். மாப்பிள்ளைக்கு எந்தவித பந்தாவும் கிடையாது. பாசமானவர். அங்குள்ள வழக்கப்படி எங்களைப் பேர் சொல்லித்தான் கூப்பிடுவார்" - இது மக்கள் சக்தி இயக்கத்தின் தலைவர் தம் மாப்பிள்ளைக்கு அளித்த பாராட்டுரை.

வங்கி ஒன்றில் அதன் சேர்மேனுக்கு சட்ட ஆலோசகர் என்று வகித்த தமது உயர் பதவியை கமலா ராஜினாமா செய்துவிட்டார். "குழந்தை பிறந்ததும், முழு கவனத்தோடு அவனை வளர்க்க விரும்பினேன். ஆரம்ப காலத்திலேயே குழந்தையோடு நெருக்கமான, தொடர்ந்த ஒட்டுறவு இருந்தால்தான் பிற்காலத்திலே அது தொடரும்னு நினைத்துத் தான் இந்தத் தீர்மானம்"

நம்மிடம் பேசும்போது திருமதி உதய மூர்த்தி மெலிந்த குரலில் பேசினார். களைப் பாகத் தோற்றமளித்தார். சமீபத்தில்தான் தொண்டையில் ஏற்பட்ட கட்டியை அகற்ற அவருக்கு ஓர் அறுவை சிகிச்சை நடந்து முடிந்திருக்கிறது, அமெரிக்காவிலுள்ள மேயோ க்ளினிக்கில். உணவுக் குழாயை நீக்கியிருக்கிறார்கள். வயிறு, கழுத்துக்குச் சற்றே கீழ்ப்பகுதிக்கு மாற்றப் பட்டிருக்கிறது. சாப்பிட்ட ஓரிரு மணி நேரங்களுக்குச் சங்கடமாக இருக்கிறதாம்.

"என் கணவரின் எழுத்துக்கள் ரொம்பப் பிடிக்கும். ஆனால் இவர் பிரபலமானவராக இருக்கிறதாலே நேரங்காலம் இல்லாம யாராவது வந்துக்கிட்டிருக்காங்க. ஒரு ப்ரைவஸி இல்லாம போகுதேன்ற வருத்தமும் உண்டு" என்றார் திருமதி.

"நம் நாடு முன்னேற வேண்டும். அதற்கு நம்மால் முடிந்ததைச் செய்ய வேணும்கிற உணர்வு எனக்கு எப்பவுமே உண்டு. இதுவரை என்னிடம் இருப்பது இந்திய பாஸ்போர்ட் தான். சில வருடங்களுக்கு முன்னே இந்தியாவில் செட்டிலாகத் தீர்மானித்தபோது என் மனைவி முதலில் என் கூட வர மறுத்தாள். பிறகு நடுவில் என்னைப் பார்க்க இந்தியா வந்தபோது 'நான் அங்கே வரல்லே. இங்கே உங்க அப்பா தனியாகக் கஷ்டப்படுகிறார்' என்று தன் மகனிடம் போனில் கூறிவிட்டாள். எனக்கே அது ஆச்சரியம்தான். காரணம் அவள் அமெரிக்காவுக்கு ரிடர்ன் டிக்கெட்கூட அப்போது எடுத்திருந்தாள்!" என்றார் உதயமூர்த்தி.

"பிள்ளைகளைப் பிரிஞ்சிருப்பதுகூட வருத்தமாயில்லே. ஆனா பேரக் குழந்தைகளை விட்டுட்டு இருப்பதுதான் கஷ்டமாயிருக்கு" என்று சீதாலட்சுமி கூறியபோது, அவர் பார்வை, ஹாலில் மாட்டியிருந்த குடும்ப போட்டோவில் பதிந்து நின்றது!

**— அருண் சரண்யா**

படம்: **ஸ்ரீஹரி**

●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●

**மிக மெல்லிய தங்கத் தகடு ஒன்று தயாரிக்கப்பட்டுள்ளது. அத்தகட்டின் வழியே கண்ணாடி வழியே பார்ப்பதைப்போல நீங்கள் பார்க்க முடியும். இதுபோன்ற மெல்லிய உலோகத் தகடுகள் விண்வெளிக் கலங்களிலுள்ள சோலார் செல்களில் பயன்படுகின்றன.**

**— ஆர்.ஆர்.பூபதி**

"என்ன ஆச்சு தண்டபாணி? போன வாரம் ஆளையே காணோம்? டிங்கு ஜுரம் வந்து கவலைக்கிடமா ஆயிட்டியோன்னு நினைச்சேன்."

"விட்டா மலர்வளையம் வாங்கிட்டு வந்துருவீங்களே? சரஸ்வதி பூஜையை முன்விட்டு என் சம்சாரம் அரகண்டநல்லூருல அவ அம்மா வீட்டுக்குப் போவணும்னு அடம் புடிச்சாப்பா. அதான் கூட்டிப் போய் வந்தேன். அப்படியும் திங்கட்கிழமை காலையில வந்துட்டேன். அருணாச்சலம் பூஜை இருந்ததே?"

"நீ என்னவோ ஐஸ்வர்யாராய்தான் ஹீரோயின்னு அடிச்சி சொன்னே... கடைசியில ரம்பா, சௌந்தர்யாதான்?"

"மன்னிச்சிரு. யூனிட் ஆள் ஒருத்தன்தான் என்கிட்ட சொன்னான். அவனை நான் கவனிச்சிக்கிறேன். இன்னொரு விஷயம் கேளு. பேபி ஷாமிலியை நடிக்க வெக்கறதா பேச்சு இருந்திச்சில்லை? அந்த சான்ஸ் இப்ப அஞ்சு அரவிந்துக்கு அடிச்சிருக்கு. படத்துல ரஜினிக்குத் தங்கை ரோல்."

"சே! எப்பேர்ப்பட்ட பாக்கியம்? அது சரி. எப்படிக் கிடைச்சுதாம் வாய்ப்பு?"

"பர்ஃபாமென்ஸ் நைனா! 'எனக்கொரு மகன் பிறப்பான்'ல புகுந்து கலக்கியிருந்திச்சில்லே? அதான்! ஆடைக்குறைப்பு செய்யாமலேயே அசத்த முடிஞ்சதுக்குக் கிடைச்ச பரிசு!"

"நல்லா இருந்தா சரி. போவட்டும். ஔவை சண்முகி முழுக்க முடிஞ்சிருச்சின்னு சொல்லிட்டு திடீர்னு இன்னும் பாக்கி இருக்குதுன்னு ஆப்ரிக்கா கிளம்பிப் போனாங்களாம்? என்ன விஷயம்?"

"ஒரு பாட்டு பாக்கின்னு சொல்லிட்டு, அதுக்குத்தான் போயிருக்காங்க. தவிர, ஆப்பிரிக்காவுலதான் சூரிய உதயம் அழகா தெரியுதாம். அதை எடுக்கறதுக்கும்..."



# அழகிப் போட்டிக்கு இசையமைக்கிறார் இளையராஜா!

"சந்திரமண்டலத்தில கூட நல்லாத்தான் தெரியுமாம்."

"இண்டலா? இதைக் கேளு. இன்னைய தேதிக்குத் தெலுங்குல நிச்சய வெற்றி பார்க்கற தமிழ் ஆர்ட்டிஸ்ட் யார் தெரியுமா? விஜய காந்த்!"

"நிஜமாவா?"

"ஆமாம். விஜயகாந்த் படங்கள் இங்க சுமாரா போனாக்கூட, ஆந்திராவுல சொல்லி வெச்சி ஹிட் ஆவுதாம். அதனால விஜயகாந்த் படங்களோட டப்பிங் உரிமை வாங்க, இங்க நல்ல போட்டி."

"பரவாயில்லையே?"

"நேத்திக்கி ஏ.வி.எம். போயிருந்தேனா? எடிட்டிங் ரூம் வாசலில் நடிகர் செல்வா உட் பட நாலஞ்சு பேர் மணிக்கணக்கா கால் கடுக்க நின்னுட்டிருந்தாங்க."

"எதுக்கு?"

"உள்ளாற, தீபாவளிக்கு வரப் போற விஜயகாந்த்தோட அலெக்சாண்டர் படத் தோட எடிட்டிங் நடந்துட்டிருந்தது."

"சரி. அதுக்கு ஏன் செல்வா நிக்கணும்?"

"அதைத்தானே சொல்ல வரேன்? தற்சமயம் படங்கள் எதுவும் இல்லாததால, செல்வா தமிழ்ப் படங்களைத் தெலுங்குக்கு ஏற்றுமதி செய்யற பிஸினஸில் தீவிரமா இறங்கி இருக்கார். டைரக்டர் கேயார்கிட்டப் பேசி, எடிட்டிங் கூட முடியாத நிலையிலேயே - எப்படியாவது அலெக்சாண்டரோட தெலுங்கு உரிமையை வாங்கிடத் துடியா துடிச்சிட்டிருக்கார்."

"கேட்க சந்தோஷமா இருக்கு தண்டபாணி. விஜயகாந்துக்கு இத்தனை டிமாண்டா?"

"பின்ன? ஆந்திராவுல இவரை, தமிழ்நாட்டு சிரஞ்சீவின்னு சொல்றாங்களாமில்லை? குறிப்பா இந்தப் படத்து டிமாண்டுக்கு இன்னொரு காரணம், இதுக்கு கேயார் டைரக் ஷன்ங்கறது!"

"அப்படியா?"

"பின்னே? வரிசையா அவரோட எல்லா படமும் கிளிக் ஆயிட்டு வருதில்லை? தெரியுமா? கேயார் ஒரு பெங்காலி படத்தை வேற டைரக்ட் பண்ணப் போறார்."

"சரியாச் சொல்லு. பெங்காலில நூறு நாள் ஓடின படத்தைத் தமிழ்ல எடுக்கற உரிமை வாங்கியிருக்கார்னுதான் நான் கேள்விப்பட்டேன்?"

"ஏதோ ஒண்ணு. அந்தக் காலத்து ராமநாராயணன் மாதிரி இன்னிக்கு, 'இந்த டைரக்டரைப் போட்டால் போட்ட துட்டைப் பார்த்துடலாம்'னு நம்பக்கூடிய ஒரு ஆள் உண்டுன்னா, அது கேயார்தான்னு ஃபீல்டுல பேச்சு."

"இப்படி மூஞ்சிக்கு நேரா புகழ்ந்தே ஆளைக் கவுத்திருவீங்களே? விடப்பா. அவர் நல்லா இருக்கட்டும்."

"இன்னொரு சமாசாரம் கேளு. எடிட்டர் லெனின், எழுத்தாளர் சிவகாமி எல்லாரும் ஒண்ணா சேர்ந்து, இந்த டாக்குமெண்டரி, ஷார்ட்-பிலிம் எடுக்கறவங்க நல்லா இருக்கணும்ங்கறதுக்காக ஒரு சங்கம் ஆரம்பிச்சிருக்காங்க."

"இன்னொரு சங்கமா?"

"இந்த சங்கம் வழக்கமான கோழி பிரியாணி சங்கம் இல்லைப்பா. இவங்க நோக்கம் என்னன்னா, டாக்குமெண்டரி எடுக்கறவங்களுக்கெல்லாம் ஒரு அங்கீகாரம் கிடைக்கணும்; அரசாங்கம் ஹெல்ப் பண்ணணும்; 'பீகாரில் மழை'ன்னு தேஞ்ச கிராமபோன் குரல்ல தியேட்டர்கள்ல காட்டற நயா பைசா பெறாத நியூஸ் ரீலுங்களுக்குப் பதிலா, தரமான டாக்குமெண்ட்ரிகளை அரசே எடுத்து, மக்களுக்குக் காட்டச் சொல்லிக் கேக்கற திட்டமெல்லாம் வெச்சிருக்காங்க."

"சந்தோஷமான சமாசாரம்தான்."

"கடைசியா இன்னொரு சந்தோஷமான சமாசாரம் சொல்லிடறேன். பெங்களூர்ல நடக்கப் போற உலக அழகிப் போட்டிக்கு ம்யூசிக் யார் தெரியுமா? இளையராஜா! பப்பி லஹரி, அனுமாலிக், ரகுமான்லேருந்து வித்யா சாகர், சிற்பி வரைக்கும் யோசிச்சிருக்காங்க, அமிதாப்பச்சன் கார்ப்பரேஷன்காரங்க. இறுதியில, நம்ம நாட்டுப் பாரம்பரியம் கெடாத, அதே சமயம் எந்த நாட்டுக்காரங்களும் விரும்பக்கூடிய இசையைத் தர இளையராஜா தவிர வேற ஆள் கிடையாதுன்னு முடிவு பண்ணி, ஒண்ணரை மணி நேர இசை நிகழ்ச்சிக்கான அழைப்பை இளையராஜாவுக்குத் தந்திருக்காங்க."

"வேலை முடிஞ்சிடுச்சா?"

"நீ வேற! பதினைஞ்சு நிமிஷ ம்யூசிக் மட்டும்தான் கம்போஸ் பண்ணியிருக்கார். அதைக் கேட்டவங்க, புல்லரிச்சுப் போயி ராஜாவைக் கட்டிப் பிடிச்சி முத்தம் கொடுக்காத குறையாம்! போட்டி நல்லபடியா நடந்து முடிஞ்சதும் அந்த ஒண்ணரை மணி நேர இசை, தனி கேஸட்டா வரதுக்கும் வாய்ப்பு இருக்குன்னு சொல்றாங்க."

"உலக அழகிப் போட்டிக்கு ஒரு பக்கம் எதிர்ப்புன்னா இன்னொரு பக்கம் இப்படியும் வேலை ஜோரா நடந்துட்டிருக்குதா? சபாஷ்! சரியான போட்டி!"

**- கிச்சா**

அட்டையில் : **அஞ்சு அரவிந்த்;**

வண்ணப்படம் : **பிரவீன்குமார்**

மனோரஞ்சிதம்
வழங்கும்............

# சினிமாவுக்கு 100 வயது
# சிறப்பு மலர்

திரைப்பட வரலாறு! நடிகர் நடிகைகள்
முகவரிகள், பிறந்தநாள் • 1931 முதல்
இதுவரை வெளிவந்துள்ள படங்கள் பட்டியல்
10 சிறந்த படங்களை தேர்ந்தெடுக்கும்
ரசிகர்களுக்கு தங்க நகைகள்



## பரிசு!

மனோரஞ்சிதம் தீபாவளி மலருடன்
கிடைக்கும். இரண்டு மலர்களும் சேர்த்து
10 ரூபாய் • மலரும் நாள் 1·11·96.

## மனோரஞ்சிதம்

40·சி·பி·ராமசாமி ரோடு,
ஆழ்வார்பேட்டை,
சென்னை-13.

## 44. பிரியாவிடை!

மணமக்களிடையே ஏதோ குழப்பம் நிலவுவதையும், வீரர்கள் இருவரும் அந்தப் பெண்களுக்கிடையில் பரிதாபமாக விழிப்பதையும் கண்ட துறவியார், அவர்களை நெருங்கி விசாரித்தார். மற்றவர்களும் சூழ்ந்து கொண்டனர்.

விஷயத்தை அறிந்து கொண்டதும் இளநங்கையின் குரல் ஒலித்தது : "ஸ்வர்ணமுகி, இந்த ஆண் பிள்ளைகள் காரியத்தைச் சாதித்துக் கொள்ள ஆயிரம் கூறுவார்கள். அவற்றையெல்லாம் பெரிதாக நினைத்துக் கொள்ளாதே" என்றவள், திரும்பி துறவியாரை நோக்கினாள், "இருந்தாலும் துறவியாரே, சோழ மன்னராவது வந்து கலந்து கொண்டிருக்கலாம்" என்றாள்.

ஸ்வர்ணமுகியை நெருங்கிய துறவியார், "ஸ்வர்ணமுகி, இதோ பாண்டிய மன்னரும், கொங்கு மன்னரும் இருக்கிறார்கள். யாங்சின்னும் சீனத்து அரச குலத்தவர்தானே. இவர்கள் போதாதா, மகளே?" என்றார்.



யாங்சின்னின் குரல் இடைமறித்தது. "இல்லை துறவியாரே, சீனத்தில் பேரரசர் வேறு ஒருவர் இருக்கிறார். நான் அரசவம்சத்தின் கிளை வம்சம்தான்" என்றார் பவ்யமாக.

கிருஷ்ணமல்லர் சலித்துக்கொண்டே, தமது சீடனின் உதவிக்கு வந்தார். "என்ன கேள்வியிது ஸ்வர்ணமுகி? இதோ சோழ மன்னரின் சகல அதிகாரங்களையும் பெற்ற துறவியார் இருக்கிறார். அது ஒன்று போதாதா? சோழப் பேரமைச்சரும் பிரதானிகளும் கூட இருக்கிறார்கள்...." என்றார் அவர்.

தான் கேட்ட ஒரு கேள்விக்குப் பலவிதமாக வந்த பதில்களைக் கேட்ட ஸ்வர்ணமுகி தலையைக் குனிந்து கொண்டாள்.

அடுத்த கேள்வி பூங்கோதையிடமிருந்து வந்தது. அவள் மெல்லிய குரலில் சற்றுத் திடமும் ஒலித்தது. "சோழ மன்னர் ஏன் வரவில்லை?"

அவள் கேள்விக்கு எவரும் பதில் கூறவில்லை. சற்று நேரம் அமைதி நிலவியது அங்கே. துறவியாரின் குரல் மீண்டும் ஒலித்தது. "சோழ மன்னர் ராஜேந்திரர் வந்து கொண்



டிருக்கிறார். நான் சென்று ஒரு நாழிகைக்குள் அவரை அழைத்து வருகிறேன்'' என்ற துறவியார் பேரமைச்சரும் விஜயனும் பின் தொடர, மண்டபத்திலிருந்து வெளியே விடு விடுவென்று நடந்தார்.

ஒரு நாழிகை நேரம் முடிந்து இரண்டாவது நாழிகையும் கடந்து கொண்டிருந்தது. "என்ன துறவியார் இவர்," கிருஷ்ணமல்லரின் குரல் சலிப்புடன் நான்காவது முறையாக ஒலித்தது.

திடீரென்று மண்டபத்தின் கோடியிலிருந்து பெரும் ஆரவாரம் ஒலித்தது. சோழ நாட்டு வீரர்களின் குரல்களும் மக்களின் குரல்களும் எழுப்பிய வாழ்த்துக் கோஷங்கள் மண்டபத்தின் கூரையைப் பிளக்க, பேரமைச்சரும், பிரதானிகளும், விஜயனும், வரிசையாகத் தட்டுக்களை ஏந்திய பணிப்பெண்களும் பின்னால் வர, நீறு பூசிய அகன்ற நெற்றியின் மீது புலிச்சின்னம் பதித்த மணிமகுடம் பளீரென்று மின்ன, கழுத்தில் மணி மாலைகளும் புலிச்சின்னம் பதித்த பதக்கமும் பளீரிட, இடையில் தரித்த நீண்ட வாளுடன் ஆஜானுபாகுவாக ராஜநடை நடந்து உள்ளே பிரவேசித்தான் சோழ ராஜேந்திரன்.

மணமக்களும் மற்றவர்களும் ஸ்தம்பித்து பிரமிப்பில் உறைந்து நிற்க, "ராஜகம்பீரன்'' என்ற பட்டப் பெயருக்கேற்ப கம்பீர நடையுடன் அவர்களை நெருங்கிய சோழ மன்னனை இரண்டடி முன்னே எடுத்து வைத்து வரவேற்ற சுந்தரபாண்டியன் அகன்று கிடந்த தோள்களுடன் சேர்த்து அணைத்துக் கொண்டான். "எத்தனை காலம் கழிந்து உன்னை இப்படிக் காண்கிறேன் ராஜேந்திரா?'' என்ற சொற்களும் உதிர்ந்தன பாண்டிய மன்னனிடமிருந்து. தமிழகத்தின் இரு பெரும் மன்னர்களின் பரஸ்பர அணைப்பைக் கண்ட மக்களின் வாழ்த்துக் கோஷங்கள் மண்டபக் கூரையைப் பிய்த்துக் கொண்டு விண்ணை எட்டியது. கிருஷ்ண மல்லரின் வெண்கலத் தொண்டை ஏனோ அடைத்துக் கிடக்க, விழிகளில் ஆனந்த பாஷ்பம் துளிர்த்துக் கிடந்தது. மாறன் அமுதனாரின் வாழ்த்து உயர்ந்து ஒலித்தது.

மெள்ள விடுபட்ட மன்னர் இருவரும் மக்களைக் கையமர்த்தினார்கள். சோழ ராஜேந்திரன் திரும்பி மணமக்களை நெருங்கி வந்து, "பூங்கோதை, சோழ ராஜேந்திரன் வந்து விட்டேன். இப்போது உனக்குத் திருப்திதானே?'' என்றான் முறுவலுடன்.

அந்தக் குரலையும், விசாலமான விழிகளில் வழிந்த அன்பையும் கண்ட பூங்கோதை பிரமித்து நின்றாள்.

அந்தப் பரந்த மார்பும், இடது புஜத்திலிருந்த காயத்திற்கான கட்டும், தெளிவாக நிறுத்தி ஒலித்த குரலும் அப்படியே துறவியாரை மனக்கண்முன்பாகக் கொண்டு நிறுத்தியதால் அவளிடமிருந்து உதிர்ந்த சொற்கள் குழறியே ஒலித்தன. "தாங்கள்... துறவியார்... துறவியார்...!''

''துறவியார் இதோ இருக்கிறார்'' என்ற ராஜேந்திரன் அடுத்து நின்ற அமைச்சரின் கரத்திலிருந்த தட்டின் சீலையை விலக்கினான்.

**விஷ்வக்சேனன்**

''இந்த ஆட்சி போற போக்கு சரியில்லை!''

''தலைவரே என்ன விசயம்?''

''எனக்கு மட்டும் சம்மன் தராம அரசியல்ல இருந்து என்னைத் தனிமைப்படுத்த சதி பண்றாங்க!''

-அம்பை தேவா



தட்டி விருந்து நீண்ட தாடியும் மீசையும் ருத்ராட்சமும் அவளைப் பார்த்து நகைத்தன. கணீரென்று ஒலித்தது சோழ மன்னன் குரல். "ஆம் மகளே, இதுவரை துறவியாக இருந்தவன் சோழ ராஜேந்திரன் தான். அடிமைப் பட்டுக் கிடந்த சோழ நாட்டின் மன்னனாக இருக்க நான் விரும்பவில்லை. எனவே மன்னனுக்குரிய அடையாளங்களையும், மணிமுடியையும், வாளையும் துறந்திருக்கிறேன்" என்ற ராஜேந்திரன் திரும்பி பாண்டிய மன்னனின் வலிய கரங்களைப் பிடித்துக் கொண்டான்.

"இன்று சுந்தர பாண்டியரின் உதவியால் மீண்டும் சோழ மன்னனுக்குரிய அடையாளங்களைத் திரும்பப் பெற்றேன்" என்று முடித்தவன் குரலில் உணர்ச்சி நிறைந்து கிடந்தது.

பாண்டிய மன்னன் பலமாகத் தலை பசைத்து மறுத்தான். "இல்லை ராஜேந்திரா, இந்த வெற்றிக்கு முழுவதுமாகத் திட்டம் வகுத்தவன் நீதான். அதைச் செயல்படுத்த நான் உதவினேன். அவ்வளவே."

"எப்படியிருந்தாலும் சரி. தமிழகம் விடுதலை பெற்று சுதந்திர நாடாக அமைவதுதானே முக்கியம். சுந்தரபாண்டியா! உன்னிடம் எனக்கொரு வேண்டுகோளும் இருக்கிறது."

''வேண்டுகோள் எதற்கு ராஜேந்திரா? உத்தரவிடு! உடனே நிறைவேற்றுகிறேன்" என்ற சுந்தரபாண்டியனின் முகத்தில் மந்தகாசம் விரிந்து கிடந்தது.

திரும்பி ஆதித்யனையும் பூங்கோதையையும் அணைத்தபடி சுந்தர பாண்டியனை நோக்கிய ராஜேந்திரன், ''சுந்தரபாண்டியா, பூங்கோதை எங்கள் சோழர் குலக்கொடி. சோழ வம்சத்தின் ஒரே வாரிசு. எனக்குப் பின் சோழ அரியணையில் ஆதித்யனும் பட்டத்தரசியாக பூங்கோதையும் அமர வேண்டும்" என்றான் நெகிழ்ந்த குரலில்.

சுந்தரபாண்டியனின் பதில் நிதானமாக வந்தது. "உன் விருப்பப்படியே நடக்கும் ராஜேந்திரா. இந்தக் கணம் முதல் அவள் கொங்கு நாட்டின் ராணியாக இருப்பாள். நீ விரும்பும் பொழுது சோழ நாட்டின் அரியணையிலும் வந்து அமர்வாள். இனி வாழ்நாள் முழுவதும் அவள் அரசியாகவே வாழ்வாள். அவர்களின் இந்த இணைப்பு இனி தமிழ் மக்களுக்கு அமைதியான, சுதந்திர வாழ்வை அளிக்கும்."

சோழ ராஜேந்திரன் பெரு விழிகளில் உணர்ச்சிகள் பொங்கிக் கிடந்தன. அடுத்து ஒலித்த அவன் குரலிலும் அது நிரம்பிக் கிடந்தது. "சுந்தர பாண்டியா, மன்னர்களின் ஒற்றுமையே மக்களின் நலவாழ்வு என்பதை நிரூபித்த உன்னைத் தமிழகம் மறக்காது. சோழ வம்சமும் மறக்காது. பொக்கிஷங்களை மீட்டு அளித்ததால் இந்த ஆலயங்களும் உன்னை மறக்காது. எத்தனை மன்னர்கள் இனி வந்தாலும் தமிழகம் இருக்கும் வரை உன் பெயரும், உன் குலப் பெயரும் மறையவே மறையாது."

அரங்கனது ஆலயத்தில் சுந்தரபாண்டியனை சோழ மன்னன் மனதார வாழ்த்திக் கூறிய அந்த வார்த்தைகள் வேதவாக்காக ஒலித்தன.

வங்கக் கடலிலிருந்து உதயமான சித்திரைத் திங்களின் தங்க நிலவு, கடலின் அலைகளைப் பொன்னிறமாக அடித்துக் கொண்டிருந்தது. பொன்னிறத்தைப் பெற்றாலும் மகிழ்ச்சியைக் காட்டாத அலைகள் உருண்டு உருண்டு துறைமுகத்தில் நின்ற அந்தப் பெரும் சீனத்துக் கலத்தைத் தாக்கி, தமிழகத்தை விட்டுச் செல்ல வேண்டாமென சோகத்துடன் தடுக்க முயன்று கொண்டிருந்தன. அந்தச் சீனத்து மரக்கலத்தில் பாய்மரச் சீலையில் தீட்டப்பட்டிருந்த பெரும் கடல் நாகம், படபடத்து அலைகளைச் சமாதானப்படுத்த முயன்று கொண்டிருந்தது. ஆனால் கரையில் நின்று அந்தக் கலத்தை வெறித்துக் கொண்டிருந்தவர்கள் எந்த சமாதானத்திற்கும் இணங்குவதாகத் தெரியவில்லை.

கரையில் நின்றிருந்த யாங்சின்னையும், யுவானையும், ஸ்வர்ணமுகியையும் கண்ட ஆதித்யனுக்கும் பூங்கோதைக்கும் மனம் கனத்துக் கிடந்தது. பாண்டிய மன்னனும் இளையபாண்டியனும் கூட நெகிழ்ந்து கிடந்த மனத்துடன் பேச வார்த்தைகளின்றி நின்றிருந்தனர். கிருஷ்ணமல்லர் சலித்துக் கொண்டார். "என்ன பிரிவு இது? என்னையே மனம் தளர



அருள்வாக்கு

வெறும் ரீஸன் என்று மட்டும் எடுத்துக்கொண்டால் அதற்குப் பொருந்தாத அனேக விஷயங்களை எவருமே பண்ணத்தான் வேண்டியிருக்கிறது; அப்போதுதான் நம்முடைய லக்ஷயத்தில் நமக்கு ஒரு ஆர்வத்தை, ஈடுபாட்டை எழுப்பி அதற்கு மற்றவர்களின் ஆதரவையும் திரட்டமுடிகிறது. இதற்குச் சின்னங்களும் காரியமும் இருந்தேயாக வேண்டியிருக்கிறது. இப்படி கறுப்பு–சிவப்பு அல்லது கதர் போட்டுக் கொண்டு கொடியையும் ஸ்லோகன் அட்டையையும் தூக்கிக் கொண்டு பாதயாத்ரை, ஸைகிள் ஊர்வலம், மாட்டு வண்டி ஊர்வலம் என்று நடக்கும் போது இதில் பகுத்தறிவுக்குச் சேராத எத்தனை விஷயம் இருக்கிறது என்று பார்ப்பதில்லை. அதுவே பஞ்சகச்சம், பரிவட்டம், ஜால்ரா, நாமகீர்த்தனம் என்று பஜனை கோஷ்டி போனால் பரிஹாஸமாகிறது. பொலிடிகல் இன்டரஸ்ட் (அரசியல் ஈடுபாடு) லேபர் இன்டரஸ்ட் என்பது போல இந்த லோகத்தை மட்டுமே சேர்ந்த விஷயங்களுக்காக இப்படி ரீஸனை விட்டு விட்டு, மண்ணெண்ணெயை கொட்டிக் கொளுத்தி கொண்டு உயிரை விடுகிற அளவுக்குப் போனால் martyr (தியாகி) பட்டம் கொடுக்கிறார்கள்; அதுவே சாச்வதமான தர்மத்துக்காக, மதத்துக்காக விட்டால் "ஸுபர்ஸ்டீஷியஸ், அசடு" என்று மட்டம் தட்டுகிறார்கள்!

"நாமே பெரியவர்கள்; நமக்கு status வேண்டும்; நாம் எதற்கும் கட்டுப்படக் கூடாது, இஷ்டப்படி பண்ண வேண்டும்; நம் புத்திக்குப் புரிவதற்கு மேலே எதுவும் கிடையாது; எதையும் ஒப்புக்கொள்ள முடியாது; புத்திக்குப் பொருந்தாமலே நாமே கூட அநேகம் பண்ணினாலும் பண்ணுவோம் – ஆனாலும் சாஸ்த்ரகாரர்கள் சொல்கிறார்களென்றால் அப்போது மாட்டோம்" என்று இந்த ரீதியில் பல பேரையும் நினைக்கும்படியாக்கி, இந்த லோகத்தில் நடைமுறை வாழ்க்கையிலும் ஒழுங்கு இல்லாமல், பரலோகத்துக்கும் வழியில்லாமல் ஒரேயடியாகக் குளறி வைத்திருப்பதுதான் ஆசாரங்களைக் கைவிட்டிருப்பதன் பலன்.

– ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ
சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய சுவாமிகள்.

வைக்கிறது!" என்று.

பெரும் புலிக்கொடி பறக்க சோழ மன்னன் ரதம் வந்து கொண்டிருந்தது. மணற்பரப்பை அடைந்ததும் கீழே குதித்த சோழ ராஜேந்திரன், நீண்ட பேழையொன்றைச் சுமந்து விஜயன் பின்தொடர படகை நெருங்கினான். "யாங்சின், இதைப் பெற்றுக் கொள்" என்றவன் அந்தப் பேழையை யாங்சின்னிடம் அளிக்கவும் செய்தான்.

"இந்திர தனுசு" என்று முழுவதும் பொன்னால் பொறிக்கப்பட்ட பேழையைத் திறந்த யாங்சின்னின் விழிகள் விரிந்தன. அவனது சீனத்து விசித்திர வில்லைப் போலவே பொன்னால் வடிவமைக்கப்பட்ட வில் ஒன்று உள்ளே மின்னியது.

ராஜேந்திரனின் குரல் ஒலித்தது : "யாங்சின், இளவல்களையும், இளவரசியையும் அபாயத்திலிருந்து மீட்ட உனது வில்தான் உண்மையில் இந்திரனின் தனுசு. அதன் அடையாளமாகவே இதை அளிக்கிறேன். நீயும் உன் மகன் யுவானும் செய்திருக்கும் சேவைக்கு இந்திர தனுசோ, அல்லது நானும் பாண்டிய மன்னரும் கலங்களில் அனுப்பியிருக்கும் பரிசுகளோ ஈடாகாது."

சுந்தரபாண்டியனின் குரல் தொடர்ந்தது. "யாங்சின், நீ கேட்டுக் கொண்டபடி தமிழகத்துச் சிற்பிகளை நான்கு கலங்களில் உன்னுடன் அனுப்பியிருக்கிறேன். அதைவிட எங்கள் மனங்களையும், அதன் அன்பான நினைவுகளையும் உன்னுடன் பரிசுகளாக அனுப்புகிறோம். பாதுகாத்துக் கொள்."

ஆதித்யனையும் விஜயனையும் ஒருமுறை தழுவிக் கொண்ட யுவான், யாங்சின்னுடன் சேர்ந்து சீனத்துப் பாணியில் அனைவரையும் வணங்கி நிமிர்ந்தான். மூவரும் படகில் ஏறிக் கொள்ள படகும் கலத்தை நோக்கி நகர்ந்தது.

சற்றுக் கழித்து கலங்களும் நகர்ந்தன. நகர்ந்த கலங்கள் மெள்ள மெள்ள பார்வையிலிருந்தும் மறைந்தன. ஆனால் கரையிலிருந்தவர்களின் மனங்களை விட்டு யாங்சின்னும், யுவானும், ஸ்வர்ணமுகியும் இறுதிவரை மறையவே இல்லை.

(முற்றும்)

எழுத்தாளரின் கதைகளைத் தீவிரமாக விமர்சிப்பதிலிருந்து, தம்முடைய அப்பா, அம்மா, தங்கைகள் என்று தமது குடும்பத்தை அந்த எழுத்தாளருக்குக் கடிதத்திலேயே அறிமுகம் செய்தார் அந்த மாணவி. 'சென்னையிலிருந்து நான்கு மணி நேரத்தில் விழுப்புரம் வந்துவிடலாம், வாயேன்' என்று அன்பு அழைப்பு விடுத்தார் எழுத்தாளர்.

ஒருநாள் விழுப்புரத்துக்குச் சென்று எழுத்தாளரைப் பார்த்தவுடன், மனத்தில் கிட்டத்தட்ட பூரண நிலை பெற இருந்த அந்த 'அம்மா' உருவகம் முழுமையாயிற்று. "அம்மா...." - வாய் நிறைய அழைத்து மகிழ்ந்தார் அந்த மாணவி.

'அது சரி. அவுங்களை அம்மான்னு கூப்பிட்டா என்னை எப்படி கூப்பிடுவே...?' - கேட்டது எழுத்தாளரின் கணவர்.

'அவுங்க அம்மாவென்றால்... நீங்க எனக்கு அப்பா!' என்றார் அந்த

**எஸ்**.ஐ.இ.டி.யில், பி.எஸ்ஸி., படித்துக் கொண்டிருந்த அந்த மாணவிக்கு, கதைகள், கவிதைகள் மீது ஆர்வம் அதிகம். குறிப்பாக ஒரு பெண் எழுத்தாளரின் கதைகளை மிகவும் விரும்பிப் படிப்பார். அந்த எழுத்துக்களைப் படிக்கும்போது, ஓர் இனம்புரியாத பாச உணர்வு, அந்த எழுத்தாளரின் மேல் உண்டாயிற்று அந்த மாணவிக்கு. அந்த உணர்வு "அம்மா" என்ற உருவகமாக மாறியது. "கடிதம் போட்டாலென்ன?" என்ற சிந்தனையின் விளைவாக, பத்திரிகை ஆபீஸில் முகவரி வாங்கி, 'அன்புள்ள அம்மா...' என்று துவங்கிக் கடிதம் எழுதியவுடன், உடனடியாக பதில் வந்தது. கடிதப் போக்குவரத்து துவங்கியது.

# சிவசங்கரியின் மகளான வாசகி!

மாணவி. எந்தவிதத் தயக்கமும் இல்லாமல். எழுத்தாளர் - சிவசங்கரி. அந்த மாணவி - லலிதா.

இது நடந்தது 1977-ம் ஆண்டு. அதன் பிறகு கிட்டத்தட்ட ஏழு வருடங்கள் கழித்து எழுத்தாளரிடமிருந்து வந்த கடிதத்தின் ் டிவில் அந்த மகிழ்ச்சிதரத்தக்க அதிர்ச்சி இருந்தது. 'அன்புடன்... அம்மா' என்று அந்தக் கடிதம் முடிக்கப்பட்டிருந்தது. இப்போது வெளியுலகத்துக்கு எழுத்தாளர் சிவசங்கரியின் செயலாளராக லலிதா காட்சியளித்தாலும் இரு வருக்குள்ளும் இருக்கிற மகள் - அம்மா பாச உணர்வை, தெரிந்தவர்கள் மட்டுமே உணர முடியும்.

"அவரது எந்தக் கதை என்னைக் கவர்ந்தது என்று கேட்டால் எனக்குக் குறிப்பிட்டுச் சொல்லத் தெரியாது. பொதுவாகவே, அவரது எல்லா எழுத்துமே என்னை அவருடன் கட்டிப் போட்டு விட்டது என்றுதான் சொல்ல வேண்டும். பல எழுத்தாளர்கள் எழுத்து வேறு; வாழ்க்கை வேறு என்றிருப்பார்கள். ஆனால் சிவசங்கரி அவர்கள் அப்படி கிடையாது. எழுத்தில் போதிக்கும் நியாயங்களை, தர்மங்களை வாழ்க்கையிலும் கடைப்பிடிப் பவர். அவர் ஒரு perfectionist" என்று மனம் நிறைந்து சொல்கிறார் லலிதா.

சிவசங்கரியின் அறிமுகத்துக்குப் பிறகு தான் லலிதாவுக்குக் கல்யாணம் நடந்தது. கணவர் வெங்கடேசனும், மனைவியைப் போன்று திருமதி சிவசங்கரியையும் அவரது கணவரையும் 'அம்மா, அப்பா' என்றுதான் அழைப்பார். அதேபோல் லலிதாவின் பெற்ற தாயார் கங்கா, அப்பா பாலசுப்பிரமணியம் ஆகியோரும் சிவசங்கரி குடும்பத்தின் மீது, மகள் வைத்திருக்கும் பாச உணர்வைக் கண்டு பெருமைப்படுபவர்கள். லலிதாவின் குடும்பத் தில் ஏதேனும் விசேஷம் இருந்தால், தவறாமல் ஆஜராகி விடுவார் சிவசங்கரி.

"அம்மா (சிவசங்கரி) ஒரு அஷ்டாவதானி என்று சொல்லுவேன். எண்ணம் காற்றை விட விரைவாக இருக்கும். வீடு சுத்தமாக இருக்க வேண்டும் என்று சொல்லுவார். நேரந் தவ றாமை அவர் தவறாமல் கடைப்பிடிப்பது. 'ஒவ் வொருவரும் தன் கடமை, தன் குடும்பத்துக்கு செய்ய வேண்டிய கடமை ஆகியவற்றைச் செய்து விட்டுத்தான் மற்ற பணிகளுக்கோ, பொதுநலச் சேவைக்கோ வர வேண்டும்' என்று சொல்லுவார். வாசகர்களிடம் இருந்து கடிதம் வந்தால் உடனே பதில் சென்றாக வேண்டும். யாராவது அவரை ஏமாற்றினால் கூட, 'நம்ப வைத்த நம்பிக்கைக்குப் பாத்திரமாக அவர்க ளால் நடந்து கொள்ள முடியவில்லை' என்று சொல்லி ஆறுதல் அடைவார். இப்போதெல் லாம் சிலரது செயல்களில் perfection இல்லாத போது, கோபத்துக்கு பதில் வருத்தமே வருகிறது அவருக்கு. அவர் ஒரு உசந்த மனுஷி ஸார்."

சிவசங்கரியின் கதைகளை டைப் செய்து தருவதுடன் கடிதப் போக்குவரத்து, வங்கிக் கணக்கு ஆகியவற்றையும் கவனித்துக் கொள் கிறார் லலிதா. சென்னையில் எந்த நிகழ்ச்சியில் சிவசங்கரி கலந்து கொண்டாலும், கூடவே செல்கிறார். பத்திரிகைகளில் வரும் சிவசங்கரி யின் கதை, கட்டுரைகளை வெட்டியெடுத்துத் தொகுத்து பைண்ட் செய்வது, பின்னர் வெளியீட்டாளர்களிடம் கொடுப்பது என்றும் அவரது பணி நீள்கிறது.

"அப்பாவுக்கு (சிவசங்கரியின் கணவர்) உடம்பு சரியில்லாமல் அப்போலோவில் நான் கைந்து மாதங்கள் சிகிச்சை பெற்றார். பின்னர் சிகிச்சை பலனிக்காமல் இறந்து போனார். அந்தக் கட்டத்தில் நானும் என் கணவரும் பெரும்பாலும் ஆஸ்பத்திரியில் அம்மா வுடன்தான் இருப்போம். அப்பா காலமான பிறகு, இந்து சாஸ்த்திரங்களுக்கு ஏற்ப ஒரு மகள் செய்யும் சில அந்திமக் கடமைகளை அப்பாவுக்காக நான் செய்தேன்!" என்கிறார் லலிதா.

சந்திப்பு : **ப்ரியன்**

வண்ணப்படம் : **பேஜர் கே. மூர்த்தி**

# ரிலாக்ஸ்



''நீங்க ஏன் அந்தம்மாவுக்கு அளித்த ஆதரவை வாபஸ் வாங்கினீங்க?''

''கட்சித் தலைவராக இருந்து என்னத்தை வாங்கினீங்க... என்னத்த வாங்கினீங்கன்னு என் மனைவி தொண தொணத்ததுக்காக ஏதோ என்னால முடிஞ்சதை வாங்கினேங்க...''



''பத்திரிகைகளில் வரும் எல்லாவற்றையும் உண்மை என்று நம்பாதீர்கள்னு அறிக்கை குடுத்தது தப்பாயிடுச்சு, மேடம்.''

''என்னாச்சு?''

''நம்ம அறிக்கையை உண்மைன்னு நம்ப மறுக்கறாங்க...''



''இது நம்ம ஆட்சியிலா நடந்தது? இது நம்ம ஆட்சியிலா நடந்ததுன்னு தலைவி புலம்பிக்கிட்டு இருக்காங்களே... ஏன்? என்ன விசயம்?''

''அஞ்சு வருச ஆட்சியில ஏதோ ஒரு நல்ல திட்டம் நடந்ததை தலைவியால கூட நம்ப முடியலையாம்... அதான்.''

# ப்ளீஸ்...



''எங்கள் தலைவரைக் கைது செய்தால்...''

''என்னய்யா செய்வீங்க... என்ன செய்வீங்கன்னு கேக்குறேன்?''

''ஹி ஹி... ஜெயிலில் வந்து பார்த்து பழம்கொடுத்துட்டுப் போவோம்...''



''புதுசா ஒரு 'ஃபாரின் பேனா' வாங்கிக் குடுத்தேனே, நல்லா எழுதுதா மாப்பிள்ளை?!''

''அது எங்கே எழுதுது... அதை வெச்சு நான்தான் எழுதுறேன்....''



''வோட்டு கேட்கப் போன அந்த வேட்பாளர், பயங்கர டென்ஷனாகி பாதியிலேயே திரும்பி வந்துட்டாரே ஏன்?''

'' 'அதைச் செய்வேன் இதைச் செய்வேன்னு சொல்றீங்களே, எங்க வீட்டு ரேஷன் கார்டை எடுத்துக்கிட்டுப் போய் கிருஷ்ணாயில் வாங்கிட்டு வந்து தர்றீங்களா'ன்னு யாரோ ஒரு பொம்பளை அவர்கிட்டே கேட்டாங்களாம்...!''

பழ. சேதுராமன், ஜெயாப்ரியன்



• ஸ்டாக்ஹோம்

# தண்ணீர் தேசங்களில் ஒரு பயணம்!

● "விஸ்கி, ஒயின் எதுவுமே சாப்பிட மாட்டீர்களா? அசைவம் கூடத் தள்ளுபடியா? அப்படியானால் எதற்காக ஸ்காண்டிநேவியா வந்தீர்கள்?" – டென்மார்க், நார்வே, ஸ்வீடன், ஃபின்லாந்து – இந்த நான்கு நாடுகளிலும் நான்கு வாரங்கள் சுற்றியபோது, நானூறு முறைக்கு மேல் எங்களிடம் கேட்கப்பட்ட கேள்வி இது.

● "ஸ்மார்காஸ்போர்டு" எனப்படும் பஃபே உணவுமுறை ஸ்காண்டிநேவியாவில் மிகப் பிரசித்தம். அதன் முக்கிய ஐட்டங்கள் - ரெயின்டீர், எல்க் போன்ற மான்களின் மாமிசம், 'சா(ல்)மன்' என்றழைக்கப்படும் மீன்... என்று ஒரே அசைவ அமர்க்களம்தான்.

● நார்வேயின் தலைநகரான ஆஸ்லோவிலிருந்து, பெர்கன் என்ற ஊருக்கு இரவுப் பயணம் செய்தபோது, டிரெயினில் டின்னருக்குக் 'கேவியர்' என்பதையும் சேர்த்துக் கொடுத்தார்கள். அதைத் திருப்பிக் கொடுத்துவிட்டு 'சீஸ்' துண்டுகளையும் முட்டைகோஸ் இலைகளையும் பெற்றுக் கொண்டதை இங்கே நண்பர்களிடம் சொன்னபோது, தலையில் அடித்துக் கொண்டார்கள். "சா(ல்)மன் மீனின் முட்டையான அந்தக் 'கேவியர்' என்ன விலை தெரியுமா? பத்து கிராம் எடையுள்ள கேவியரே மூவாயிரம் ரூபாய்! உங்களுக்கு வேண்டாமென்றால் இங்கேயாவது கொண்டு கொடுத்திருக்கக் கூடாதா?"

● பின்லாந்தின் தலைநகரான ஹெல்சிங்கி, நார்வேயின் கடற்கரை நகரான பெர்கன் - எல்லா - ஊர்களிலும் காலை நேரச் சந்தைகள் அன்றாட அற்புதங்கள் தான். அப்போதுதான் பிடித்து வரப்படும் மீன்கள் ஐஸ்கட்டிகளில் அழகாக அடுக்கப்பட்டிருக்கும். படகுகளிலேயே வந்து வியாபாரம் செய்பவர்களும் உண்டு. காய்கறிகள், பழவகைகள், மலர்க் கொத்துகள், கைவினைப் பொருட்கள் என்று பொருள்களை விற்கும் சின்னச் சின்னக் கடைகள் முளைத்து விடும். மாலை ஐந்து மணிக்கு அத்தனை கடைகளும் (நடமாடும் ரகம்தான்) மூட்டை கட்டிவிட, டிராக்டர் போலிருக்கும் இயந்திரம் ஒன்று அவை இருந்த இடத்தில் தண்ணீர் தெளித்துத் துடைத்து விட்டு விடும்! மெலிதான மீன்வாசனையைத் தவிர கடைகள் இருந்த சுவடே தெரியாது. இந்தச் சின்னச் சின்னக் கடைகளில் கூட "அமெரிக்கன் டாலர், ஜெர்மானிய மார்க், இங்கிலாந்து பவுண்டு ஏற்றுக் கொள்ளப்படுகிறது!

●பயணச்சீட்டுகளிலிருந்து எல்லா விஷயங்களிலும் வயதானவர்களுக்கும், உடல் ஊனமுற்றவர்களுக்கும் சலுகை என்பதால், படகு, பஸ், டிராம் எல்லாப் பயணங்களிலும், ஊன்றுகோல் உதவியுடனோ, சக்கர நாற்காலிகளின் துணையுடனோ பலரைப் பார்க்கலாம்.

● பார்வையற்றவர்களின் நலனிலும் மிகுந்த அக்கறை கொண்டிருக்கிறார்கள். ஸ்வீடனில் உள்ள 'லூண்ட்' என்ற ஊரின் சர்ச்சைப் பார்வையுள்ளவர்களால் பார்க்க முடியும்! பார்வையற்றவர்கள் என்ன செய்வார்கள்? அவர்கள் தடவிப் பார்த்து உணர்ந்து கொள்ள வசதியாக சிறிய அளவிலான சர்ச் மாடல் ஒன்றைச் செய்து வைத்திருக்கிறார்கள்.

● கோபன்ஹேகன் நகர அருங்காட்சியகத்திலும், 'லாப்லாந்து' மக்களின் வாழ்க்கையைச் சித்திரிக்கும் பிரிவில், அனைத்தையும் பார்வையற்றவர்கள் தடவிப் பார்த்துத் தெரிந்து கொள்ள வசதியாக மாடல்கள் செய்து

வைத்திருக்கிறார்கள்.

"ஆனால் பார்வையற்றவர்கள் தொடும் போது உள்ள மென்மை, மற்ற சாதாரண மனிதர்களில் பெரும்பாலனவர்களுக்குக் கிடையாது. இதோ பாருங்கள், முரட்டுத்தன மாகத் தடவியதால் இந்த முரசின் தோலே கிழிந்து விட்டது" என்று வருத்தப் பட்டுக் கொண்டார், அந்தப் பிரிவின் மேலாளர். ஆயிரம் வயதைத் தாண்டிய முரசாம் அது!

● நார்வேயின் 'fjords' எனப்படும் தண்ணீர் வழிகள் உலகப் பிரசித்தம்.

• பெர்கன் நகரின் மீன் மார்க்கெட்...





● நெடிதுயர்ந்த மலைச் சிக ரங்களிலிருந்து பனியுருகி நதியாக ஓடிக் கடலில் கலக்கும் காட்சி பிரமிக்க வைக்கும் அழகு.

● ஸ்வீடன் தலைநகரான ஸ்டாக்ஹோம், 'மேலை நாடுகளின் வெனிஸ்' என்று புகழப்படும் ஏரிகளும் வாய்க்கால்களும் நிறைந்த நகரம். ஸ்டாக்ஹோமுக்கும், ஹெல்சிங்கிக்கும் இடையே சென்றுவரும் சொகுசுக் கப்பல்கள் சுற்றுலாப் பயணிகளின் சொர்க்கம். 13 மாடிகளை கொண்ட கப்பல்களும் உண்டு. கடை வீதி போன்றே இருபுறமும் கடைகள், ஹோட்டல்கள், நீச்சல்குளம் என்று ஒரு சின்ன நகரமாகவே இயங்குகின்றன இந்தக் கப்பல்கள்.

● எங்கும் தண்ணீர் என்பதால் பெரும்பாலான குடும்பங்கள் கார்களைப் போலவே படகுகளும் வாங்கி வைத்திருக்கிறார்கள். வெள்ளிக் கிழமையானால் உணவுப் பொருட்களை ஏற்றிக் கொண்டு குடும்பத்தாருடன் பக்கத்து நகரங்களுக்குப் படகில் ஜாலி டிரிப்தான். சனி, ஞாயிறுகளில் இப்படி நகரக் கரை ஓரங்களில் படகு நிறுத்தி வைக்க வசூலிக்கப்படும் கட்டணமே அந்த நகராட்சிக்குக் கணிசமான வருமானமாம்! நம்மூர் ஆட்டோ ஸ்டாண்ட் போல, அங்கே படகு ஸ்டாண்ட்!

● ஆஸ்லோவில் உள்ள 'கான்டிக்கி' அருங்காட்சியகத்தில் அந்தக் காலத்தில் 'பாபிரஸ்' என்ற நாணலால் கட்டப்பட்ட படகுகள் காட்சிக்கு வைக்கப் பட்டுள்ளன.

● உலகின் தலை நகரங்களில் சாதாரணமாகக் காணப்படும் பரபரப்பு இங்கெல்லாம் மிஸ்ஸிங். ஹெர்சிங்கில் அடுக்கு மாடிக் குடியிருப்புகள் கூட அதிகமில்லை. எங்குமே பனிங்குப் பரப்புகளாய்த் தண்ணீர்த் திடல்களும், பசுமைக் கூட்டங்களால் அடர்ந்த மரங்களும் என்று இயற்கையின் அரசாட்சிதான்!



● டென்மார்க் ராணியின் குடும்பம் கோபன்ஹேகனில் லூயி சோட் மியூசியத்தில் மெழுகுப் பொம்மை வடிவில். ராணி பொதுமக்களிடையே மிகவும் பிரபலம். பாதுகாப்புப் படை இல்லை, பந்தா இல்லை, சைக்கிளை எடுத்துக் கொண்டு சாதாரணமாக ஊர் சுற்றுவார் என்று பெருமைப்பட்டுக் கொள்கிறார்கள் டென்மார்க் வாசிகள்.

**- நிர்மலா சக்ரவர்த்தி**

## பார்வைக்கு வந்தவை....

● நோன்பு/நாகை கவின்/ராஜி புத்தக நிலையம், 20, பெருமாள் தெற்கு வீதி, நாகப்பட்டினம் - 1/விலை ரூ. 20.00

*வார, மாத இதழ்களில் வெளிவந்த, ஆசிரியரின் சிறுகதைகளின் தொகுப்பு.*

● பல்வேறு ரோஜாக்களைப் பயிரிடுவது எப்படி./முகவை மேத்தா/மணிமேகலைப் பிரசுரம், சென்னை - 17/விலை ரூ. 15.50

*தோட்டக்கலை ஆர்வமுன்னோருக்கு உபயோகமான நூல்.*

● இந்த..../புதுவை இளவேனில்/ இரத்தினம் வெளியீடு, 2/40. காந்தி நகர், திருச்சிற்றம்பலம் - 605 101/விலை ரூ. 5.00

*அம்மாவின் கோலம்*
*மழை வந்து கரைந்தது*
*பாவம் எறும்புகள்.*
*-- ஹைகூ கவிதைகள்.*

● பைந்தமிழ்ப் பூங்கா/ச. ஸ்ரீபால்/ திருமகள் நிலையம், சென்னை - 17/விலை ரூ. 24.00

*முன்னாள் காவல்துறை உயர் அதிகாரியின் தமிழ்த்துறை ஈடுபாட்டைக் காட்டும் கட்டுரைத் தொகுப்பு.*

● திருப்புகழ் - 108/திருப்புகழ் பதிப்பகம், 5, டாக்டர் பெசன்ட் சாலை, சென்னை - 5/விலை ரூ. 30.00

*அருணகிரி நாதரின் சந்தப் பாடல்களுக்கு எளிய தமிழில் விளக்க உரை.*

● காந்தியடிகளின் தெய்வீக சிந்தனைகள்/புத்தகப்பித்தன்/கங்கா - காவேரி வெளியீடு, 17-ஏ, காரியாங்குடி செட்டித் தெரு, வெளிப்பாளையம், நாகப்பட்டினம் - 1/ (விலை குறிப்பிடப்படவில்லை.)

*காந்திஜி சிந்தனைகளின் தொகுப்பு. தவிர, பாரதி, பக்கிம் சந்திரரின் சில பாடல்களும் உள்ளன.*

● ஐ.ஏ.எஸ் தேர்வும் அணுகு முறையும்/ வெ. இறையன்பு/தாகம், 11, சிவப்பிரகாசம் தெரு, பாண்டிபஜார், சென்னை - 17/விலை ரூ. 35.00

*ஐ.ஏ.எஸ் தேர்வு எழுதவிருப்போருக்கு உதவக்கூடிய வழிகாட்டி நூல். ஆசிரியர் ஓர் ஐ.ஏ.எஸ் அதிகாரி.*

● சித்திரைச்சுடர்/இரா. ஞானசேகரன்/ அறிவுக் கடல் பதிப்பகம், 406 பகுதி - I, சத்துவாச்சாரி, வேலூர் - 9/விலை ரூ. 15.00

*மரபுக்கவிதைகள் - மு. மேத்தா முன்னுரையுடன்.*

**ஒவ்வொரு வாரமும் ஒரு பிரபல எழுத்தாளரிடம் ஒரு புத்தகத்தைத் தந்து, சுருக்கமாகவும் சுவையாகவும் விமர்சனம் எழுதித் தரக் கேட்டுக் கொள்ளவிருக்கிறோம். ஆரம்பித்து வைப்பவர் சாவி:**

### 'படித்தேன்'

என்னிடம் தரப்பட்ட புத்தகத்தைப் படித்தேன். படித் தேனாக இனித்தது. அருங்கவி அரங்க சீனிவாசன் எழுதிய "மனித தெய்வம் காந்தி காதை."

'அதென்ன அருங்கவி?' என்று கேட்கலாம். அரங்க சீனிவாசன் பத்து வயது முதலே கவிஞர். பர்மாவில் பிறந்து, உலகப் போரின் போது நடந்தே இந்தியா வந்து குடியேறிய பலருள் ஒருவர். அருங்கவி என்றாலும் தமிழ் இலக்கண இலக்கியங்களை முறையாகக் கற்று, பன்மொழிப் புலமை பெற்றுத் தம்மை வளர்த்துக் கொண்டார்.

விளம்பரமில்லாத வித்தியாசமான இந்த கவிஞரை திருச்சியைச் சேர்ந்த காந்தி பக்தர் சுப்பராயுலு இனம் கண்டு கொண்டார். மகாத்மாகாந்தி தொடர்பான அனைத்து இடங்களுக்கும் தமது சொந்தச் செலவில் அழைத்துப் போனார். பிறகு காந்தி பற்றிய காவியம் எழுதும்படி ஊக்குவித்தார். விளைவு: 5500க்கும் மேற்பட்ட மரபுக் கவிதைகளில் "மகாத்மாவின் காதை"

"இது அவசரயுகம். உங்கள் மகாகாவியத்தை 1500 பாடல்களில் சுருக்கிக் கொடுங்கள்" என்று கேட்டுக் கொண்டார் தொழிலதிபர் பொள்ளாச்சி நா.மகாலிங்கம். "அதோடு உங்கள் வாழ்க்கை வரலாற்றையும் எழுதிக் கொடுங்கள்" என்றார்.

வானதி பதிப்பகத்தின் (சென்னை-17) பிரசுரமாக இரு நூல்களும் ஏ.வி.எம்.ராஜேஸ்வரி மண்டபத்தில் வெளியிடப்பட்டன. ஆனால் இந்த சிறப்பு மிக்க விழாவில் கலந்து கொள்ள அரங்க சீனிவாசன் உயிரோடு இல்லை என்பதுதான் சோகம்.

"மனித தெய்வம் காந்தி காதை" என்னை அசரவைத்து விட்டது. '1500 படித்தது போதாது; 5500 கவிதைகளையும் படித்து விட வேண்டும்?' என்ற ஆவலைத்

# படித்ததில் பிடித்தது!



• இரண்டாவது வட்டமேஜை மாநாட்டின் போது.....

தூண்டியது. புதுக்கவிதையின் வீச்சோடு காந்திஜியின் வாழ்க்கையை நேரடி கவிதைகளாகப் படிக்கும் போது நெகிழ்ச்சியாக உள்ளது. காந்தியையும் அரங்க சீனிவாசனையும் ஒரு சேர ரசிக்க முடிந்தது.

அரை நிர்வாண பக்கிரியாக லண்டன் வட்டமேஜை மாநாட்டுக்குப் போய் மண்டபத்தில் அண்ணல் நுழையும் காட்சி:

முண்டு கட்டினர் அரைமுழங்கால்வரை;
உடலில்
துண்டு போர்த்தினர்; தொடித்தலை
விழுத்தடி எடுத்தார்;
தொண்டு பட்டதம் அன்பர்கள் தொடர்
தர, மறுகில்
கண்டு யாவரும் கைதொழக் கால்மலர்
பதித்தார்.

இது ஒரு சோறு. பானை முழுக்க இப்படித்தான்.

'நினைவு அலைகள்' அரங்க சீனிவாசனின் சுயசரிதை. அது இன்னொரு படித்தேன்! பர்மாவில் பிறந்து வளர்ந்த காரணத்தால் பர்மாவின் ஒரு குறுக்கு வெட்டுத் தோற்றத்தையே எழுத்தால் வரைந்து காட்டியிருக்கிறார். சமீப காலத்தில் இப்படியொரு கட்டிப்போடும் உரைநடையில் நான் சிக்கியதில்லை.

ரூ. 90; ரூ. 50 தந்து இந்நூல்களைப் பலரும் வாங்க முடியாது போகலாம் என்பதால் பொள்ளாச்சி நா.மகாலிங்கம் பள்ளிக்கூடங்களுக்கு தமது சக்தி நிறுவனங்களின் அன்பளிப்பாக 500 பிரதிகள் வாங்கி விநியோகிக்கிறார். இதே போன்று பிற தொழிலதிபர்களும் இந்த நூல்களையும் பிற உயர்ரகமான நூல்களையும் வாங்கி பள்ளிகள், கல்லூரிகளுக்கு விநியோகித்தால் எவ்வளவு உன்னதமான சேவையாக அது இருக்கும்! மொத்தமாக வாங்குவதால் 25 சதம் 30 சதம் என்று விலையில் தள்ளுபடி செய்தும் பெறலாமே!

— சாவி



# இவர் ஒரு நாவல் எழுதினால் மூன்று லட்ச ரூபாய்!

உத்தரபிரதேசத்தில், அலிகாரை எடுத்துக் கொண்டால் பூட்டுக்குப் பிரபலம். பனாரஸ் பட்டுத் துணிகளுக்கு! மீரட் எதற்குப் பிரபலம்? மலிவு விலை ஹிந்தி கிரைம் நாவல்களுக்கு!

இங்குள்ள பிரதான மலிவு விலை கிரைம் பதிப்பகங்கள் மொத்தம் பத்துதான் என்றாலும்' அவற்றின் விற்பனை பதினைந்து கோடி ரூபாயைத் தொட்டு விட்டது. இந்தியாவின் ஒட்டுமொத்த கிரைம் நாவல் தேவையை மீரட்டே தீர்த்து வைக்கிறது!

வேத் பிரகாஷ் சர்மா! இவர்தான் இன்று ஹிந்தி கிரைம் நாவல்களின் நம்பர் ஒன். நம்மூரிலுள்ளவர்கள் எப்படி மாதம் ஒரு நாவல் என்று பல மாதாந்திர நாவல் பதிப்பகங்களுக்கு எழுதித் தள்ளுகிறார்களோ, அதேபோல் அவர் மீரட்டிலிருந்து மலிவு விலை கிரைம் நாவல்களை எழுதித் தள்ளுகிறார். 41 வயதான இந்த இளம் கிரைம் மன்னன் இதுவரை 135 நாவல்கள் எழுதியுள்ளார். தற்போதைய நிலவரப்படி அவர் ஒரு நாவலுக்கு வாங்கும் தொகை எவ்வளவு தெரியுமா? நெஞ்சைப் பிடித்துக் கொள்ளுங்கள். மூன்று லட்ச ரூபாய்!

அவரைக் கேட்டால் 'இது மிகவும் கம்மி' என்கிறார். காரணம் – இவரது 'வர்திவாலா குண்டா' (காக்கிச் சட்டை அணிந்த ரௌடி) என்ற நாவல் விற்ற பிரதிகளின் எண்ணிக்கை பத்து லட்சம்! அதன் மூலம் பதிப்பகத்தார் அடித்த லாபம் இரண்டு கோடி ரூபாய்!

இவரைத் தொடர்ந்து இரண்டாம் நிலை, மூன்றாம் நிலை கிரைம் எழுத்தாளர்களும் இருக்கிறார்கள். சுரேந்திர மோகன் பாடக் என்பவர் ஒரு நாவலுக்கு ஒன்றரை லட்ச ரூபாய் வாங்குகிறார். இதில் உள்ள அதிசயம் என்னவென்றால் அவர்களும் மீரட்டில்தான் இருக்கிறார்கள். ஏன் இப்படி என்று கேட்டால் அவர்கள் வைத்திருக்கும் ஒரே பதில், "மீரத் கி மிட்டி சே பூச்சோ!" (இந்த மீரத்தின் மண்ணைக் கேளுங்கள்)

கிரைம் நாவல் எழுத்தாளர்களும் சமூகப் பிரக்ஞையோடு எழுதும் எழுத்தாளர்களும் கூட்டாகச் சேர்ந்து நடத்தும் பதிப்பகங்களும் நல்ல லாபம் சம்பாதித்து வருகின்றன.

ஆனாலும் 'பிரச்னைகள் இல்லாமல் இல்லை. கொழுத்த லாபத்தை மனத்தில் கொண்டு பல டூப்ளிகேட் ஆசாமிகள் இவர்கள் பெயரிலேயே (கவர்ச்சியான அட்டைப் படத்தோடு) எழுதி லாபம் சம்பாதிக்கிறார்கள். இதனால் பிரபல எழுத்தாளர்களுக்கான லாபம் ஒன்றும் குறைவதில்லை என்பதால் இதை யாரும் கண்டுகொள்வதாகவும் இல்லை!

- அனுராஜன்

பாதன் அச்சகத்தில் அச்சிட்டவர் : வி. முரளி, பாரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் : கி. ராஜேந்திரன்.
ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி : ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்குலேஷன் மானேஜர் : 2345623; சந்தா, விளம்பரம் : 2345622; மானேஜிங் டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் : ரூ. 525/-.

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / MS (S) M4392 * Licensed to post without prepayment under PMG's Licence No. TN / MS/ (S) 161 * Registered as a Newspaper in Srilanka